திருக்கோயில்கள் வழிகாட்டி



# கடலூர் மாவட்ட
# திருக்கோயில்கள் வழிகாட்டி



தமிழ்நாடு அரசு
இந்து சமய அறநிலையத் துறை வெளியீடு

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 2015 |
| முன் அட்டை | : | அருள்மிகு பாலாம்பிகை, விருத்தாம்பிகை உடனுறை விருத்தகிரீஸ்வரர் சுவாமி விருத்தாசலம். |
| பின் அட்டை | : | திருவருட்பிரகாச வள்ளலார், வடலூர். |
| உள் அட்டை | : | அருள்மிகு பெரியநாயகி சமேத பாடலீஸ்வரர், திருப்பாதிரிப்புலியூர், கடலூர். |
| பக்கங்கள் | : | 238 |
| நூலின் அளவு | : | 8.5" X 5.5" |
| தாளின் தரம் | : | 100 gsm ஆர்ட் பேப்பர் |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ முருகன் அச்சகம், கடலூர்-2. |
| விலை | : | ரூ.100/- |
| பதிப்பு உரிமை | : | இந்து சமய அறநிலையத்துறை தமிழ்நாடு அரசு |

## அமைதி! வளம்! வளர்ச்சி!



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

புரட்சித்தலைவி **அம்மா** அவர்கள்

ஆர்.காமராஜ்
உணவு , இந்துசமயம் மற்றும்
அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

## வாழ்த்துச் செய்தி

“மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்’’ என்ற வைரவரிகளுக்கு இலக்கணமாக தமிழகத்தை தனிப்பெருந் தன்மையோடு ஆட்சி செய்து கொண்டிருக்கும் தெய்வத்தாய் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் பொற்கால ஆட்சிக் காலத்தில் கடலூர் மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் வெளியிடுவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றேன்.

கடலூர் மாவட்டத்தில் சைவ, வைணவ திருக்கோயில்கள் பல அமைந்துள்ளன. அத்திருக்கோயில்களுக்கு **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் இதய தெய்வம் புரட்சித்தலைவி அம்மா** அவர்களின் ஆட்சிக் காலத்தில் பல்வேறு திருப்பணிகள் செய்யப்பட்டு பொலிவுடன் காணப்படுகின்றன. இத்தகைய திருக்கோயில்களை கண்டு களிப்பதற்கு இம்மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூல் மிகுந்த பயன் உள்ளதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

தொண்டைநாடு என்று போற்றப்படும் கடலூர் மாவட்டத்தில் அருளாளர்கள் பலர் அவதரித்துள்ளனர். ‘‘தொண்டை நாடு சான்றோர் உடைத்து’’ என்னும் முதுமொழியால் இதனை அறியலாம். இத்தகைய அருளாளர்களின் அவதாரத் தலங்களை சென்று தரிசிப்பதற்கும் இவ்வழிகாட்டி நூல் மிகவும் பேருதவியாக இருக்கும்.

‘‘திருக்கோயில்கள் நம் பண்பாட்டின் கலைக் களஞ்சியங்களாக’’ விளங்குகின்றன. திருக்கோயில்களில் காணப்படும் கலைநயமிக்க சிற்பங்களை படத்தொகுப்பின் மூலம் பதிக்கப்பட்டுள்ளது கண்டு இன்புறத் தக்கதாகும். இத்தகைய சிறப்பு வாய்ந்த கடலூர் மாவட்ட திருக்கோயில்கள் வழிகாட்டி நூலை மிகவும் நேர்த்தியான முறையில் உருவாக்கிய அனைத்து நல் உள்ளங்களுக்கும் எனது மனமார்ந்த வாழ்த்துகளையும், பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

(ஆர்.காமராஜ்)

**முனைவர் ரா. கண்ணன்,** இ.ஆ.ப.,
அரசு கூடுதல் தலைமைச் செயலாளர்



சுற்றுலா, பண்பாடு மற்றும்
அறநிலையங்கள் துறை,
தலைமைச் செயலகம்,
சென்னை – 9.
தொலைபேசி 044–25670820

## வாழ்த்துரை

தமிழ்நாட்டிலுள்ள திருக்கோயில்களைப் பற்றிய வரலாறுகளை மாவட்ட வரிசையாக எழுதி வெளியிடுவது காலத்தின் தேவையாகவுள்ளது. இதனை ஆன்மீக அன்பர்கள் பெரிதும் எதிர்நோக்கியுள்ளனர். தமிழக நாகரிகம் திருக்கோயில் நாகரிகமே.

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்"
திருக்கோவிலில்லாத திருவிலூர்"
...... "ஊரல்ல அடவி காடே"

என்னும் கருத்தாழம் தமிழக மக்களிடையே அழுந்தி உள்ளது. வாழ்க்கைச் சூழல் மற்றும் கால வளர்ச்சியில் பல்வேறு சிக்கல்களை எதிர்கொள்ளத் துணியும்போது ஏற்படும் மனச்சலனங்கள் ஆன்மீகத் தேடல்களை அதிகரித்துள்ளன. பாடல் பெற்ற தலங்கள், பரிகாரத் தலங்கள், மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருக்கோயில்கள், இராசித் தலங்கள் என மக்கள் தங்களின் தேவைகளுக்கேற்ற திருத்தலங்களை நோக்கிப் பயணிக்கத் தொடங்கியுள்ளனர்.

ஒரு கோவிலைப் பார்க்கும் போது அதில் உள்ள கல் சிற்பங்கள், மரச்சிற்பங்கள் மற்றும் பண்டை ஓவியங்கள் (murals) அக்கோயிலின் தல வரலாற்றை எடுத்துரைக்க அங்கே எவரும் இலர். பல கோயில்களில் இராமாயணம், மகாபாரதம், திருவிளையாடல் புராணம் போன்ற காப்பியங்களில் வரும் புராண வரலாற்றுக் காலத்தில், இறைவன் நடத்திய திருவிளையாடல்கள் காட்சிப்படுத்துவதன் மூலம் எடுத்துரைக்கப்படுகின்றன. உதாரணமாகத் திருப்புடைமருதூர் இராஜகோபுர ஓவியங்கள், திருக்குற்றாலச் சித்ரசபை ஓவியங்கள் போன்றவை. ஆதலால், அதிகார பூர்வமாக வெளியிடப்படும் இவ்வழிகாட்டி நூல் செல்லும் கோயில்களைப் பற்றி அறிவதற்கு இன்றியமையாததாக இருக்கிறது.

மேலும் வெளிநாட்டு உள்நாட்டுச் சுற்றுலாப் பயணிகள், குறிப்பாக இந்து மதத்தின் மீதும் இந்தியாவின் பண்டைய கலாசாரத்தை அறியவும் தங்கள் பயணத் திட்டங்களை வகுக்கவும் இவ்வழிகாட்டி நூல் நல்ல உறுதுணையாக அமையும்.

மாவட்டந்தோறும் இவ்வழிகாட்டி நூல்கள் இந்து சமய அறநிலையத்துறையினரால் வெளியிடபட்டமைக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்கள். எல்லா மாவட்டங்களையும் அடக்கிய மாநில அளவிலான ஒரு வழிகாட்டி நூலையும், மாவட்ட நூல்களைச் சுருக்கி வெளியிட வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு வாழ்த்துகிறேன்.

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்பது அவ்வைப் பிராட்டியாரின் நல்லுரையாகும். அறம்காத்த பண்டைத் தமிழ் மன்னர்கள் அறச்சின்னங்களாக ஆலயங்களை எழுப்பி, தத்தம் இயல்பிற்கேற்றவாறு பொன்னும் பொருளும் வழங்கி அவைகளைப் பண்புக் களஞ்சியங்களாக உருவாக்கி வைத்துள்ளனர். அண்டை நாட்டார் வந்து வியந்து போற்றும் கவின்கலைச் சிற்பங்களையும், ஓவியக் கலைகளையும் ஒவ்வொருவரும் கண்டு பேறுவகை கொள்ள வேண்டிய ஒன்றாகும். திருக்கோவிலின் தொன்மை கருதி மாவட்டந்தோறும் உள்ள திருக்கோயில்களுக்குச் சென்று கண்ணாரக் கண்டு, நெருக்குருக நின்று, நினைந்தேத்தி வழிபட ஏதுவாக மாவட்டக் கையேடு தலவரலாற்றோடு வெளியிடுவது பக்தர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாகும்.

இக்கையேடு வெளியிடுவதற்குத் தலவரலாறு முதல் அப்பகுதி திருக்கோயில்களின் தனிச்சிறப்புகள் வரை கொடுத்துதவி, மாவட்டந்தோறும் இந்நூல் வெளியிட உறுதுணை புரிந்த அத்துணை அன்பர்களுக்கும் வாழ்த்துக்கள்.

ரா கண்ணன்
28/03/2014

( முனைவர் ரா. கண்ணன் )

முனைவர்.மா.வீர சண்முக மணி, இ.ஆ.ப
ஆணையர்
இந்து சமய அறநிலையத்துறை



119, உத்தமர் காந்தி சாலை,
நுங்கம்பாக்கம், சென்னை–600 034.
அலுவலகம்: 044–2833 4815
நிகரி : 044 – 2833 4816
மின்னஞ்சல்: tn.endowments@tnhrce.org

## வாழ்த்துரை

கர்ம மார்க்கம், பக்தி மார்க்கம், ஞானமார்க்கம் என்ற மூன்றினில் பக்தி மார்க்கம் ஒன்றே வெகு எளிதாக யாவராலும் பின்பற்றக் கூடியது. உலக வாழ்க்கையில் நமக்குத் தேவையான ஆயுள், ஆரோக்கியம், மன அமைதி இவற்றை அளிப்பதோடு மீண்டும் பிறவாப் பேறு எளிதில் அளிக்க வல்லது பக்தி மார்க்கம். இதில் அவரவர் வாழ்வியல் வேட்கையினால் அவர் அடைந்த பாவ புண்ணியத்தை எளிதில் கணக்கிட இயலாது. தன்னால் காண இயலாத வாழ்வின் சூக்குமங்களை உணரவும், புண்ணியங்களைத் தேடி புனிததலங்களை நாடவேண்டிய கட்டாயமும் ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டுள்ளது.

அரிதரிது மானிடராய் பிறத்தலரிது என்பதற்கிணங்க எடுத்த பிறவியை பயனுள்ளதாக்கிக் கொள்ள வேண்டும். அதற்கான தேடல்களை உருவாக்க வேண்டும்.

இறைவனின் நாமம் ஆற்றல் மிக்கது; அத்தகைய நாமங்கள் பல கொண்டுள்ள கடவுளரை வேண்டி கடுந்தவம் புரிந்து அவனது கருணைக்கு பாத்திரமானவர்களைப் பற்றிக் கேட்டும் படித்தும் தெரிந்து கொண்டிருக்கிறோம். இத்தகைய தவம் சாதாரண மக்களாகிய நமக்கு எளிதாகக் கைகூடாது. புத்தியைக் கொண்டு இறைவனை அறிதலும் சாத்தியமானதன்று. கடவுளரின் அருளாசி பெற திருத்தல வழிபாடு ஒன்றே எளிதான வழி.

யோகங்கள் பயின்று முக்தியை நாடுபவர் வெகு சிலரே. அது மிகவும் கடினமான பாதை. கர்மயோகம் பயின்று ஞானம் பெறலாம். அதன் பின்னர் ஞானயோகம் பயின்று முக்திக்கு வழிதேடலாம். இதனை அடைய எத்தனையோ சோதனைகளைக் கடந்து வரவேண்டியுள்ளது. நடைமுறையில் திருத்தல வழிபாடே காலத்திற்கேற்ற எளிதான வழி. இதற்கு இந்நூல் பெரிதும் வழிகாட்டும். இந்நூல் வெளியிட உறுதுணையாய் இருந்த அத்துணை அலுவலர் மற்றும் ஆன்மீக அன்பர்களுக்கும் வாழ்த்துகள்.

ஆணையர்

# முகவுரை

நமது நாட்டை ஆலயங்களின் தேசம் என்றே சொல்லலாம். எல்லை தெய்வக் கோவில்கள், நடுகல் கோவில்கள் தொடங்கி வானளாவிய கோபுரங்கள் கொண்ட கோவில்கள் வரை பல்லாயிரக்கணக்கில் ஆலயங்கள் பரவிக்கிடக்கின்றன. பழமையும் பெருமையும் வாய்ந்த பிரம்மாண்டமான கோவில்கள் அக்கால மன்னர்களால் அமைக்கப்பட்டவையே. பக்தியைக் கொண்டாடவும், வெற்றியின் காணிக்கையாகவும் ஆலயங்களை அமைத்த மன்னர்கள், அதை கோட்டையாக அமைத்து பாதுகாப்பு அரணாகவும் பயன்படுத்தினர்.

இறைநிலை எல்லா இடங்களிலும் இருந்தாலும் கோவில்களில் அதிகபடியான ஆற்றல் குவியும் வண்ணம் சிலையை பல சடங்குகளை செய்து பிரதிஷ்டை செய்து உள்ளார்கள். அங்கே சென்று வழிபடுவதால் இறை ஆற்றல் முழுமையாக கிடைக்கும். மேலும் சம்பிரதாயம் என்னும் பெயரில் பல அறிவியல் பூர்வமான சடங்கு முறைகளை அங்கே வைத்து நம் உடலில் உள்ள நோய்களை போக்குவதற்கும் மனம் ஒருநிலைபடுவதற்கும் பல சடங்கு முறைகளை ஏற்படுத்தி உள்ளனர். இதனால்தான் உடம்பினை கோயிலுடன் தொடர்புபடுத்தி

“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளாமணி விளக்கே”

என்கிறார் திருமூலர். நம் முன்னோர்கள் இயற்கையை, இயற்கையின் தன்மையை உணர்ந்து, வென்று சிவத்தையடைந்த மனிதர்களை (சித்தர்களை) வழிபட்டு இருக்கின்றனர். ஆகையால் அவர்கள் நமக்கு விட்டுச்சென்ற கோவில்கள் அனைத்தும் நமது உடம்பேயன்றி வேறொன்றும் இல்லை என்பதை உணர்ந்து பேணிக்காத்து செயல்பட்டால் மிகச்சிறப்பு.

கோயிலில் இறைவனை வழிபட்டால் வினைகள் வெந்து, எரிந்து, கருகி, நீறாகி விடுகின்றன.

“மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே”

என்பது சிவஞானபோதம். நமது திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்கள் தேவர்களாலும், முனிவர்களாலும், நால்வர்கள், ஆழ்வார்கள் போன்றவர்களாலும் நிறுவப்பட்டு துதிக்கப்பட்ட காரணத்தால் மேன்மை பெற்று வழிபடுவோருடைய வல்வினைகளை அகற்றி வரங்களை அளிக்கின்றன. இத்தகைய தனிச்சிறப்பைப் பெற ஆலயத்துக்குச் சென்று வழிபடுவதே மிக உயர்ந்ததாகும்.

வாழ்வில் ஒருமுறையேனும் சென்று தரிசிக்க வேண்டிய சிறப்புகள் மிக்க பல திருக்கோயில்கள் கடலூர் மாவட்டத்தில் அமைந்துள்ளன. நாயன்மார்கள் அருளிய தேவாரத் திருப்பதிகங்களும், வைணவ திவ்விய தேசங்களும் இம்மாவட்டத்திலுள்ள சில திருக்கோயில்களைப் பகுத்துக் காட்டுகின்றன.

சமணத்தின் பிடியிலிருந்த தமிழகத்தில் மீண்டும் சைவம் தழைக்கப்பாடுபட்டவரான திருநாவுக்கரசர், இறைவனையே தோழனாகக் கொண்ட சுந்தரர், திருநாவுக்கரசரை சைவத்திற்கு கொண்டுவந்து சேர்த்த பெருமையுடைய திலகவதியார், “வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்” என்று ஜீவகாருண்யம் தழைக்க அரும்பாடுபட்டவரும் திருவருட்பா என்னும் தேனமுதினை நமக்களித்த வடலூர் திருஅருட்பிரகாச வள்ளலார், போன்ற அருளாளர்களை வருவித்ததும் இந்த தொண்டைநாடுதான். அதனால்தான் தொண்டை நாடு சான்றோர் உடைத்து என்னும் முதுமொழி இன்றளவும் நின்று நிலவுகிறது.

நால்வர்கள் பாடல் பெற்றதும் பூலோக கைலாயம் என்று போற்றப்படுவதும் அடியவர்களுக்கு முக்தியளித்ததுமான சிதம்பரம் அருள்மிகு நடராஜர் திருக்கோயிலும், அப்பர் பெருமானை சூலை கொடுத்து ஆட்கொண்ட திருவதிகை அருள்மிகு வீரட்டானேஸ்வரர் திருக்கோயிலும், அவரைக் கல்லில் கட்டிக் கடலில் எறிந்தபோது அக்கல்லை தெப்பமாக செய்து கரையேற்றிவிட்ட திருப்பாதிரிப்புலியூர் அருள்மிகு பாடலீஸ்வரர் திருக்கோயிலும், சுந்தரருக்கு பொற்கிழியை அளித்து அதனை மணிமுத்தாற்றிலே போடச்செய்து திருவாரூர் கமலாலய குளத்திலே வெளிப்படவைத்த விருத்தாசலம் அருள்மிகு விருத்தகிரீஸ்வரர் திருக்கோயிலும், திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றதும், தென் திருப்பதி என்று போற்றப்படுவதுமான திருவந்திபுரம் அருள்மிகு தேவநாதசுவாமி திருக்கோயிலும், முருகப் பெருமான் குடி கொண்ட மணவாளநல்லூர் அருள்மிகு கொளஞ்சியப்பர் திருக்கோயிலும்,

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

என்னும் மகாமந்திரத்தினை உலகுக்கு அளித்தவரும் உலகில் வேறு எங்குமில்லா வடிவமைப்போடு எண் கோண வடிவிலான வடலூர் சத்திய ஞான சபையும், 19 பாடல் பெற்ற திருத்தலங்களையும், 2 மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருத்தலங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குவது கடலூர் மாவட்டமாகும்.

இப்புத்தகத்திற்கு வாழ்த்துரை வழங்கிய மாண்புமிகு உணவு, இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறை அமைச்சர் திரு.**ஆர்.காமராஜ்** அவர்களுக்கும், சுற்றுலா, பண்பாடு மற்றும் அறநிலையங்கள் துறையின் அரசு கூடுதல் தலைமைச்செயலாளர் முனைவர் திரு.**ரா.கண்ணன்** இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்த புத்தகத்தினை மிகவும் சிறப்பாக வெளியிடுவதற்கு ஆலோசனைகள் வழங்கி ஊக்கப்படுத்திய இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் முனைவர்.திரு.**மா.வீர சண்முக மணி** இ.ஆ.ப., அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றிகளை தெரிவித்துக்கொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன்.

மேலும் இந்த திருக்கோயில்கள் வழிகாட்டிப் புத்தகம் வெளிவர உதவிகள் புரிந்த கடலூர் இந்து சமய அறநிலையத்துறை, உதவி ஆணையர், திருமதி. சி.ஜோதி அவர்களுக்கும், இவ்வழிகாட்டிப் புத்தகத்திற்கு திருக்கோயில்கள் பற்றிய செய்திகளை வழங்கிய செயல் அலுவலர்கள், ஆய்வர்கள் மற்றும் உதவி ஆணையர் அலுவலக பணியாளர்களுக்கும் எனது நன்றிகள். இப்புத்தகத்தினை எழிலுற வடிவமைத்து அச்சிட்ட **கடலூர் ஸ்ரீ முருகன் அச்சகத்திற்கும்** என் மனமார்ந்த நன்றிகள் உரித்தாகுக.

“வான்முகில் வழாது பெய்க, மலிவளம் சுரக்க,
மன்னன் கோன்முறை அரசு செய்க,
குறைவிலாது உயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க,
மேன்மை கொள் தெய்வ நீதி விளங்குக
உலகமெல்லாம்.”

**(இரா.செந்தில்வேலவன்)**
இணை ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை,
விழுப்புரம்.

# பொருளடக்கம்

## படதொகுப்பு

வழிகாட்டி நிலவரை (Route Map)

# அருள்மிகு தேவநாத சுவாமி திருக்கோயில்
# திருவந்திபுரம்
## (மங்களாசாசனம் செய்யப்பட்ட தலம்)



‘வைய மேழுமுண் டாலிலை வைகிய
மாயவன் அடியவர்க்கு
மெய்ய னாகிய தெய்வநா யகனிடம்
மெய்தகு வரைச் சாரல்
மொய்கொள் மாதவி சண்பகம் முயங்கிய
முல்லையங் கொடியாட
செய்ய தாமரைச் செழும்பனை திகழ்தரு
திருவயிந் திரபுரமே’

– திருமங்கையாழ்வார்.

### திருக்கோயில் அமைவிடம்

கடலூர் புகைவண்டி நிலையத்திலிருந்து மேற்கே 7 கி.மீ. தொலைவில் அமையப் பெற்றுள்ளது.

### மங்களாசாசனம்

திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட திருக்கோயிலாகும்.

### இறைவன் பெயர்

| | |
|---|---|
| தேவநாதன் | அநேக ஜ்யோதிஸ் |
| தெய்வநாயகன் | அச்சுதன் |
| மூவராகிய ஒருவன் | பவௌஷதம் |
| தாச சத்தியன் | மேவு சோதி |
| ஸ்திரஜ்யோதிஸ் | அடியவர்க்கு மெய்யன் |

### இறைவி பெயர்

| | |
|---|---|
| ஹேமாம்புஜவல்லி | பார்கவி |
| அலைவாய் உகந்த மகள் | தரங்கமுகநந்தினி |
| அம்போருஹவாஸினி | செங்கமலத் தாயார் |

பெருமாள், நாச்சியார் – கிழக்கு நோக்கிய சந்நிதிகள்

பெருமாள் நின்ற திருக்கோலம், நாச்சியார் அமர்ந்த திருக்கோலம். சுவாமிக்கு வலப்பக்கத்திலே தாயார் திருச்சந்நிதி.

### தல விருட்சம்

வில்வ மரம்

### தீர்த்தங்கள்

ஒரு சமயம் பெருமாளுக்குத் தாகம் ஏற்படுகையில் அதைத் தீர்க்க கருட பகவான் தம் அலகினால் வகிர்ந்து கொண்டு வந்த நதி கெருட நதி (அ) கெடில நதி என்றும் அதற்குச் சற்று நேரமானதினாலே ஆதிசேஷன் தன் வாலினால் பூமியைக் குடைந்து கிணறு அமைத்து தீர்த்தம் வரவழைத்ததாக புராண வரலாறு கூறுகிறது. இப்பகுதியில் கெடில நதி தெற்கிலிருந்து வடக்கில் பாய்வதால் உத்திரவாஹினி எனப் பெயர் பெறுகிறது மற்றும் பிரம்ம தீர்த்தம், பூ தீர்த்தம், இலட்சுமி தீர்த்தம் ஆகிய தீர்த்தங்களும் உள்ளன.

### தல வரலாறு

ஸ்ரீமந் நாராயணன் அனைத்துயிர்களையும் பாதுகாக்கத் திருவுள்ளம் கொண்டு இப்பூவுலகில் கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் புண்ணிய திருத்தலங்கள் பல. அவற்றுள் ஓரிரண்டாம் சீர் நடு நாடு என சிறப்பு வாய்ந்த நடுநாட்டுத் திருப்பதி இரண்டில் திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திவ்யதேசம்



திருவகீந்திரபுரமாகும். இத்திருக்கோயில் பல்வேறு மன்னர்களால் திருப்பணிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளதாக சரித்திரச் சான்றுகள் கூறகின்றன.

அகீந்திரன் என்றால் ஆதிசேஷன். இவ்வூர் ஆதிசேஷனால் நிர்மாணிக்கப்பட்டதாகும். அருகிலுள்ள மலை



பிரம்மா தவம் செய்த இடமாகும். அர்ச்சுனனால் சேவிக்கப்பட்ட தலமாகும். ஆஞ்சநேயரால் கொணரப்பட்ட ஔஷத மலையின் ஓர்

பாகம் இதில் சேர்ந்திருப்பதால் ஔஷதாசலமென்றும் பெயருடையது.

இத்திருக்கோயிலின் மூலவர் நின்ற திருக்கோலத்தில் தேவநாதன், தெய்வநாயகன், மெய்யன் என்ற பல்வேறு திருநாமங்களிலும், இருந்த திருக்கோலத்தில் அகீந்திரபுரநாதராகவும், கிடந்த திருக்கோலத்தில் பள்ளிகொண்ட நாதராகவும் காட்சி தருகின்றார்.

இத்திருக்கோயிலின் தாயார் அம்புருகவாசினி, ஹேமாம்புஜ நாயகி, பார்கவி, தரங்கமுக நந்தினி, செங்கமலத் தாயார் எனப் பல்வேறு திருநாமங்களால் அழைக்கப்படுகிறார்.

இத்தலத்தில்தான் ஸ்ரீமந் வேதாந்த தேசிகர் 40 ஆண்டுகாலம் இங்குள்ள ஔஷதாசலத்தில் தவம்புரிந்து, ஸ்ரீ ஹயக்கிரீவரையும், கருடனையும் கண்டு வரம் பெற்றார்.

ஸ்ரீ ஹயக்கிரீவர் சந்நிதி



ஸ்ரீ ஹயக்கிரீவருக்கு உலகிலேயே இவ்வூரில்தான் முதன்முதலில் தனியொரு கோயில் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள லஷ்மி ஹயக்கிரீவர் குழந்தைகளுக்கு கல்விச் செல்வத்தையும், அறிவாற்றலையும் அளிப்பவராவார். வியாழக்கிழமை தோறும் ஸ்ரீலஷ்மி ஹயக்கிரீவருக்கு மாணவ பக்தர்கள் பெருந்திரளாக வந்து வழிபட்டு அருள் பெறுகின்றனர்.

## ஸ்ரீ வேதாந்த தேசிகன்

காஞ்சிபுரத்தைச் சார்ந்த தூப்புல் என்னும் ஊரில் அவதரித்த ஸ்ரீ வேதாந்த தேசிகன் இவ்வூரில் சுமார் 40 ஆண்டு காலம் வசித்துள்ளார். நவரத்ன மாலை, மும்மணிக்கோவை, போன்ற தமிழ் மொழி நூல்களையும் கருட பஞ்சாசத் , கருட தண்டகம் கோபாலவம் சுதி, ராமன்பேரில் ரகுவீர கத்யம், தாயாருக்கு ஸ்ரீசுதி போன்ற வடமொழி நூல்களையும் இயற்றியுள்ளார். இவர் ஒரு ஆச்சார்யராக போற்றப்படுகிறார்.

தேசிகன் கருட மந்திரத்தை உச்சாடனம் செய்து கருடன் பிரத்யக்ஷமாகி ஹயக்ரீவர் ஸ்லோகம் உபதேசிக்க அதனைத் தியானித்து ஸ்ரீ ஹயக்ரீவரைத் தேசிகன் ஸேவித்ததாகவும், கருடனால் தரப்பெற்ற ஸ்ரீயோக ஹயக்ரீவரைப் பூஜித்ததாகவும் வரலாறு கூறுகிறது.

ஸ்ரீயோக ஹயக்ரீவர் இன்றும் ஸ்ரீதேவநாதசுவாமி திருக்கோயில் மூலஸ்தானத்தில் எழுந்தருளியிருக்கிறார்.

## தல சிறப்புகள்

இத்திருக்கோயிலில் வேறெந்த வைணவத் தலத்திலும் காண்பதற்கரிய வில்வ மரம் தல விருட்சமாக அமையப்பெற்றுள்ளது பெரும் சிறப்பாகும். இங்கு கருடனால் கொண்டுவரப்பெற்ற கருட தீர்த்தம் (கெடில நதி) கோவிலுக்கு மேற்குப் புறத்திலும், ஆதிசேஷனால் நிர்மாணிக்கப்பட்ட சேஷ தீர்த்தம் கோவில் பிரகாரத்திலும் அமையப்பெற்றுள்ளது. சேஷ தீர்த்தத்தில் செவ்வாய் தோஷம், நாகதோஷம் உடையவர்கள் பிரார்த்தனை செய்து நேர்த்திக் கடன் செய்து வருகின்றனர்.

வடகலை வைணவத்தலமான இத்திருக்கோயிலில் ஸ்ரீ தேவநாதன் சந்நிதி, ஸ்ரீ தாயார் சந்நிதி, ஸ்ரீ ராமர் சந்நிதி, ஸ்ரீ வேணுகோபாலன் சந்நிதி, ஸ்ரீ ஆண்டாள் சந்நிதி
ஸ்ரீ சக்கரத்தாழ்வார் சந்நிதி, ஸ்ரீ பள்ளி கொண்டநாதர் சந்நிதி, ஸ்ரீ அஹிந்திரபுரநாதன் சந்நிதி, ஸ்ரீ சுவாமி தேசிகன் சந்நிதி, ஆழ்வார்கள் சந்நிதி என அனைத்துச் சந்நிதிகளும் அமையப்பெற்றுள்ளன. இத்தகு சிறப்பு வாய்ந்த தெய்வநாயகனை திருப்பதி ஸ்ரீ வெங்கடாஜலபதிக்குத் தமையனாக வழிபடுவது பழக்கத்தில் உள்ளது. ஸ்ரீ தேவநாதன் தம்மை வேண்டி வரும் பக்தர்களுக்கு அருள்பாலிப்பதோடு, திருப்பதி வெங்கடாஜலபதிக்கு வேண்டிக்கொண்ட பக்தர்கள் அங்கு செல்ல இயலாமல் ஏற்படும் காலங்களில் திருவந்திபுரத்திற்கு வந்து தனது பிரார்த்தனையை இங்கு நிறைவேற்றிச் செல்வது வழக்கத்தில் உள்ளது.

## பூஜைகள்

இத்திருக்கோயிலில் வைகானச ஆகமப்படி 6 கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

## முக்கிய திருவிழாக்கள்

### சித்திரை :

சித்திரையில் பௌர்ணமியை பத்தாந் திருவிழாவாகக் கொண்டு தேவநாதனுக்குப் பிரம்மோற்சவம்.

### வைகாசி :

வைகாசியில் தேவநாதனுக்குப் பத்துநாள் வசந்த விழா கோலாகலமாக கொண்டாடப்படுகிறது.

### ஆனி :

பௌர்ணமியில் நெல்லிக்குப்பம் தோப்பு உற்சவம்

### ஆடி :

ஆடிப்பூரம் – ஆண்டாள் திருக்கல்யாண உற்சவம்

ஆவணி :

ஆவணி – திருவோண நட்சத்திரத்தைப் பத்தாம் நாளாகக் கொண்டு ஹயக்கிரீவனுக்குப் பத்து நாள் உற்சவம்.

புரட்டாசி :

தாயாருக்கு நவராத்திரிச் சிறப்பு திருவோண நாளைப் பத்தாம் நாளாகக் கொண்டு ஸ்ரீ தேசிகனுக்குப் பிரம்மோற்சவம். பெருமாளுக்கு எவ்வாறு பிரம்மோற்வசம் நடைபெறுகிறதோ அவ்வாறே தேர் முதலிய யாவும் உண்டு. பத்தாம் நாள் அதிகாலையில் ஔஷத கிரியின் மீது அருள்மிகு தேசிகன் எழுந்தருளி ஹயக்கிரீவர் சந்நிதியில் சிறப்பு வழிபாடு, காலை, கீழே எழுந்தருளி சந்நிதானங்களில் மங்களாசாசனம் செய்துகொண்டு தீர்த்தவாரி. அன்றையதினம் ரத்னாங்கி சேவை கண்கொள்ளாகாட்சியாகும்.

கார்த்திகை :

விஷ்ணு தீபம் ஏற்றி வழிபாடு

மார்கழி :

அத்யயன உற்சவம் வைகுண்ட ஏகாதசிக்கு முன்னும் பின்னும் பத்துப் பத்து நாட்கள். அருள்மிகு தரங்கமுகநந்தினி திருக்கல்யாண உற்சவம் – போகிப்பண்டிகையன்று

தை :

சங்கராந்தி, மாட்டுப்பொங்கல் உற்சவங்கள்.
பெண்ணையாற்றில் – (நுத்தப்பட்டு துறையில்) நீராடல்.

மாசி :

மாசிமக விழா வங்கக் கடலில் கடலாடு விழா

பங்குனி :

அருள்மிகு இராம நவமி – அருள்மிகு இராமனுக்கு 9 நாள் நவமியை இறுதியாகக் கொண்டு உற்சவம்.

யுகாதி பண்டிகை.

பங்குனி உத்திரம்.

மற்ற வார, பக்ஷ, மாச, அயன, விஷு புண்ணியகால விழாக்களும் நிகழும். விழாக்களில் 'அலங்காரப் பிரியன்' என்பதை இந்த திருப்பதியில் கண்கூடாகக் காணலாம். இத்திருக்கோயில் ஆண்டிற்கு 250 நாட்கள் திருவிழா நாட்களே ஆகும்.



திருமண மண்டபம்

இம்மலைமீது ஒரே நேரத்தில் 50 திருமணங்கள் நடக்கும் அளவிற்கு விசாலமான திருமண மண்டபம் 2 கோடி மதிப்பீட்டில் கட்டப்பட்டு, திருமணங்கள் நடைபெற்று வருகிறது.

கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12.00 மணி வரை.
மாலை 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை.


அலுவலக முகவரி

செயல் அலுவலர்,
அருள்மிகு தேவநாதசுவாமி திருக்கோயில்,
திருவந்திபுரம் & அஞ்சல், கடலூர்
தொலைபேசி எண்.: 04142–287515.
இணையதள முகவரி: www.devanathaswamytemple.org
மின்னஞ்சல் முகவரி: *devanathaswamy@gmail.com*

# அருள்மிகு பூவராக ஸ்வாமி திருக்கோயில்
# ஸ்ரீமுஷ்ணம்

## ( வராக அவதார தலம் )



### திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டத்தில் சிதம்பரத்திலிருந்து மேற்கே 40 கி.மீ தொலைவிலும், விருத்தாசலத்திலிருந்து தென்கிழக்கே 20 கி.மீ தொலைவிலும், ஜெயங்கொண்டத்திலிருந்து வடக்கே 20 கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது. நிறைய பேருந்து வசதி உண்டு.

### தல விருட்சம்

அரச மரம்.

### தல வரலாறு

ஸ்வயம்வயக்தஷேத்ரம் என்பது யாராலும் தோற்றுவிக்கப்படாமல் அனாதியே இருந்து வரும் தலம். ஸ்வயம் வயக்த ஷேத்திரங்கள் 108 என்று வராக புராணம் கூறுகிறது. அவற்றுள் ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரி, ஸ்ரீரங்கம், கும்பகோணம், அனந்தசயனம், அஹோபிலம், நரநாராயணம், துவாரகை, மதுரா, ஜனார்த்தன் முதலியவை அடங்கும். நதிகளுக்குள் கங்கை எப்படி முக்கியமானதோ, அப்படி ஷேத்திரங்களுக்குள் ஸ்ரீமுஷ்ணம்

முக்கியம் என்று ஸ்ரீமுஷ்ணம் மகாத்மியம் கூறுகிறது. இந்த 108 ஷேத்திரங்களில் எட்டு மிக முக்கியமானவை. அவை ஸ்ரீமுஷ்ணம், ஸ்ரீரங்கம், வேங்கடாத்ரி, அஹோபிலம், நரநாராயணம், சாளகிராமகிரி, புருஷோத்தமம், தோதாத்ரி என்பவை.



பிரம்மா சுயாம்புவ மனுவிடம் சகல உயிர்களையும் படைக்குமாறு பணித்தார். ஆனால் உயிர்கள் வாழ்வதற்கு ஏற்றதான பூமி கடலில் மூழ்கிக் கிடப்பதால் அதை மேலே கொண்டுவர மனு பிரம்மாவிடம் கேட்டார். ஆதலால், பிரம்மா நாராயணனைத் தியானம் செய்தார். அப்போது பிரம்மாவின் மூக்கின் வழியே கட்டை விரல் அளவுள்ள ஒரு பன்றிக்குட்டி வெளியே வந்து வானளாவும் பெரிய உருவத்தில் காட்சியளித்தது. தேவர்கள் வராஹப் பெருமானைத் துதி செய்து பூமியை மீட்டுத்தருமாறு வேண்டினர். பெருமானும், தன் மோப்ப சக்தியால் பூமி இருக்கும் இடம் அறிந்து கடல் நீருக்குள் மூழ்கி இரண்யாட்சன் என்ற அரக்கனை அழித்து கடலினின்றும் பூமியை மேலே கொணர்ந்ததன் மூலம் தேவர்களுடைய துயரைத் துடைத்து அவர்கள் வேண்டுகோளை நிறைவேற்றியவுடன் வைகுண்டத்திற்குத் திரும்பச் செல்ல பெருமான் எண்ணியதாகவும், பூதேவி தன்னிடமே தங்கியிருக்கும்படி வேண்டிக்கொண்டதன்பேரில் பூமி மேலே கொண்டு வரப்பட்ட இடமாகிய ஸ்ரீமுஷ்ண ஷேத்திரத்தில் எம்பெருமான் வாசம் செய்யத்தொடங்கினார் என்று நாரத புராணம்

கூறுகிறது. பூதேவியோடு கூடி வசிப்பதால் வராஹ பெருமாளுக்கு பூவராகன் என்று பெயர். வராஹனாகப் பாவித்து பூஜிக்கின்றவர்க்கு பிரம்மலோகமும், பூவராகனாகத் தேவியோடு சேர்த்து பாவித்து பூஜிக்கின்றவர்க்கு மேலாக சாயுஜ்ய முக்தியும் கிடைக்கும் என்று பெருமான் அருளியதாக வராஹ புராணம் கூறுகிறது. ஸ்ரீமுஷ்ண க்ஷேத்திரம் பிராம்மாதியோக்களுக்கு வேதாத்யயன பூமியாகவும் மனிதர்களுக்கு மோட்ச பூமியாகவும் இருந்து வருகிறது.

கோயிலின் முக்கிய சந்நிதி ஸ்ரீபூவராகசுவாமி சந்நிதி. சுவாமி மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். முகம் மட்டும் தெற்கு நோக்கி உள்ளது. அசுரர்களை வென்றதால் ஏற்பட்ட வெற்றிப்பெருமித உணர்ச்சி பொங்க இருகைகளையும் இடுப்பில் வைத்துக்கொண்டு முகத்தை நிமிர்த்தி கம்பீரமாகப் பார்க்கிறார். மூலவர் சாளக்கிராம மூர்த்தி கருவறைக்கு முன்பு மேற்புறம் அர்த்த மண்டபத்தில் உற்சவர் யக்ஞவராக மூர்த்தி ஸ்ரீதேவி பூதேவியுடன் மேற்கு நோக்கி காட்சி தருகின்றார். உடன் ஆதிவராஹமூர்த்தியும் கண்ணனும் எழுந்தருளியுள்ளனர். ஸ்ரீஅம்புஜவல்லித்தாயாரின்




வேண்டுகோளுக்கிணங்கி அழகு வாய்ந்த கல்யாணத் திருக்கோலத்தில் எழுந்தருளியதாகப் புராண வரலாறு கூறுகிறது.

பிரதானமூர்த்தியின் பிரகாரத்திற்கு அடுத்துள்ள

பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் ஸ்ரீஅம்புஜவல்லித்தாயார் சந்நிதியும் அதன்முன் ஊஞ்சல் உற்சவ மண்டபமும் அமைந்துள்ளன. இச்சந்நிதியில் மூலவருக்கு முன் உற்சவர் அம்புஜவல்லித்தாயார் காணப்படுகிறார். இதே பிரகாரத்தில் மேற்குக் கோபுரவாசலின் உட்புறத்தில் வாசலின் கீழ்புறம் கோபுரத்தின் முதல்நிலையில் ஸ்ரீ வராகப் பெருமாளை நோக்கி கிழக்கே பார்த்திருக்கும் ஸ்ரீநிவாசப்பெருமாள் சந்நிதி உள்ளது. மூலவரைத் தரிசிக்கும் முன்பு ஸ்ரீநிவாசப்பெருமாளையும் அடிவாரத்தில் அமைந்துள்ள அவர் திருவடிகளையும் தரிசித்துச் செல்வது வழக்கம். மேலும் ஸ்ரீஆண்டாள், உடையவர், வேணுகோபாலன், விஷ்வக்சேனர், ஸ்ரீதேசிகன், திருமங்கை மன்னன், மணவாளமாமுனிகள், திருக்கச்சி நம்பி ஆகியோரின் சந்நிதிகளும் உள்ளன. இத்திருக்கோயிலில் கலைநயமிக்க கண்ணாடி அறை அமைக்கப்பட்டுள்ளது. இங்குப் பெருமாளும் தாயாரும் விசேஷ உற்சவ காலங்களில் அலங்கரிக்கப்பட்டு காட்சி தருவார்கள். கலைநயமிக்க புருஷ சூக்தமண்டபம் உண்டு.

இரண்யாட்ச அசுரனைக் கொன்று சமுத்திரத்தினின்றும் பூமியை மேலே கொணர்ந்து தேவர்கள் துயர்துடைத்து உயிர் வர்க்கங்களுக்கு உறைவிடத்தை அளித்து அருஞ்செயலால் பெருமானுடைய கண்களின்றும் ஆனந்தக் கண்ணீர் துளித்து இரு சொட்டுகள் கீழே விழுந்தன. ஒன்று திருத்துழாயாகவும், மற்றொன்று அசுவத்த (அரசு) மரமாகவும் தோன்றின. இம்மரத்தை ஆதிவிருஷம் என்று அழைப்பார்கள். மரங்களுக்குள்ளே நான் அசுவத்த மரமாக இருக்கிறேன் என்று பகவான் தன்னையே கீதையில் குறிப்பிடுவதன் மூலம் அதன் பெருமை புலனாகும். பூத பிசாசுகளால் துன்புறுத்தப்படுவோரும் மகா ரோகங்களால் பீடிக்கப்படுவோரும் சனி முதலான கிரகங்களால் இன்னல் அடைந்தோரும் அசுவத்த சேவையால் துன்பம் நீங்கி இன்பம் எய்துவர்.

## திருவிழாக்கள்

ஸ்ரீபூவராக சுவாமி எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமுஷ்ண ஷேத்ரத்தில் ஆண்டுதோறும் இரண்டு பிரமோத்சவம் நடைபெறுகிறது. ஒன்று மாசி மாதம் பரணியில் தொடங்கி கிள்ளையில் தீர்த்தவாரி நிகழும் மாசிமக பிரமோத்சவம் ஆகும்.

இந்த உற்சவத்தில் சமுத்திரத்திற்கு எழுந்தருளும் முன் தைக்கால் கிராமத்தில் ஒரு நவாப் அடக்கம் செய்யப்பட்ட மசூதி வழியாக பெருமாள் எழுந்தருள்வதும், மசூதி மேட்டில் மேளதாளங்களுடன் பூசையை ஏற்றுக்கொள்வதும் சிறப்பு ஆகும். இரண்டாவது பிரம்மோற்சவம் சித்திரை மாதத்தில் ஸ்ரீமுஷ்ணத்திலேயே நடைபெறுவது. ஒன்பது நாட்கள் பகல் இரவு பெருமாள் வீதிக்கு எழுந்தருளுகிறார். ஒவ்வொரு மாதத்திலும் இரண்டு ஏகாதசிகள், பௌர்ணமி, அமாவாசை, மாதப்பிறப்பு, சுவாமி பிரகாரத்தில் எழுந்தருளுகிறார். அவதார தினமான சித்திரை மாத ரேவதியில் பூவராகவன் எழுந்தருளுகிறார். வெள்ளிக்கிழமைதோறும் அம்புஜவல்லித்தாயார் டோலோத்சவம் (ஊஞ்சல் விழா) நடைபெறும், மேலும் வைகுண்ட ஏகாதசி, பகல்பத்து, இராப்பத்து உற்சவம் போன்றவை வெகு விமரிசையாக கொண்டாடப்படுகின்றன.

இத்திருக்கோயிலில் வழங்கப்பெறும் மருத்துவ குணம் மிக்க கோரைக்கிழங்கு பிரசாதம் வேறெந்த ஆலயங்களிலும் இல்லாத பெரும் சிறப்பாகும்.

## பூஜை காலங்கள்

தினசரி 6 கால பூஜைகள்

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்
அருள்மிகு பூவராக ஸ்வாமி திருக்கோயில்,
ஸ்ரீமுஷ்ணம், காட்டுமன்னார்கோயில் வட்டம்
தொலைபேசி எண்: 04144 –245090
மின்னஞ்சல் முகவரி: boovaragaswamytemple@gmail.com

# அருள்மிகு சபாநாயகர் (நடராஜர்) திருக்கோயில்
# சிதம்பரம்
## ( பாடல் பெற்ற தலம் )



"செல்வ நெடுமாடம் சென்று சேண் ஓங்கிச்
செல்வ மதிநேயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேயச்
செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே"

– திருஞானசம்பந்தர்.

### திருக்கோயில் அமைவிடம்

தில்லைத் திருத்தலம், கடலூர் மாவட்டத்தில் கொள்ளிடம் என்னும் காவிரியின் பிரிவிற்கு வடக்கிலும், மணிமுத்தா நதிக்குத் தெற்கிலும், சென்னைக்கும்–திருச்சிராப்பள்ளிக்கும் உள்ள பிரதான இருப்புப்பாதையில் சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீ தொலைவில் மேற்கில் அமைந்துள்ளது.

### இறைவன் திருப்பெயர்கள்

மூலட்டானேஸ்வரர், திருமூலநாதர், நடராசர்

## இறைவி திருப்பெயர்கள்

உமையம்மையார், சிவகாம சுந்தரி.

## ஆனந்த தாண்டவம் புரிந்தருளும் இறைவன் திருப்பெயர்

சபாநாயகர், கூத்தப்பெருமான், நடராஜர், விடங்கர், ரேமநடங்கர், தட்சிணமேருவிடங்கர் என்று இலக்கியங்கள் கூறுகின்றன.

## விருட்சம்

தில்லை மரம்.

## தீர்த்தங்கள்–10

1. சிவகங்கை தீர்த்தம், 2. பரமானந்த தீர்த்தம், 3. வியாக்ரபாத தீர்த்தம், 4. அனந்த தீர்த்தம், 5. நாகசேரி தீர்த்தம், 6. பிரம்ம தீர்த்தம், 7. சிவப்பிரியை தீர்த்தம், 8. புலிமேடு தீர்த்தம், 9. குய்ய தீர்த்தம், 10. திருப்பாற்கடல் தீர்த்தம்.



## பூஜைகள்

சிவனுக்கு வேதவிதிப்படிதான் பூஜை செய்ய வேண்டும்.

## ஆறுகால பூஜைகள்

1. காலசந்தி, 2. இரண்டாங்காலம், 3. உச்சிகாலம், 4. சாயரட்சை, 5. இரண்டாம் மறுகாலம், 6. அர்த்த சாமம்.

### தல வரலாறு

ஈசன் ஆனந்த தாண்டவம் ஆடிய தலம் இதுவாகும். மாணிக்கவாசக சுவாமிகள் இத்தலத்தில் சிவபுராணத்தைப் பாடிய பொழுது அங்கிருந்த சிவனடியார்கள் அதற்குப் பொருள் விளக்கம் கூறுமாறு வினவ, இதற்குப் பொருள் இதுதான் என்று சபாநாயகரைச் சுட்டி காட்டி நடராஜர் சந்நிதியின் உள்ளே அவர் சென்று இறைவனுடன் இரண்டறக் கலந்த அற்புதம் நிகழ்ந்த திருத்தலமாகும். சைவம் தழைக்க அவதரித்த சேக்கிழார் பெருமானார் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைப் பெரியபுராணம் என்ற தலைப்பில் எழுதிப் பல்லக்கில் எழுந்தருள அவருக்குச் சோழப்பேரரசன் சாமரம் வீச வீதிவுலா வந்து, தமிழ்நாட்டின் வரலாற்று உண்மைகள் கூறும் தமிழ் மொழியின் அரிய பொக்கிஷத்தை அரங்கேற்றிய திருத்தலம் இதுவாகும்.

அண்மைக் காலத்தில் இறைவனோடு இரண்டறக் கலந்த வடலூர் வள்ளற் பெருமானார் இராமலிங்க சுவாமிகள் இத்திருத்தலத்திற்குப் பல காலம் வந்து நடராஜப்பெருமானைத் தரிசித்து இறவாவரம் பெற்றார்.

### தலப்பெயர்கள்

நடராஜப்பெருமான் இடையறாது கலைநடனம் புரிந்தருளும் இத்திருத்தலத்திற்குக் கோயில் என்பது சிறப்புப் பெயர், கோயில் என்றாலே சிதம்பரத்தைக் குறிக்கும். சைவர்களுக்குக் கோயில் சிதம்பரம், வைணவர்களுக்குக் கோயில் திருவரங்கம், தில்லைவனம் என்பது இத்தலத்தின் பெயர். தில்லை என்னும் மரங்கள் அடர்ந்து காடாக இருந்ததால் இப்பெயர் பெற்றது. இப்பொழுது இம்மரங்கள் காணக் கிடைக்கவில்லை. பெரும்பற்றப்புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே என்பார் அப்பரடிகள். சித்+அம்பரம்=சிதம்பரம் – சித்–அறிவு. அம்பரம்–வெட்டவெளி, ஆகையால் ஞானாகாசம் பொன்னம்பலம், வியாக்கிரம், பூலோககைலாயம், புண்டரீசுபுரம் என்ற பெயர்களும் இதற்கு உண்டு.

### தலச்சிறப்புகள்

சைவர்களுக்கு முதன்மையான தலம் இத்தலம். இதில்

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றும் மேன்மை பெற்று விளங்குகின்றன. நடராஜப்பெருமானின் திருக்கூத்து. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் உணர்த்துகின்றது.

உலகம் விராடபுருடன் வடிவம். திருவாரூர் அதன் மூலாதாரம். திருவானைக்கா தொப்பூழ், திருவண்ணாமலை மணிப்பூரகம், திருக்காளத்தி கண்டம், காசி புருவமத்தி, சிதம்பரம் இருதயம் என்பர்.

இத்திருக்கோயிலில் சிற்றம்பலம், பொன்னம்பலம், பேரம்பலம், நிருத்தசபை, இராசசபை என்னும் ஐந்து சபைகளும் சிவன், விஷ்ணு திருச்சந்நிதிகள் ஒரே இடத்தில் நின்று தரிசிக்கும்படி அமைந்திருப்பது இதன் தனிச்சிறப்புகளாகும். பிரம்மா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் கோயில் கொண்டுள்ள திருத்தலம் இது ஒன்றேயாகும்.

இத்தலத்தின் விருட்சம் தில்லைமரம். சிதம்பரம் பஞ்சபூத தலங்களுக்குள் ஒன்று ஆகாயத்தலமாக விளங்குகிறது. மாணிக்கவாசகர், குலாப்பத்து, கண்டப்பத்து, குயில்பத்து, கோத்தும்பி, திருப்பூவல்லி, திருத்தோணோக்கம், திருத்தெள்ளேனம், திருப்பொற்கண்ணம், திருப்பொன்னூசல், திருவுந்தியார், அன்னைப்பத்து, கோயில் மூத்ததிருப்பதிகம், எண்ணப்பதிகம், ஆனந்த மாலை, யாத்திரைப்பத்து முதலியன பாடியுள்ளார். மாணிக்கவாசகர் ஊமைப்பெண்ணைப் பேசவைத்த தலம், ஏடும், எழுத்தாணியும் கொண்டு மாணிக்கவாசகர் சொல்ல சொல்ல திருவாசகத்தை இறைவன் எழுதி முடித்தார். பின்பு மாணிக்கவாசகர் திருச்சிற்றம்பலக்கோவையைப் பாடியருளினார். மாணிக்கவாசகர் அம்பலக்கூத்தன், அடிமலரில் இரண்டறக்கலந்த இடமும் இத்தலமேயாகும்.

திருஞானசம்பந்தர் தெற்கு வாயில் வழியாக வந்து அம்பலவாணன் கழலேத்தும் செல்வந்தரையே சிறப்புடைச் செல்வமாகக் கொண்ட தில்லை வாழ்அந்தணரைப் பதிகத்துள் முன்வைத்து ‘கற்றாங்கெரியோம்பி’ எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடினார்.

அப்பரடிகள் ‘கருநட்ட கண்டனை’ என்னும் திருவிருத்தமும், ‘பக்தனாய்ப் பாடமாட்டேன்’ என்ற திருநேரிசையும், பாடிய தலமும் இதுவேயாகும். மூவர் தேவாரம் முழுமையாகக் கிடைத்ததும் இத்தலத்தில்தான். உமாபதிசிவம் கொடிக்கவி பாடியதும், திருநாளைப்போவார் என்றழைக்கப்படும் நந்தனார் தீயில் மூழ்கி இறைவனுடன் இரண்டறக் கலந்த இடமும் இத்தலமாகும். சேந்தனார் ‘மன்னுகதில்லை வளர்க நம்பக்தர்கள்’ எனத் தொடங்கும் திருப்பல்லாண்டு திருப்பதிகம் பாடியுள்ளார். சேக்கிழார் ‘உலகெலாம்’ எனத் தொடங்கும் திருத்தொண்டர் புராணம் என்னும் காப்பியத்தைப் பாடி முடித்துள்ளார். பெரியபுராணம் என்று காப்பியத்தை அரங்கேற்றியுள்ளார். இத்தலம் திருநீலகண்டர் கோட்செங்கட்சோழன், கணம்புல்லர், கூற்றுவர் ஆகிய நாயன்மார்களும், மறைஞானசம்பந்தர் என்ற சந்தானகுரவர், இரணியவர்மன், வியாக்கரபாதர், பதஞ்சலி முதலியோர் வழிபட்ட தலமாகும்.

## வரலாற்றுச் சிறப்புகள்

இத்திருக்கோயிலில் முதலாம் பராந்தக சோழனால் பொற்கூரை வேயப்பட்டுள்ளது.



## திருக்கோயில் அமைப்பு

இத்திருக்கோயில் 51 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய நான்கு திசைகளில்

இராஜகோபுரங்கள் கம்பீரமாக அமைந்துள்ளன. இராஜகோபுரங்கள் 90 அடி நீளமும், 60 அடி அகலமும், 135 அடி உயரமும், நீண்ட சதுர அமைப்புடன் அமைந்துள்ளன. நடராஜப்பெருமான் தெற்கு முகமாக திருநடனம் புரிந்தருள்வதால் தெற்குக் கோபுரத்தின் மேல் சுவாமியின் கொடி கட்டப்பட்டுள்ளது. திருவிழாக் காலங்களில் சுவாமி புறப்பாடு கிழக்கு பக்க கோபுர வழியாக நடைபெறுகிறது. நான்கு இராஜகோபுரங்களைச் சுற்றிலும் 30 அடி உயரமுள்ள கருங்கல் மதிற் சுவர் வீரப்பநாயகர் மதில் என அழைக்கப்படுகிறது. தெற்குக் கோபுரத்தின் தென்மேற்கு மூலையில் முக்குறுணி விநாயகர் எட்டடி உயரமுள்ள மூர்த்தியாக உள்ளார். இதுபோல் வேறு எந்தத் தலத்திலும் காண இயலாது. கற்பக விநாயகர் மேற்கு கோபுரத்தை ஒட்டி அமைந்துள்ளது. ஏழு திருக்கரங்களுடன் நர்த்தனகணபதியாகக் காட்சியளிக்கிறார். துருவாசமுனிவருக்கு இரவு சாமவேளையில் நடனம் செய்து காட்சியளித்ததால் நர்த்தன விநாயகர் என அழைக்கப்படுகிறார்.



மூன்றாம் பிரகாரத்தில் ஞானசக்தியாக, சிவகாமசுந்தரி அம்மன் சந்நிதி அழகாக அமைந்துள்ளது.

## உட்பிரகார கோயில் மனோமயம்

மனோமயகோஷமாகிய நர்த்தன சபையால் காளியுடன்

ஆடிய ஊர்த்துவ தாண்டவமூர்த்தி சந்நிதி அமைந்துள்ளது. இப்பிரகாரத்தில் நரசிம்ம அவதாரத்தில் உண்டான சினத்தை அடக்க சிவபெருமான் எழுந்தருளிய சரபேஸ்வரர் சந்நிதி அமைந்துள்ளது.

## பொன்னம்பல தத்துவம்

இந்த சபையும், கனகசபையும் ஒன்றாக அமைந்திருக்கிறது. இந்த இடம் பொன்னம்பலம், சிற்றம்பலம், ஞானசபை என்ற பெயர்களைக் கொண்டு விளங்குகிறது. பொன்னம்பலத்தின் மேல் ஒன்பது தங்கக் கலசங்கள் உள்ளன. இந்த ஒன்பதும் ஒன்பது சக்திகளாகும். 64 கைமரங்கள் 64 கலைகளாகும். 21600 ஓடுகள் மனிதன் தினமும் விடுகின்ற சுவாச எண்ணிக்கை ஆகும். 72000 ஆணிகள் மனிதனுடைய சுவாச சஞ்சார ஆதாரமான நாடியை உணர்த்துவதாகும். மனிதனுடைய இதயம் இடப்புறத்தே இருப்பது போல் கர்ப்பக்கிரகம் மத்தியில் இல்லாமல் சிறிது தள்ளியே உள்ளது. கனக சபையில் உள்ள 18 தூண்கள் 18 புராணங்களையும் 5 வெள்ளிப்படிகள் ஐந்து எழுத்துகளையும், வெள்ளி–பலக்கனிகள் 96–ம் 96 தத்துவத்தையும், சிற்சபையில் உள்ள 5 தூண்கள் ஐம்பொறிகளையும், பிரம்ம பூடத்தில் உள்ள 10 தூண்களில் 6 தூண்கள் 6 சாஸ்திரங்களையும், மற்ற 4 தூண்கள் 4 வேதங்களையும் உணர்த்துகின்றன.



### சிதம்பர ரகசியம்

சிற்சபையின் வலப்பக்கத்தில் தங்கத்தினால் ஆன வில்வ இலை மாலை ஒன்று தொங்கவிடப்பட்டு உள்ளது. மூர்த்தி இல்லாமல் வில்வம் தொங்குவதே இரகசியம். இறைவன் ஆகாய உருவில் இருக்கிறார் என்பதே இதன் பொருளாகும்.

### நால்வர் வருகை

கிழக்குக் கோபுர வழியாக மாணிக்கவாசகரும், தெற்குக் கோபுர வழியாக ஞானசம்பந்தரும், மேற்குக் கோபுர வழியாக அப்பரும், வடக்குக் கோபுர வழியாக சுந்தரரும் வந்து சபாநாயகரை வழிபட்டுள்ளனர்.

### ஐந்து சபைகள்

சிற்றம்பலம், பொன்னம்பலம், பேரம்பலம், நிருத்தசபை, ராசசபை என 5 சபைகள் உள்ளன.

### நடராஜர் அபிஷேகங்கள்

1. சித்திரை திருவோணம் மாலை அபிஷேகம், 2. ஆனி உத்திரம் உதயகாலத்திற்கு முன் ஆயிரங்கால் மண்டபத்தில் அபிஷேகம், 3. ஆவணி வளர்பிறை சதுர்த்தசி மாலையில் அபிஷேகம், 4. புரட்டாசி வளர்பிறை சதுர்த்தசி மாலை அபிஷேகம், 5. மார்கழி திருவாதிரை ஆயிரங்கால் மண்டபத்தில் உதயத்திற்கு முன் அபிஷேகம், 6. மாசி வளர்பிறை சதுர்த்தசி மாலை அபிஷேகம்.

### திருவிழாக்கள்

1. மார்கழி திருவாதிரை, 2. ஆனி உத்திரத்தில் வருகின்ற ஆனித் திருமஞ்சனம். 10 நாள் திருவிழாக்கள்.

### தலத்துக்குரிய நூல்கள்

தமிழகத்திலேயே அதிகமான நூல்களாலும், பாடல்களாலும், போற்றப்பெற்ற திருத்தலமாகும். தமிழ் நூல்கள் – 41, வடமொழி நூல்கள்–41.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

# அருள்மிகு திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையம் வடலூர்



திரு அருட்பிரகாச வள்ளலார் 1872ல் தோற்றுவித்த சத்திய ஞானசபை

## தெய்வ நிலையம் அமைவிடம்

கடலூர் மாவட்டம், கடலூரிலிருந்து தென்மேற்கே 35 கிலோ மீட்டர் தொலைவிலும் சிதம்பரத்திலிருந்து மேற்கே 30 கிலோ மீட்டர் தொலைவிலும் விருத்தாசலத்திலிருந்து கிழக்கே 20 கிலோ மீட்டர் தொலைவிலும் வள்ளலார் தெய்வநிலையம் அமைந்துள்ளது. வடலூர் புகைவண்டி நிலையத்திலிருந்து தெற்கே 1 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

## தெய்வ நிலையத்தைத் தோற்றுவித்தவர்

திருவருட்பிரகாச வள்ளலார் (எ) சிதம்பரம் இராமலிங்க அடிகள்

## திருவருட்பிரகாச வள்ளலார் வரலாறு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | இராமலிங்கம் |
| சிறப்புப் பெயர் | : | திருவருட்பிரகாச வள்ளலார் |
| பிறப்பு | : | 05.10.1823 சுபானு வருடம் புரட்டாசி மாதம் 21ம் நாள் ஞாயிற்றுக்கிழமை |

| | | |
|---|---|---|
| பிறந்த ஊர் | : | மருதூர். சிதம்பரம் செல்லும் வழியில் அமைந்தது. |
| பெற்றோர் | : | இராமையாப்பிள்ளை – சின்னம்மையார் |
| உடன்பிறந்தோர் | : | சபாபதி, பரசுராமன், சுந்தராம்பாள், உண்ணாமுலை. |

| | | | |
|---|---|---|---|
| வாழ்ந்த இடங்கள்: | சென்னை | – | 1825 – 1858 |
| | கருங்குழி | – | 1858 – 1867 |
| | வடலூர் | – | 1867 – 1870 |
| | மேட்டுக்குப்பம் | – | 1870 – 1874 |

## இறவாப் பெருநிலை:

**30.01.1874 ஸ்ரீமுக வருடம் தைமாதம் 19ம் நாள் வெள்ளிக்கிழமை இரவு 12.00 மணி.**



திரு.அருட்பிரகாச வள்ளலார் 1874ல்
திருக்காப்பிட்டுக் கொண்ட திரு அறை

## வள்ளல் பெருமானாரின் சன்மார்க்க நெறிகள்

1. புலால் உண்ணலாகாது
2. சிறுதெய்வ வழிபாடுகூடாது
3. கடவுள் ஒருவரே, அவர் அருட்பெருஞ்ஜோதி.
4. தெய்வங்கள் பெயரில் உயிர்ப்பலி கூடாது

5. சாதி, சமய, மத வேறுபாடுகள் கூடாது
6. எவ்வுயிரையும் தம் உயிர்போல் எண்ணும் ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமையைக் கடைப்பிடிக்க வேண்டும்.
7. ஏழைகளின் பசி தவிர்த்தலே பேரின்ப வீட்டின் திறவுகோல்.
8. இறந்தவரைச் எரிக்க கூடாது. புதைக்க வேண்டும்.
9. எக்காரியத்திலும் பொது நோக்கம் வேண்டும்
10. எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க.



05.10.1823 ல் திருஅருட்பிரகாச வள்ளலார் அவதரித்த இல்லம் மருதூர்.

வள்ளலார் அவதரித்த மருதூர் இல்லம் :–

சிதம்பரம் வட்டத்தில் வடலூருக்குத் தென்கிழக்கில் 12 கி.மீ தொலைவில் நெல் வயல்கள் சூழ்ந்த பசுமை நிறைந்த கிராமமாக மருதூர் அமைந்துள்ளது.

அரும்பசியோடு அன்னம் வேண்டி அடியவர் வடிவில் இல்லத்தை நாடி வந்த இறைவனுக்கு சின்னம்மையார் அன்னம் வழங்கினார். பசியாறி அகம் மகிழ்ந்த அடியவரின் அருளாசியின்படி இராமையாவுக்கும் சின்னம்மைக்கும் அருந்தவப் புதல்வராக நமது வள்ளற்பெருமானார் 05.10.1823 சுபானு ஆண்டு புரட்டாசி 21 ஞாயிறு மாலை 5.54 மணியளவில் அவதரித்தார்.

வள்ளற் பெருமானார் அவதரித்த இல்லம் திருப்பணி

செய்யப்பெற்று அழகுற திகழ்கின்றது. இங்கு தினசரி காலை 5 மணி முதல் இரவு 8 மணிவரை திருவருட்பா பாடல்களைப் பாடி வழிபாடு செய்யப் பெறுகின்றது.

## வள்ளற் பெருமானார் தண்ணீரால் விளக்கு எரித்த நற்கருங்குழி இல்லம் :—



திருஅருட்பிரகாச வள்ளலார் வாழ்ந்த கருங்குழி இல்லம்.

தில்லையில் வள்ளற்பெருமானாரைக் காண நேர்ந்த கருங்குழியைச் சேர்ந்த மணியக்காரர் வேங்கடரெட்டியார் என்பவர் தம்மூர்க்கு வருமாறு அழைத்தார். பெருமானாரும் கருங்குழிக்கு எழுந்தருளினார். வேங்கடரெட்டியார், பெருமானாரை அன்போடு வரவேற்று உபசரித்துக் கருங்குழியில் தம் இல்லத்திலேயே தங்கியருள வேண்டினார். ரெட்டியாரின் உண்மை அன்பை உணர்ந்த பெருமானார் அவரது விருப்பத்திற்கிணங்கக் கருங்குழியில் அவரில்லத்திலேயே தங்கினார்கள். 1858ல் கருங்குழிக்கு வந்தது முதல் 1867ல் தருமச்சாலையை வடலூரில் ஏற்படுத்தும் வரை கருங்குழியே பெருமானாரின் உறைவிடமாயிற்று. இவ்வில்லத்தில் இருந்தபோது ஒரு நாள் இரவு பெருமானார் எழுதிக் கொண்டிருக்கும் போது விளக்கு மங்கவே, தண்ணீர் சொம்பை எடுத்து விளக்கில் ஊற்றினார்கள். விளக்கும் இரவு முழுவதும் நன்கு எரிந்தது. இக்காலத்தில் அடிக்கடி

பெருமானார் சிதம்பரம் சென்று வழிபடுவதை வழக்கமாக கொண்டார்கள். திருமுதுகுன்றம், திருவதிகை, திருவண்ணாமலை முதலிய தலங்களுக்குச் சென்றும் வழிபட்டார்கள். கருங்குழியில் வசித்த காலத்தில் சிதம்பர வழிபாட்டு காலம் எனலாம். நான்காம் திருமுறையும் ஆறாம் திருமுறையின் முன்பகுதிப் பதிகங்களும் இக்காலத்தில் பாடப்பெற்றவை.

## வடலூர் சத்திய தருமச்சாலை



திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம், சத்திய தருமச்சாலை

பிரபவ வருடம் வைகாசி மாதம் 11 ம் தேதி (23.05.1867) வியாழக்கிழமை தருமச்சாலைத் தொடக்க விழா சிறப்பாக நடைபெற்றது. முன்னரே கட்டி முடிக்கப் பெற்றிருந்த தற்காலிக மண் கட்டிடத்தில் அற்றார் அழி பசி தீர்க்கும் ஜீவகாருண்ய ஒழுக்கப் பேரறம் தொடங்கப் பெற்றது. நிலையான செங்கற் கட்டிடங்கள் கட்டுதற்கு அடிப்படை நாட்டப்பெற்றது. கிணறு முதலியன தோண்டும் பணிகளும் தொடங்கப்பட்டன. நிலையான (நிரந்தரமான) செங்கற் கட்டிடங்களுக்கு அடிப்படை அஸ்திவாரம்) இடுதல் ஒரு புறமும் முன்னரே கட்டி முடிக்கப் பெற்றிருந்த தற்காலிக சிறு கூரைக் கட்டிடத்தில் அன்னமளிக்கத் தொடங்குதல் பிறிதொரு புறமும் நிகழ, இங்ஙனம் கால்கோள் விழாவும் திறப்பு விழாவும் ஒரே இடத்தில் ஒரே நேரத்தில் ஒருங்கே

கொண்டாடப் பட்டது. கால்கோள் விழாவும் திறப்பு விழாவும் ஒருங்கே கொண்டாடப்பட்ட இஃது உலக வரலாற்றிலேயே முதல் நிகழ்ச்சியாகும். அதற்குப் பின்னும் நிகழ்ந்ததில்லை. பெருமானார் அருளியலோடு உலகியலிலும் வல்லவர்.



23.05.1867 ல் வள்ளலார் திருக்கரத்தால் ஏற்றி இன்று வரை தொடர்ந்து எரியும் அணையா அடுப்பு

## வடலூர் சத்திய ஞானசபை :—

இறைவனை அருட்பெருஞ்ஜோதி வடிவிற் கண்ட பெருமானார் அருட்பெருஞ்ஜோதி வழிபாட்டிற்கென வடலூரில் (1872ல்) சத்திய ஞானசபையை நிறுவினார்கள். உலகில் வேறு எங்கும் இல்லாத தனிபெரும் அமைப்பாகவும் சாதி, மதம், இனம், மொழி தேசம் முதலிய எந்தவித வேறுபாடுகளும் இல்லாத நிலையில், அனைவரும் பிரார்த்தனை செய்யும் முறையில் சத்திய ஞானசபையை பெருமானார் அமைத்தார்கள்.

உத்தரஞான சிதம்பரமாகிய வடலூரில் சத்திய தருமச்சாலைக்கு அருகில் சத்தியஞானசபை அமைந்துள்ளது. 1871 பிரஜோற்பத்தி ஆண்டு ஆனித் திங்களில் சபை கட்டத் தொடங்கப் பெற்றது. சபை எண்கோண வடிவானது. தெற்கு நோக்கியது. சபையின் முன் மண்டபத்தில் கீழ்ப்புறம் பொற்சபையும் மேற்புறம் சிற்சபையும் உள்ளன. கிழக்கு வாயிலையுடைய சிற்சபை, தெற்கு நோக்கிய வாயிலையுடைய ஞானசபை, மேற்கு நோக்கிய

வாயிலையுடைய பொற்சபை ஆகிய மூன்றும் ஆய்த எழுத்தைப் போன்று அமைந்துள்ளன. எண்கோண வடிவான ஞானசபைக்குள் பன்னிருகால் மண்டபம் ஒன்றும் நாற்கால் மண்டபம் ஒன்றும் ஒன்றனுள் ஒன்றாக உள்ளன. நாற்கால் மண்டபத்தின் நடுவே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் எழுந்தருளியுள்ளார். அவ்வருட்பெருஞ்ஜோதியை மறைத்துக் கொண்டு ஏழு வெவ்வேறு நிறத் திரைகள் தொங்குகின்றன. இத்திரைகள் அருட்பெருஞ்ஜோதி அகவலில் பின் வருமாறு கூறப்படுகின்றன.

கரைவின் மாமாயைக் கரும்பெருந் திரையால்
அரைசது மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பேருறு நீலப் பெருந்திரை அதனால்
ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பச்சைத் திரையாற் பரவெளி அதனை
அச்சுற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
செம்மைத் திரையாற் சித்துறு வெளியை
அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பொன்மைத் திரையாற் பொருளுறு வெளியை
அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
வெண்மைத் திரையான் மெய்ப்பதி வெளியை
அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
கலப்புத் திரையாற் கருதனு பவங்களை
அலப்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி.

– அருட்பெருஞ்ஜோதி அகவல் 813–826

பெருமானார் சத்தியஞானசபையை இயற்கை விளக்கம் என்பார். அகத்தே காணற்குரிய அனுபவத்தைப் புறத்தே பாவனையாகக் காட்டுவதே சத்திய ஞானசபை. திரைகளெல்லாம் தத்துவப் படலங்களே; மாயா திரைகளே. நம்மிடத்திலுள்ள அஞ்ஞானமாகிய திரைகள் நீங்கப் பெற்றால் ஆன்ம ஒளியாகிய அருட்பெருஞ்ஜோதியை தரிசிக்கலாம். அகத்தே தாம் பெற்ற அருட்பெருஞ்ஜோதி அனுபவத்தையே புறத்தில் சபையாகக் காட்டினார் பெருமானார்.

சத்திய ஞானசபை என்னுள் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்

6–ம் திருமுறை 2173

திருந்தும்என் உள்ளத் திருக்கோயில் ஞான
சித்தி புரம்எனச் சத்தியம் கண்டேன்

6–ம் திருமுறை 533

என்னும் திருவாக்குகளைக் காண்க.

### சபையில் முதல் தைப்பூச விழா 25.01.1872

ஆனித் திங்களிற் கட்டத் தொடங்கப் பெற்ற சபைக் கட்டிடம் தைத் திங்களிற் கட்டி முடிக்கப் பெற்றது. பிரஜோற்பத்தி தை 13 வியாழக்கிழமை (25.01.1872 ) பூச நாளில் முதன் முதலாகச் சபையில் வழிபாடு தொடங்கப் பெற்று அனைவரும் அருட்பெருஞ்ஜோதி தரிசனத்தைக் கண்டு களித்தனர். அருட்பெருஞ் ஜோதியாகிய அகண்டத்தின் ஒளி ஆறடி ஒன்பதங்குல உயரமும் நாலடி இரண்டங்குல அகலமும் உள்ள கண்ணாடியில் பேரொளியாகப் பிரதிபலிப்பதே சபையிற்காணும் அருட்பெருஞ்ஜோதி தரிசனமாம். அக்கண்ணாடியைச் சித்திவளாகத்தில் ஒரு மண்டலம் (48 நாள் ) வழிபாட்டில் வைத்திருந்து பின்பு சபையில் நிறுவச் செய்தனர் என காரணபட்டு கந்தசாமி (ச.மு.க.) கூறுவர். நம் ஆன்மாவை ஏழு சக்திகள் மறைத்துக்கொண்டு இருக்கிறது. அவற்றை விலக்கினால் இறைவன் ஜோதி வடிவில் காட்சி தருவான் என்பதே இதன் தத்துவம். 1872– ஆம் ஆண்டு முதலில் ஜோதி தரிசனம் காண்பிக்கப்பட்டது.

### மாதப் பூசம்:

பிரதி மாதந்தோறும் பூச நட்சத்திரத்தன்று இரவு எட்டு மணிக்கு ஆறு திரைகள் நீக்கி ஜோதி தரிசனம் மூன்று முறை காண்பிக்கப்படும்.

### தை பூசப் பெருவிழா:

ஆண்டுதோறும் தைப்பூசம் அன்று மட்டும் ஏழு திரைகளை விலக்கி ஆறு காலம் ஜோதி தரிசனம் நடைபெறும்.

### சித்திவளாகத் திருமாளிகை மேட்டுக்குப்பம் :–

கடலூர் மாவட்டம், வடலூர்க்குத் தெற்கே 5 கி.மீ தொலைவில் மேட்டுக்குப்பம் என்கின்ற கிராமம் அமைந்துள்ளது. இங்கு வைணவ ஆசாரியார்கள் தங்கும் திருமாளிகை ஒன்றும்

இருந்தது. திருமாளிகையில் பல காலமாக வைணவ ஆசாரியார்கள் வராததால் திருமாளிகை பயனின்றி இருந்தது.



திருஅருட்பிரகாச வள்ளலார் தெய்வ நிலையம்,
மேட்டுக்குப்பம் சித்தி வளாக திருஅறை.

திருமாளிகையை உறைவிடமாகக் கொண்டு எழுந்தருளியிருக்க வேண்டுமென மேட்டுக்குப்பம் கிராமவாசிகள் பெருமானாரை மிகவும் பணிவன்போடு வேண்டினர். அவர்களது அன்பான வேண்டுகோளுக்கு இணங்க அத் திருமாளிகைக்குச் சித்திவளாகத் திருமாளிகை என்று பெயரிட்டு அதில் பெருமானார் எழுந்தருளினார்கள்.

சித்திவளாகம் என்பது பெருமானார் இட்ட பெயர். இந்தப் பெயர் அருமையும், ஆழ்ந்த பொருளும் உடையது. சித்தி என்பது பேரின்ப வாழ்வு. வளாகம்–இடம். சித்திவளாகம்– பிறப்பும் இறப்பும் இல்லாமல் எப்போதும் தடைபடாத இயற்கை பேரின்பத்தை வழங்குகின்ற மகோன்னத இடம்.

### சத்திய ஞானதீப வழிபாட்டு விதி 1873 :–

பெருமானார் ஸ்ரீமுக வருடம் கார்த்திகை மாதம் கார்த்திகை தீபத் தினத்தன்று உள்ளிருந்த விளக்கைத் திருமாளிகைப் புறத்தில் வைத்து, “இதைத் தடைபடாது

ஆராதியுங்கள், இந்தக் கதவை சாத்திவிடப் போகின்றோம். இனி கொஞ்ச காலம் எல்லோரும், ஆண்டவர் இப்போது தீப முன்னிலையில் விளங்குகின்ற படியால் உங்களுடைய காலத்தை வீணிற் கழிக்காமல், நினைந்து நினைந்து என்னும் தொடக்கமுடைய 28 பாசுரங்களடங்கிய பாடலிற் கண்டபடி, தெய்வ பாவனையை இந்தத் தீபத்தில் செய்யுங்கள். நானிப்போது இந்த உடம்பிலிருக்கின்றேன். இனி எல்லா உடம்பிலும் புகுந்து கொள்வேன்'' என்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.

சித்திவளாக திருமாளிகையில் வள்ளற்பெருமானார் ஸ்ரீமுக தை 19 (30.01.1874) வெள்ளிக்கிழமை அன்று திருஅறையில் சென்று திருக்காப்பிட்டுக் கொண்டு அருட்பெருஞ் ஜோதியானார்கள். ஆண்டு தோறும் தைப்பூசம் ஜோதி தரிசனத்திற்கு மூன்றாம் நாள் திருஅறை தரிசனம் நடைபெறும்.

''அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி''

– என்பதே வள்ளலார் அருளிய மகாமந்திரமாகும்.

வள்ளலார் அவதரித்த மருதூர் இல்லம், தண்ணீரால் திருவிளக்கு எரித்து திருவருட்பா அருளிய கருங்குழி இல்லம், வடலூர் சத்திய தருமச்சாலை, சத்திய ஞானசபை, மரணமில்லாப் பெருவாழ்வு பெற்ற மேட்டுக்குப்பம் சித்தி வளாகத் திருமாளிகை, ஆகிய இடங்களைத் தரிசித்து அருள் இன்பம் பெறலாம்.

தங்கும் வசதி:–

10 அறைகள் கொண்ட பக்தர்கள் தங்கும் விடுதி உள்ளது.

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
திருவருட்பிரகாச வள்ளலார் தெய்வநிலையம், பார்வதிபுரம்,
வடலூர்–607303 தொலைபேசி எண்.: 04142 259250.
இணையதள முகவரி: www.vallalardheivanilayam.org
மின்னஞ்சல் முகவரி: vallalardheivanilayam@gmail.com

# அருள்மிகு விருத்தகிரீஸ்வரர் திருக்கோயில்
# விருத்தாசலம்
### (பாடல் பெற்ற தலம்)



**திருக்கோயில் அமைவிடம்**

விருத்தாசலம் மணிமுத்தாறு ஆற்றின் மேற்குக் கரையோரமாக இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

**இறைவன் பெயர்**

அருள்மிகு விருத்தகிரீஸ்வரர், பழமலை நாதர்.

**இறைவி பெயர்**

அருள்மிகு விருத்தாம்பிகை, பாலாம்பிகை.

**தல விருட்சம்**

வன்னி

**தல வரலாறு**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இத்திருத்தலத்தில் வீற்றிருந்த சிவபெருமானைப் பாடி பன்னீராயிரம் பொன்னை

இறைவனிடமிருந்து பெற்று இத்திருத்தலத்திற்கு அருகே உள்ள மணிமுத்தாற்றில் இட்டு திருவாரூர் சென்று தியாகராஜ பெருமானைப் பாடி கமலாலயத்தில் மீண்டும் பொற்காசுகளை



எடுத்த அற்புதம் விருத்தகிரீஸ்வரர் பெருமானின் கருணையால் நடந்த சிவத்தலம் இதுவாகும்.



மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் முறையாக அமைந்த தலங்களில் ஒன்று. காசியிலும் வீசம் அதிகம் என்பதால் இத்தலம்

விருத்தகாசி என வழங்கப்படுகிறது. விருத்தாசலம் என்று பெயர். சைவ சமயகுரவர்கள் காலத்தில் திருமுதுகுன்றம் என்றே வழங்கப்பட்டு வந்துள்ளது. திருமுதுகுன்றம் என்ற தமிழ்ச்சொல் வடமொழியில் விருத்தாசலம் என அழைக்கப்படுகிறது. (விருத்தாசலம், விருத்தம் = பழமை + அசலம் மலை) பழமைமலை என்பது திருமுதுகுன்றம் என ஆகி இப்பொழுது விருத்தாசலம் என அழைக்கப்பட்டு வருகிறது. இந்த மலை ஆதியில் தோன்றியதால் பழமலை என வழங்கப்பட்டதாக ஞானக்கூத்தரின் விருத்தாசலம் புராண வழியில் அறிய முடிகிறது.

## தலச் சிறப்பு

சைவ உலகுக்குச் சிவாயநம என்கின்ற ஐந்தெழுத்து எவ்வளவு முக்கியமாகக் குறிப்பிடப்படுகிறதோ அதேபோன்று ஐந்து என்ற எண்ணின் பெருமை இத்திருக்கோயிலில் சிறப்பாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. ஐந்து பிரகாரங்கள், ஐந்து கோபுரங்கள், ஐந்து தீர்த்தங்கள், ஐந்து கொடிமரங்கள், ஐந்து நந்திகள், ஐந்து மூர்த்திகள் என்ற பெருமை கொண்டது இத்திருத்தலம். ஞானசம்பந்தர் இத்திருக்கோயிலுக்கு வந்து பழமலை நாதரைப் பாடியுள்ளபடியால் அவருடைய காலமாகிய



கி.பி.7–ஆம் நூற்றாண்டு முன்பே இத்திருக்கோயில் தோன்றியிருக்கலாம் என அறிய முடிகிறது.

விபச் சித்து முனிவர் பழமலை நாதரால் ஆட்கொள்ளப்பட்டு முதலில் திருப்பணி செய்ததாகப் புராணம் கூறுகிறது. திருப்பணி செய்யும்போது வேலையாள்களுக்கு இத்தலத்தின் விருட்சமாகிய வன்னி மரத்தின் இலைகளைப் பறித்து மூலிகையாக விபச் சித்து முனிவர் கொடுத்ததாகவும், அந்த இலைகள் அவரவர் உழைப்பிற்கேற்ப ஊதியமாக மாறும் என்ற செய்தி இன்னும் வழக்கில் உள்ள ஒன்றாகும். 'நெடியான் நான்முகனும் இறைவியோடு இந்திரனும்', 'முடியால் வந்து இறைஞ்சும் முதுகுன்றம் அமர்ந்தவனே' என சுந்தரர், தேவர்கள் எல்லாம் வந்து வழிபட்டது இத்திருமுதுகுன்றம் என்கிறார்.

இத்தலத்தில் உயிர் நீத்தவர்களின் ஆன்மா முக்தி அடையும் என்ற நம்பிக்கை உள்ளது. இதனால்தான் ஞானசம்பந்தர் முக்தி வரும் உயர் முதுகுன்றம் என்று குறிப்பிட்டுள்ளார்கள். தருமை ஆதீனத்துக்கு குரு முதல்வர் குருஞானசம்பந்தர் முக்திதரும் தலங்களில் ஒன்று முதுகுன்றம் எனக் குறிப்பிட்டுள்ளார்கள்.

இத்தலத்தில் இறந்தவர்களை இறைவன் தன் மடிமீதுகிடத்தி ஐந்தெழுத்து உபதேசம் செய்ய, பெரிய நாயகி (விருத்தாம்பிகை) முந்தானையால் வீசி களைப்பை நீக்கி முடிவில் இருவரும் அந்த உயிருக்கு முக்திப்பேறு அளிப்பர் எனக் கந்தபுராண வழி நடைப்படலப் பாடலாலும் விருத்தாசலம் புராணத்தாலும் இச்சிறப்பு வெளிப்படுகிறது.

திருவண்ணாமலையிலிருந்து சிதம்பரம் செல்ல வந்த குருநமச்சிவாயர் இத்திருக்கோயிலில் இரவு நேரத்தில் தங்கினார். பசி காரணமாகப் பெரியநாயகி தாயாரிடம் சோறு வேண்டி கிழத்தி என்ற சொல்வரும்படி ஒரு பாடல் பாடினார். பெரியநாயகி வயதான வடிவில் வந்து கிழவி எவ்வாறு சோறு கொண்டு வரமுடியும் என்றும் இளமையுடன் இருந்தால் தான் முடியும் எனக்கூற, அவர் " அத்தன் இடத்தாளே முற்றா இளமுலை மேலார வடத்தாளே சோறு கொண்டுவா" என முடியும் பாடலைப் பாடியுள்ளார். அவர் பாட்டிற்கு மகிழ்ந்து இளமைக் கோலத்துடன் பெரியநாயகிக் காட்சிகொடுத்துள்ளார். அன்று முதல் இளைய நாயகி சந்நிதி ஏற்பட்டிருப்பதாகக் கூறுவர். இந்த அம்மனே இப்பொழுது

பாலாம்பிகை என்று அழைக்கப்படுகிறார்.

இத்தலத்தில் காமிகலிங்கம் முதலிய 28 ஆகமலிங்கங்கள் உள்ளன. சிவத்தலங்கள் ஆயிரத்து எட்டில் தலைமையான நான்கினுள் இத்தலமும் ஒன்றாகும்.

## தலத்தைப் பாடியவர்கள்

இத்தலம் மூவராலும் வழிபட்டது. வழிபட்ட சமய குரவர்களில் ஞானசம்பந்தர் 9 பதிகங்களையும் திருநாவுக்கரசர் ஒரு பதிகத்தையும் சுந்தரர் 3 பதிகங்களையும் பாடியுள்ளார்கள்.

அருணகிரிநாதர், ஞானஸ்கந்தர், சிவப்பிரகாச சுவாமிகள், குமாரதேவர், சிதம்பரசுவாமிகள், குருநமச்சிவாயர், சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் போன்றோர்கள் இத்தலத்தின் சிறப்பைப் பல பாடல்கள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்கள்.

## பூஜை காலங்கள்

தினசரி 6 கால பூஜைகள்.

## திருவிழாக்கள்

மாசிமக பிரம்மோற்சவம் பத்து தினங்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். ஆடிப்பூர விழாவும் மிகச்சிறப்பு வாய்ந்ததாகும்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை


அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு விருத்தகிரீஸ்வரர் திருக்கோயில்,
விருத்தாசலம்.
தொலைபேசி எண்– 04143 230203.
இணையதள முகவரி : www.virudhagireeswartemple.org
மின்னஞ்சல் முகவரி : virudhagireeswarartemple@gmail.com

# அருள்மிகு பாடலேஸ்வரர் திருக்கோயில்
# திருப்பாதிரிப்புலியூர்
### (பாடல் பெற்ற தலம்)



‘சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமசிவாயவே’

–திருநாவுக்கரசர்.

## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டத் தலைநகர், திருப்பாதிரிப்புலியூரில் அமைந்துள்ளது. விழுப்புரம்–சிதம்பரம் இருப்புப்பாதையில் திருப்பாதிரிப்புலியூர் இரயில் நிலையத்திற்கு அருகில் மேற்கில் உள்ளது. பேருந்து நிலையத்திலிருந்து மேற்கே அரை கி.மீ தொலைவில் உள்ளது. பண்டைத் தமிழ்நாட்டில் நடுநாடெனப் பெயரமைந்த நாட்டில் உள்ள பாடல் பெற்ற 22 தலங்களில் 18வது தலமாகும். இறைவன், இறைவி கோயில்கள் தனித்தனியாக கிழக்கு நோக்கியும், எழுவர்

மாதர் கோயில் வடக்கு நோக்கியும் உள்ளது. 5 திருச்சுற்றுகள் உள்ளது. 5ம் திருச்சுற்று இராஜவீதியில் 4 மூலைகளிலும் விநாயகர் கோயில்கள் அமைந்துள்ளன.

### இறைவன் பெயர்

அருள்மிகு கன்னிவனநாதன், தோன்றாத்துணைவன், கடைஞாழலுடைய பெருமானடிகள், சிவக்கொழுந்தீசன், உத்தரேசன், பாடலநாதன், கரையேற்றும் பிரான்.

### இறைவி பெயர்

அருள்மிகு பெரியநாயகி, தோகையாம்பிகை, அருந்தவநாயகி, பிரஹந்நாயகி.

### கோபுரம்

ஏழுநிலை மாடங்களோடு காட்சியளிக்கிறது

### தல விருட்சம்

12 வகையான பூக்களைப் பூக்கும் பாதிரிமரம்.

### தீர்த்தம்

சிவஹர தீர்த்தம் (சிவன்– சக்தி)

### பூஜைகள்

ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன

1. காலை 6–7 மணிக்குள் உஷத் கால பூஜை
2. காலை 8–9 மணிக்குள் காலசந்தி
3. பிற்பகல் 11–12 மணிக்குள் உச்சிக்காலம்
4. மாலை 5–6 மணிக்குள் சாயரட்சை
5. இரவு 7–8 மணிக்குள் இரண்டாம் காலம்
6. இரவு 8–9 மணிக்குள் அர்த்தசாமம்

### தல வரலாறு

அப்பர் சுவாமிகளைச் சைவ மதத்திலிருந்து சமண மதத்திற்கு மாற்ற, பல்லவ மன்னன் எடுத்த முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றதால் இறுதியாக, அவரைக் கல்லைக் கட்டி கடலில் எறியும்போது, நமசிவாயத்

திருப்பதிகம் பாடி, கல்லையே மிதவையாக்கிக் கரையேறிய அற்புதம் நிகழ்ந்த திருத்தலம் இதுவாகும். கரையேறிய இடம் இன்றும் கரையேறிவிட்டகுப்பம் என்று அழைக்கப்படுகிறது.



அம்பிகையின் சாபம் இத்தலத்திலேயே தீர்ந்தது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றாலும் சிறப்புப் படைத்தது. உலகத்து உயிர்கள் உய்யவேண்டு மென்பதற்காகப் பரமன், பிராட்டியுடன் பகடையாட திருவுளங்கொண்டு உமையம்மையின் தோழிகள் மாணிக்கப் பலகை, மரகதக்கல், வைரத்தாலான பகடை கருவி கொண்டுவந்து கொடுத்துப் பகடை ஆடினார்கள். பலமுறை ஆடியும், தோல்வி பெருமானுக்கே. ஆனால் வெற்றி தனக்கே என அவர் கருதினார். அருகில் இருந்த திருமாலும் எவர்பக்கம் கூறினாலும் தான் அபசாரப்பட நேரிடும் எனக் கருதி ஆட்டத்தைக் கவனிக்கவில்லை என்று கூறிவிட்டார். பெருமாட்டி கோபம் மேலோங்க இறைவன் திருக்கண்களை மறைப்பேன். ஒளி தந்தால் இறைவன் வெற்றி பெற்றதாகவும், ஒளி தராவிட்டால் இறைவி வெற்றி பெற்றதாக ஒப்புக்கொள்ளவேண்டும் என்று சொல்லி இறைவன் கண்களை மூடியதும், அண்டங்கள் இருண்டன.



ஒரு கண நேரம் நீடித்த இந்நிகழ்ச்சி தேவர்களுக்கும், யாவர்க்கும் பல யுகங்கள் நீடித்தது.

இறைவி விளைவுகள் கருதாது செய்ததை வருந்தி மன்னிப்பு கேட்டு விமோசனம் அருளுமாறு இறைவனிடம் வேண்டியபோது இறைவன், "தேவியே நீ பூவுலகம் சென்று 1008 தலங்களையும் தரிசித்து வரும்போது எந்தத் தலத்தில் உன் இடது தோளும், இடக்கண்ணும் துடிக்கின்றதோ அந்த இடத்தில் தவம் மேற்கொண்டால் அங்கு வந்து திருமணம் புரிவோம்" என்று கூறியதால் இங்கு வந்து அருந்தவம் செய்து இறைவன், இறைவி திருமணம் நடைபெற்ற தலம் இதுவாகும்.



## சிவகர தீர்த்தம்

சிவகர தீர்த்தம் என்பது சிவனும், சக்தியும் ஆகும்.



இதில் நீராடி பல முனிவர்கள் முக்தியடைந்தனர். கங்கையின் தவத்தின் பொருட்டு பரமன் கங்கையின் முன்தோன்றி மாசி



மகத்தன்று சிவகர தீர்த்தம் மற்றும் கடலில் நடைபெறும் தீர்த்தவாரியில் மூழ்கி தன் கலைகளில் ஆயிரத்தில் ஒரு பங்கைச் சிவகர தீர்த்தத்தில் வருடந்தோறும் விட்டுச் செல்வது ஐதீகம்.

மத்தியந்தன முனிவரின் மகனார் நியமத்தோடு பூசித்து அவர் வேண்டிய புலிக்காலும், புலிக்கையும் பெற்ற தலம் என்பதால் புலியூர் என்ற பெயர் பெற்றது திருப்பாதிரிப்புலியூர் தலமாகும். வேதம் உணர்ந்த உருத்திரசன்மன் என்பவர் வழிபட்டு கண் குருடு நீங்கியதோடு வினைப்பாசமும் நீங்கப் பெற்றார். சத்தியசந்தன் தன் மனைவியோடு தரிசித்து சூலை நோய் நீங்கப்பெற்றார். மார்த்தாண்டன் என்னும் ஓர் அந்தணர் இறைவனைப் பூசித்து குடல்நோய் நீங்கப் பெற்றார்.

### பிரார்த்தனை தலம்

சுக்கிரவாரங்களில் (வெள்ளிக் கிழமைகளில்) சிவகர தீர்த்தத்திலும் கடலிலும் நீராடி இறைவனை வணங்குவோர் உலகில் நினைத்ததையெல்லாம் பெறுவர்.

செவ்வாய்க்கிழமைகளில் 108 தாமரை மலர் கொண்டு அர்ச்சனை செய்து 108 திருவிளக்கிட்டு வழிபட்டால் பல பாவங்களும் நீங்கப்பெற்று இம்மையிற் பெரும்பதவி யேற்றிருந்தும் மறுமையில் பேரின்ப முக்தியும் பெறுவர். பாடலேசுவரரையும், பெரியநாயகி அம்மனையும் தரிசனம் செய்தால் எப்பிறப்பினும் துன்புறார். இந்திரன் முதலான தேவர்கள் பதவி பெற்றதும் பிரம்மனும், திருமாலும் படைத்தல், காத்தல் தொழிலைப் பெற்றதும் அருந்தவநாயகியின் பூசைப்பயனாகும்.

காசியபரின் மனைவி அதீதி 10 வியாழக்கிழமை அருந்தவநாயகியைப் பூசித்ததால் ஆதிதேயரைப் பெற்றாள். கார்த்திகைப் பெண்கள் அறுவர் பூசித்ததால் முருகப்பெருமானுக்கு திருமுலை அருத்தும் பேறு பெற்றனர். அருக்கர் 12, இருடியர் பலர் தேவ கன்னியர் முதலானோர் பூசித்ததால் பற்பல பேறு பெற்றனர்.

### பாடலேசர் சித்தராய் விளையாடிய தலம்

ஆன்மாக்கள் உய்யும் வண்ணம், ஓர் சித்தராய் வடிவந்தாங்கி, திருப்பாதிரிப்புலியூர் திருவீதிகளில் 16 வயதினராய் இளஞ்சூரியனைப் போலத் திருமேனிகொண்டு திருவடியில் வேதங்களும், ஆகமங்களுமே பாதுகைகளாக விளங்கின. அப்போது சித்தர் வடிவினனாக உள்ள இறைவனைப் பார்த்த குருடர்கள் கண் பெற்றார்கள். செவிடர் கேட்கும் திறம் பெற்றனர். ஊமையர் பேச்சுத்திறன் பெற்றனர். தீரா நோயினர் நல்லுடல் பெற்றனர். முதுமையடைந்தவர்கள் இளமையானார்கள். மாணிக்கவாசகர், தில்லைத் திருநடனம் பார்த்து வடபுலியூராம் திருப்பாதிரிப்புலியூர் பெருமானைத் தரிசிக்க வந்தபோது கெடிலநதித் தென்கரையை அடைந்தார். அப்போது பெருநீர்ப்பெருக்குடன் காணப்பட்டது. மூன்று நாள் தண்ணீர் வடிந்துவிடும் என ஊண் உறக்கமில்லாது இருந்தபோது, வெள்ளம் வடியவில்லை. அப்போது சித்தராகத் தோன்றிய இறைவன் நீர்மேல் நடந்துவரக் கூறி முன்னே சென்றார்.

ஆனால் மாணிக்கவாசகர் அஞ்சி நின்றார். சித்தரான சிவபிரான் சிறிது நேரம் கண்களை மூடச்சொல்லிவிட்டு பிரம்பால் ஏவி நதியை பாடலவனத்தின் வடபால் திசைமாறி ஓடச்செய்தார்.

## தலத்தைப் பாடியவர்கள்

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் இத்தலத்தில் பதிகம் பாடியுள்ளனர்.

## கல்வெட்டுகள்

இக்கோயிலில் 21 கல்வெட்டுகள் உள்ளன. இதில் சோழமன்னர் காலத்தது–19, விக்கிரம பாண்டியன் காலத்தது–1, விஜயநகர பரம்பரை வீர விருப்பண்ண உடையார் காலத்தது–1 உள்ளது. இக்கல்வெட்டுகள் மூலம் தேவதானம், பிரமதேயம், ஆகத்தானம் கொடுக்கப்பட்ட செய்திகள் புலனாகின்றன.

## ஊரின் பெயர்

கடைஞாழல், கன்னிவனம், கன்னிக்காப்பு, பாடலபுரம், ஆதிமாநகர், உத்தாரபுரம், பாதிரிப்பதி, திருப்பாதிரிப்புலியூர், வடபுலியூர், புலிசை என நூல்களில் கூறப்படுகிறது. கடைஞாழலூர் என்பதே கடலூர் என மருவிற்று.

## திருவிழாக்கள்

| | |
|---|---|
| சித்திரை | – இளவேனில் வசந்த விழா அதில் அப்பருக்கு 10 நாள்கள் விழா |
| வைகாசி | – வைகாசிப் பெருவிழா 13 நாள்கள் |
| ஆனி | – மாணிக்கவாசகருக்கு ஆனி, மார்கழி, இருமுறை 10 நாள்கள் விழா |
| ஆடி | – அம்பிகைக்குஆடிப்பூரம் 10 நாள்கள் விழா |

| | |
|---|---|
| புரட்டாசி | – நவராத்திரி விழா 10 நாள்கள் விழா |
| ஐப்பசி | – அன்னாபிஷேபிகம் மற்றும் கந்த சஷ்டி |
| கார்த்திகை | – சோமவார விழாக்கள் – முதல் சோமவாரத்தில் வெள்ளி இந்திரவிழா |
| மார்கழி | – திருவாதிரை மற்றும் தனுர்மாத விழா |
| தை | – தைமாதம் 5ம் நாள் பெண்ணையாற்றுத் தீர்த்தவாரி, தை அமாவாசை கடல் தீர்த்தவாரி |
| மாசி | – மாசிமகம் கடல் தீர்த்தவாரி, சிவஹர தீர்த்தவாரி |

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு பாடலேஸ்வரர் திருக்கோயில்
திருப்பாதிரிப்புலியூர், கடலூர்.
தொலைபேசி எண். : 04142– 236728
இணையதள முகவரி : www.padaleswarartemple.org
மின்னஞ்சல் முகவரி : padaleswarartemple@gmail.com



# அருள்மிகு கொளஞ்சியப்பர் திருக்கோயில்

## மணவாளநல்லூர்



**திருக்கோயில் அமைவிடம்:—**

இத்திருக்கோயில் கடலூர்—விருத்தாசலம் வேப்பூர் செல்லும் சாலையில் கடலூரிலிருந்து சுமார் 63 கி.மீ. விருத்தாசலத்திலிருந்து வேப்பூர் சாலையில் 3 கி.மீ தூரத்தில் அமைந்துள்ளது.

**இறைவன் பெயர்:—**

அருள்மிகு கொளஞ்சியப்பர்

**தல வரலாறு :—**

திருக்கோயில் அமைந்துள்ள இடம் நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பு அடர்ந்த காடாக இருந்தபோது பசுமாடு ஒன்று அக்காட்டில் உள்ள கொளஞ்சி செடிகளின் நடுவே பலிபீட

உருவில் இருந்த கற்சிலையின் மேல் தானாகப் பால் சொரிவதைக் கண்டு இது புனித தெய்வம் எனக் கருதி இதனை என்ன தெய்வமாகக் கருதி வணங்குவது என்பது குறித்து ஆராய்ந்தபோது விருத்தாசல தலவரலாற்றில் தம்பிரான் தோழர் என்று சொல்லக்கூடிய சுந்தரர் திருமுதுகுன்றம் அடையும்போது சுவாமி, அம்பாள் பெயர்களைக் கேள்வியுற்று முதுமைத் தன்மை வாய்ந்த இவர்களால் பொன், பொருள் கிடைக்காது எனப் பாடாது ஒதுங்கிச் சென்றபோது திருமுதுகுன்றத்தீசன் பக்தனோடு திருவிளையாடல் புரிய தனது மைந்தன் ஸ்ரீ முருகனை வேடனாக அனுப்பிப் பொன் பொருள் பறித்துச்சென்று பின்னர் சுந்தரமூர்த்தி சுவாமி திருமுதுகுன்றத்தில் பதிகம் பாடி கேட்டுக்கொண்டவாறு ஸ்ரீ முருகன் காவல் தெய்வமாக திருமுதுகுன்றத்தீசனின் நான்கு திசைகளிலும் எழுந்தருள அதன்படி திருமுதுகுன்றத்து மேற்கே அடர்ந்த காட்டில் பசுவின் கால் குளம்படிபட்டு ஸ்ரீ கொளஞ்சியப்பன் எனும் திருநாமம் பெற்று அருள்பாலித்து வருகிறார்.



தலச் சிறப்பு:–

அருள்மிகு கொளஞ்சியப்பராக விளங்கி வரும் ஸ்ரீ முருகன் பிற திருக்கோயில்களை விட மாறுபட்டு உருவமின்றி அரூவமாக இத்தலத்தில் எழுந்தருளியிருப்பதும், இத்திருக்கோயிலில் காலை **6** மணி முதல் இரவு **8.30** மணிவரை இடைவிடாது நடை திறந்து இருப்பதும் சிறப்பானதாகும்.

நாகன் கண்ணப்பரை புத்திரராகப் பெறுவதற்கு முருகப்பெருமானுக்கு வாரண சேவலோடு வரிமயில் குலங்கள் விட்டான் என்று சேக்கிழார் கூறியிருக்கிறார். இன்றைக்கும் இத்திருக்கோயிலில் தங்கள் காணிக்கையாகச் சேவல் விடுவது, முடி எடுத்தல், காது குத்துதல், காவடி எடுத்தல், குழந்தைகளுக்குக் காப்பிடுதல், திருமணம் செய்தல் பெருமளவில் நடைபெறுகிறது. தீராத நோய் உள்ளவர்கள் இத்திருக்கோயிலில் இடும்பன், கடம்பன் சந்நிதியில் தங்கி நோய் குணமாகிச் செல்வதும் பெருமளவில் நடைபெற்று வருகிறது.

கருணை இல்லம்:–

ஆதரவற்ற குழந்தைகளைக் கொண்டு கருணை இல்லம் ஒன்று பராமரித்து வரப்படுகிறது.

பிரார்த்தனை தலம்:–

அருள்மிகு கொளஞ்சியப்பர் பிரார்த்தனை தெய்வமாக விளங்குவதோடு நீதி தவறா நீதி மானாகவும் விளங்கி வருகிறபடியால் சேவார்த்திகள் தங்களின் நியாயமான குறைகளை நீதிமன்றத்தில் பிராது செய்வது போன்று அருள்மிகு



கொளஞ்சியப்பரிடமும் பிராது எழுதி அதனை முனியப்பர் சன்னிதி வேலில் கட்டிவிட்டால் கட்டிய 20 நாள்களுக்குள் பிராது எழுதியவரின் குறைகள் நிவர்த்தியாகி வருகின்றபடியால்

திருக்கோயிலில் இவ்வேண்டுதல் மிக முக்கியத்துவம் பெற்றதாக விளங்கி பிரார்த்தனை தலமாக விளங்குகின்றது.

### பூஜைகள்:–

இத்திருக்கோயிலில் தினசரி நான்கு கால பூஜை நடைபெறுகிறது.

### திருவிழாக்கள்:–

பௌர்ணமி, கிருத்திகை போன்ற மாத பூஜைகளும் சித்ரா பௌர்ணமி அன்று பால்குட அபிஷேக விழா, வைகாசி விசாகம் அன்று புஷ்பாஞ்சலி ஏகதின லட்சார்ச்சனை, கந்தர்சஷ்டி லட்சார்ச்சனை, சுவாமி புறப்பாடு, ஆங்கிலப்புத்தாண்டு மற்றும் தமிழ்ப்புத்தாண்டு, பிரமோற்சவமாக பங்குனி உத்திரத் திருவிழா 10 தினங்கள் மிகச் சிறப்புடன் நடைபெற்று வருகிறது. பங்குனி உத்திரத் திருவிழா அன்று லட்சக்கணக்கான மக்கள் கூடித் தங்கள் நேர்த்திக்கடன் செலுத்துவார்கள். இத்தகைய பல சிறப்பு வாய்ந்த பிரார்த்தனை தலத்தில் பக்தர்கள் வந்து வழிபட்டு கொளஞ்சியப்பர் அருளைப் பெறுகின்றனர்.

### தங்கும் வசதி:–

**6** அறைகள் கொண்ட விருந்தினர் விடுதி. **21** அறைகள் கொண்ட பக்தர்கள் தங்கும் விடுதி. பக்தர்களுக்குத் தேவையான அளவிற்குப் பாதுகாப்புடன் கூடிய குடி தண்ணீர் வசதி, குளியலறை மற்றும் கழிவறை வசதிகள் உள்ளன.

### கோயில் திறந்திருக்கும் நேரம்:–

காலை **6.00** மணி முதல் இரவு **8.30** மணி வரை.

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு கொளஞ்சியப்பர் திருக்கோயில்,
மணவாளநல்லூர், விருத்தாசலம் வட்டம்.
தொலைபேசி எண்: 04143 –230232
இணையதள முகவரி : www.kolanjiapparthirukoil.com
மின்னஞ்சல் முகவரி : kolanjiapparthirukoil@gmail.com

# அருள்மிகு வீரட்டானேஸ்வரர் திருக்கோயில் திருவதிகை

(அப்பர் சுவாமிகளின் தமக்கையார் திலகவதி அம்மையார் திருத்தொண்டு செய்த தலம், பாடல் பெற்ற திருத்தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

பண்ருட்டி பஸ் நிலையத்திலிருந்தும், அருகில் உள்ள புகைவண்டி நிலையத்திலிருந்தும் கடலூர் செல்லும் சாலையில் 1 கி.மீ தொலைவில் உள்ள திருவதிகை பஸ் நிறுத்தத்தில் இறங்கி வரலாம்.

## இறைவன் பெயர்

அருள்மிகு வீரட்டானேஸ்வரர் என்றும் திரிபுர தகனம் செய்ததால் திரிபுரசம்ஹாரமூர்த்தி என்றும் அழைக்கப்படுகிறார். திரிபுர சம்ஹாரமூர்த்தி எழுந்தருளும் திருமேனியாக தனிச்சன்னதியில் அருள்புரிகின்றார். தேர்த்திருவிழா அன்று மட்டும் தேரில் எழுந்தருளுவார்.

## இறைவி பெயர்

அருள்மிகு பெரியநாயகி அம்மன் என்றும் திரிபுரசுந்தரி என்றும் அழைக்கப்படுகிறார். அம்மன் திருமணக்கோலத்தில் சுவாமிக்கு வலது புறத்தில் தனிச்சன்னதியில் அருள்புரிகிறார்.

## கோபுரம்

இத்திருக்கோயிலில் இரண்டு இராஜகோபுரங்கள் உள்ளன. மூன்று பிரகாரங்கள் உடையது.

## விமானம்

தஞ்சை பெரிய கோயிலுக்கு முற்பட்ட காலத்தில் (கி.பி. 7ம் நூற்றாண்டு) கட்டப்பட்டது. தஞ்சை பெரிய கோயில் விமானம் போன்ற அமைப்புடையது. விமானம் தேர் வடிவினை ஒத்தது தேரில் உள்ளதைப்போல விமானம் முழுவதும் ஆயிரக்கணக்கான சுதை சிற்பங்கள் உள்ளன. பல்லவர்கால குகைக்கோயிலைப் போன்றே விமானத்தின் எட்டு திசைகளிலும் எட்டு குகை



கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவைகள் கண்டு களிக்க வேண்டியதாகும். மேலும் சிவபெருமானுடைய எட்டு வீரச்செயல்களைக் குறிக்கும் சுதை சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. விமானத்தின் நிழல் பூமியில் விழா வண்ணம் சிற்ப சாஸ்திர முறையில் விமானம் அமைக்கப்பட்டுள்ளது. இராவணன் கைலாயத்தினைப் பெயர்க்கும் காட்சி. தத்ரூபமாக அமைக்கப்பட்டுள்ளது. விமானம் தவிர்த்த ஏனைய கட்டுமானங்கள் அனைத்தும் கருங்கல் திருப்பணியாகும்.

### சூல தீர்த்தம்

அப்பர் பெருமானுக்கு இத்தீர்த்தம் கொடுத்தே திலவகவதியார் சூலை நோயினைப் போக்கினார். தீராத வயிற்று வலி உடையவர்கள் இத்திருக்கோயிலுக்கு வந்து சக்கரத் தீர்த்தத்தில் நீராடி சுவாமியை வணங்கி சூல தீர்த்தம் அருந்தினால் தீராத வயிற்று வலி நீங்கும் என்பது இன்றளவும் கண்கூடாகக் காணலாம்.

### தல விருட்சம்

சரக்கொன்றை உள்பிரகாரத்தில் காணப்படுகிறது.

### தல வரலாறு

அதிகாபுரி என்று அழைக்கப்பட்ட திருவதிகையில் கெடில நதியின் வடகரை ஓரத்தில் கிழக்கு நோக்கிய திருத்தலமாக



இத்திருக்கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் அட்ட வீரட்டத்தலங்களில் மூன்றாவது வீரட்டமாக விளங்குகிறது. திரிபுரதகனம் நடைபெற்ற திருத்தலம்.

“ முன்னையிட்ட தீ முப்புரத்திலே
பின்னையிட்டதீ தென்னிலங்கையிலே ”

என்று பட்டினத்தார் பாடியிருப்பதால் இராமாயண காலத்திற்கும் முதலிலேயே திரிபுரதகனம் நடைபெற்றுள்ளதை அறிய முடிகிறது.



கிரதாயுகத்தில் தாருகாட்சன் கமலாட்சன் வித்துன்மாலி என்னும் அசுரர்கள் இருந்தனர் இவர்களுக்குப் பொன் கோட்டை, வெள்ளிக் கோட்டை, இரும்புக் கோட்டை என்னும் மூன்று கோட்டைகள் உண்டு. இவர்கள் எங்கு சென்றாலும் கோட்டைகளுடனே விண்ணில் வலம் வருவர். இவர்கள் தேவர்கள் தலைவனான இந்திரனைச் சிறை பிடித்து மற்ற தேவர்களையெல்லாம் வென்று கொடுமை படுத்தினார்கள். அதனால் தேவர்கள் அனைவரும் சிவபெருமானிடம் முறையிட சிவபெருமான் தாமே அவர்களை அழிப்பதாக வாக்களித்தார். அதற்கு ஒரு நிபந்தனை விதித்தார். தேவர்கள் அனைவரும் தேரின் பாகங்களாகவும் வாயு பகவான் தேரின் குதிரைகளாகவும் பிரம்மதேவன் தேரின் சாரதியாகவும். திருமால் அம்பாகவும்

அக்கினி பகவான் அம்பின் நுனியிலும் மேரு மலை வில்லாகவும் வாசுகி என்ற பாம்பு வில்லின் நாணாகவும் இருந்து உதவி செய்ய வேண்டும் என்று கூறினார். சுவாமி போருக்குப் புறப்பட்டார். தேவர்கள் அனைவரும் தங்கள் உதவி இல்லாமல் சிவபெருமான் போர் புரிய மாட்டார் போலும் என்று இறுமாந்து இருந்தனர். இவர்களது உள்ளக்குறிப்பை உணர்ந்த சிவபெருமான் தன் பெரு விரலால் தேரினை லேசாக அழுத்தினார். தேரின் அச்சு முறிந்து விட்டது. உடனே திருமால் ரிஷபமாக மாறி தேரினைத் தாங்கினார் என்பது புராணம். பின்னர் எந்த ஆயுதமும் இன்றி எவரது உதவியுமின்றி தனது சிரிப்பினால் மூன்று அரக்கர்களையும்



எரித்து அழித்து இருவரை தம் வாயிற் காப்பாளராகவும் ஒருவரைக் குடமுழா முழக்குபவராகவும் அருள்புரிந்தார் என்பது புராண வரலாறாகும்.

### கோயிலின் சிறப்புகள்

மூலவர் 16 பட்டைகளுடன் கூடிய லிங்க வடிவிலும், சுவாமி அம்மன் திருமணக் கோலக் காட்சியும் கருவறையில் காணப்படுகிறது. சுவாமி சன்னதிக்கு வலப் பக்கத்தில் அம்மன் சந்நிதி உள்ளது. பெயருக்கு ஏற்றாற்போல் அம்மன் பெரிய உருவத்தோடு நின்ற திருக்கோலத்தில் அழகான தோற்றத்தில் அருள்பாலிக்கின்றாள். தீர்த்த சிறப்பு வாய்ந்த தலம்.

சிவபெருமான் சூலத்தால் தோற்றுவித்த சூல தீர்த்தமும், திருமால் சக்கரத்தால் தோற்றுவித்த சக்கர தீர்த்தமும் (திருக்குளம்) அமையப்பெற்று, தருமசேனர் என்ற பெயருடன் சமண மதத்தின் தலைவராக இருந்த அப்பர் சுவாமிகள் வயிற்றில் சூலை நோய் ஏற்பட்டுச் சொல்லொண்ணாத் துன்பத்தை அனுபவித்தார். அப்பொழுது அவரது தமக்கையார் (திலகவதி அம்மையார்) சூல தீர்த்தத்து நீரைச் சிவாய நம என்று ஓதி அவருக்கு அளித்தார். தீர்த்தத்தை அருந்திய அப்பர் சுவாமிகளின் சூலை நோய் அக்கணமே நீங்கியது. பேரின்பம் பெற்ற அப்பர் சுவாமிகள் உடனே சமணத்திலிருந்து சைவ சமயத்தைத் தழுவி சைவ சமயம் தழைத்தோங்க அருந்தொண்டு ஆற்றினார். சைவ சமய மறுமலர்ச்சிக்கு இத்திருக்கோயிலே வித்திட்டது எனலாம். தேவாரத்தின் முதல் பாடல் ''கூற்றாயினவாறு'' பிறந்ததும் இத்திருக்கோயிலில்தான்.

## தலத்தைப் பாடியவர்கள்

அப்பர், சுந்தரர், சம்பந்தர் ஆகிய மூவராலும் 18 பதிகங்கள் பாடப்பட்ட திருத்தலமும், தேவாரத்தின் முதல் பாடலாகிய கூற்றாயினவாறு விலக்ககலீர் பாடல் தொடங்கி அப்பர் பெருமானால் 16 பதிகங்கள் பாடப்பட்ட தலமாகும். மேலும், இத்தலம் அருணாகிரியார், வடலூர் இராமலிங்க வள்ளலார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆகியோராலும் பாடப்பெற்ற தலமாகும்.

## பிரார்த்தனை தலம்

சுவாமி அம்மன் திருமணக் கோலத்தோடு அருள்பாலிப்பதால் திருமணம் தடைபடுபவர்கள் இத்திருக் கோயிலில் வந்து வழிபட்டால் திருமணத் தடை நீங்கும். இத்திருக்கோயிலின் இராஜகோபுரத்திற்கு உட்பகுதியில் 27 நட்சத்திரங்களுக்கும் தனித்தனி மரங்கள் வரிசையாக உள்ளன. நவக்கிரகளுக்கும், அஷ்டதிக்கு பாலகர்களுக்கும் தனித்தனியே மரவகைகள் உள்ளன. 12 ராசிகளுக்கும் தனியே மரங்கள் நடப்பட்டுள்ளன. ராசி நட்சத்திர தோஷம் திருமணத்தோஷம் உள்ளவர்கள் இம்மரங்களைச் சுற்றி வந்து வழிபட்டால் சிறந்த நற்பலன்களைப் பெறலாம்.

### பூஜைகள்

இத்திருக்கோயிலில் ஆறுகால பூஜைகள் நடைபெறுகின்றன.

### திருவிழாக்கள்

வைகாசி சுவாதி அன்று சுவாமி தேரோட்டமும், இரவு திரிபுரதகனமும் நடைபெறும். ஆடிப்பூரம் அன்று அம்மன் திருத்தேர் பவனியும், சித்திரை மாதம் பத்து நாட்கள் அப்பருக்கு உற்சவமும் கார்த்திகை சோமவாரத்தில் 1008 சங்கு அபிஷேகமும் வெள்ளி வாகனங்களில் பஞ்சமூர்த்தி வீதி உலா காட்சியும் நடைபெற்று வருகிறது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை


அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வீரட்டானேஸ்வரர் திருக்கோயில்,
திருவதிகை, பண்ருட்டி.
மின்னஞ்சல் முகவரி: *veerataneswarar@gmail.com*




# அருள்மிகு தில்லையம்மன் திருக்கோயில்
# சிதம்பரம்



## அமைவிடம்

சிதம்பரம் நகரில் வடக்கு வீதியில் உள்ள கஞ்சித்தொட்டி என்னும் பேருந்து நிறுத்தத்தில் இறங்கி இத்திருக்கோயிலை அடையலாம்.

சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே சுமார் 1 கி.மீ தொலைவில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

தில்லையம்மன், தில்லைகாளியம்மன்

## தல வரலாறு

இத்திருக்கோயில் சுமார் 725 ஆண்டுகளுக்கு முன் கோப்பெருஞ்சிங்கன் என்ற சோழ மன்னனால் கட்டப்பட்டுள்ளது.

சிவம் பெரியதா, சக்தி பெரியதா என்ற விவாதம் கைலையங்கிரியில் சிவனுக்கும் சக்திக்கும் இடையே ஏற்பட்டது. சிவமும் சக்தியும் ஒன்றே என்ற உண்மையை உலகிற்கு

உணர்த்தவும், பார்வதி தேவியின் கர்வத்தை அடக்கவும் சிவபெருமான் பார்வதிதேவியை, காளியாக மாறுமாறு



சபித்துவிடுகிறார். காளியான பார்வதி தேவியார் சிதம்பரம் தில்லைவனத்தில் வந்து தங்கிவிடுகிறார். வனத்தில் தங்கி இருந்து முனிவர்களுக்கும், தேவர்களுக்கும் தீங்கு செய்யத் தொடங்கினாள். ஆனந்தத் தாண்டவம் புரியும் ஈசனையும் ஆடல் போட்டிக்கு அழைத்தாள். ஈசனும் காளியும் ஆடிக்கொண்டு இருந்தனர். ஈசன் தனது காதில் அணிந்திருந்த குண்டலத்தைக் கீழே விழச்செய்து விழுந்த அக்குண்டலத்தைக் காலினாலே எடுத்து காதில் பொருத்திக்கொண்டார். இத்தாண்டவத்திற்கு ஊர்த்துவ தாண்டவம் என்று பெயர். காளி தேவி பெண் என்பதால் நாணமுற்று ஈசனைப் போன்று ஊர்த்துவ தாண்டவம் ஆட மறுக்கிறாள். தில்லையின் எல்லைக்கு சென்று கிழக்கு நோக்கி அமர்ந்தாள். தேவர்களும், முனிவர்களும் வேண்டிக்கொண்டதற்கு இணங்க சினம் நீங்கி நான்கு முகம் கொண்ட பிரம்ம சாமுண்டீஸ்வரியாக உருக்கொண்டு தில்லை அம்மன் ஆனாள். இறைவனுடன் சிவகாமியாக இணைந்து காளியின் சாபம் நீங்கப்பெற்றார். இவ்வாறாக தீயவைகளை அழிக்கும் கோப சக்தியாக தில்லைகாளியும் நல்லவைகளை அருளும் சாந்த சொரூபினியாக



தில்லையம்மனும் ஆக இருவடிவமாக இத்திருக்கோயில் இருந்து அருளாட்சி புரிகிறார்.

## பிரார்த்தனை

வாரந்தோறும் ஞாயிற்றுக்கிழமைகளில் மாலை 4.30 மணி முதல் 6 மணி வரையில் ராகு கால பூஜையில் இக்காளியை வழிபட்டால் நாகதோஷம் நீங்கி திருமணத்தடை அகலும் என்பது ஐதீகம்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் 8 மணி வரை

அலுவலக தொடர்பு முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு தில்லைகாளியம்மன் திருக்கோயில்,
சிதம்பரம், கடலூர் மாவட்டம் – 608001
தொலைபேசி எண்: 04144– 230251
இணையதள முகவரி: info@thillaikali.org
மின்னஞ்சல் முகவரி: thillaikaliamman@gmail.com

# அருள்மிகு தில்லை கோவிந்தராஜ பெருமாள் திருக்கோயில், சிதம்பரம்

(மங்களாசாசனம் செய்யப்பட்ட தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம் அருள்மிகு சபாநாயகர் திருக்கோயில் வளாகத்திற்கு உள்ளேயே இக்கோயில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு போகரெங்கநாதர்

### இறைவி பெயர்

அருள்மிகு புண்டரீகவள்ளி

### தல சிறப்பு

பெருமான் சயன நிலையில் ஸ்ரீதேவி பூதேவியுடன் போக ரெங்கநாதராகக் காட்சியளிப்பதே தலத்தின் பெருமையாகும்.



**மங்களா சாசனம் செய்தோர்**

திருமங்கையாழ்வார்,

குலசேகர ஆழ்வார்

**பூஜை காலங்கள்**

தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெறுகின்றன

**திருவிழாக்கள்**

மார்கழி மாதத்தில் இராப்பத்து, பகல் பத்து உற்சவமும் ஏகாதசி திதியில் சொர்க்கவாசல் உற்சவமும் வெகு சிறப்பாக நடைபெறுகிறது.



அலுவலக தொடர்பு முகவரி

நிர்வாக அறங்காவலர்,

அருள்மிகு தில்லை கோவிந்தராஜபெருமாள் திருக்கோயில்

சிதம்பரம் நகர் மற்றும் வட்டம்,

கடலூர் மாவட்டம் – 608001.

# அருள்மிகு வைத்தியநாத ஸ்வாமி திருக்கோயில்
# திட்டக்குடி
### (வசிஷ்ட மாமுனிவர் வழிபட்ட தலம்)



**திருக்கோயில் அமைவிடம்**

விருத்தாசலம் – தொழுதூர் செல்லும் பாதையில் விருத்தாசலத்திலிருந்து 33 கி.மீ. தொலைவில் திட்டக்குடி எனும் நகரில் அமையப்பெற்றுள்ளது.

**இறைவன் பெயர்**

அருள்மிகு ஸ்ரீ வைத்தியநாதன்

**இறைவி பெயர்**

அருள்மிகு அசலாம்பிகை

**தல விருட்சம்**

நெல்லி மரம்

**தீர்த்தம்**

கிருபாசமுத்திரம்

## தல சிறப்பு

உலகம் யாவையும் படைத்தருளும் பிரம்ம தேவரின் மைந்தர் வசிஷ்ட மாமுனிவர். இவர் சிவபெருமானிடம் உபதேசம் பெற்று அசலாம்பிகை உடனுறை ஸ்ரீ வைத்தியநாதனை வழிபட்டதால் இத்தலம் திருவதிட்டக்குடி என்ற பெயர் பெற்றது. இது நாளடைவில் மருவி திட்டக்குடி என அழைக்கப்படுகிறது.



திருக்கைலைக்கு ஒப்பான திட்டக்குடி. வசிஷ்டம், கவுரபம், அசனாரணியம், பாபநாசம், இத்தலத்தில் பிரமன் நிறுவிய பிரமலிங்கம், அருள் தந்த வைத்தியலிங்கம், திருமால் தோன்றியதால் பெருமாளுக்கு தனிக்கோயில். மனு மன்னன் நிறுவிய மனுலிங்கம், இறைவன் அசரீரிப்படியே வசிஷ்டன் நிறுவிய பஞ்ச லட்சணமுடைய வசிஷ்டலிங்கம் முதலிய சிவலிங்கத் திருமேனிகளும், வசிஷ்டனே நிறுவிய கணபதி, முருகன், துர்கா சப்தமாதா, பத்ரகாளியம்மன், பள்ளி கொண்ட பெருமாள், சுகாசனப்பெருமாள் முதலிய பல மூர்த்திகளும் அமையப் பெற்றுள்ளன.

இங்கு வசிஷ்டரால் சிருஷ்டிக்கப்பெற்ற நானூறு பெண்களுடன் உமையவளும் நானூற்று ஒன்றாக தோன்றி வளர்ந்து வந்தாள். **400** மணமகன்களைத் தேர்ந்தெடுத்து திருமணம் செய்விக்க நானூற்று ஒன்றாக தோன்றிய உமையவளுக்கு தக்க வரன் கிடைக்காமல் வசிஷ்டர் வருந்திய

போது, ஸ்ரீ வைத்தியநாதரே மணவாளனாகத் தோன்றி உமையவளை மணந்து கொண்டார். அப்போது ஒரே நேரத்தில் 401



திருமணங்கள் நடந்த தலம் இது. இதன் உண்மையை இத்தலத்தின் கிழக்குப் பகுதியில் உள்ள நானூற்றொருவர் ஆலயம் உறுதிப்படுத்துகிறது. வசிஷ்டர் சாபமிட்டதால் காகங்கள் இத்தலத்தில் இரவில் தங்குவது இல்லை என்பது மிகவும் சிறப்பம்சமாகும்.

இத்தகைய அருள் சக்தி வாய்ந்த இத்திருக்கோயிலில் ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் 1, 2, 3, பங்குனி மாதம் 9, 10, 11 ஆகிய ஆறு நாட்களும் சூரியன் லிங்கத்தின் மீது சூரிய பூஜை செய்வது இன்றளவிலும் நடைபெறும் அற்புத நிகழ்ச்சியாகும்.

## திருவிழாக்கள்

ஆடிப்பூர திருக்கல்யாணம், திருக்கார்த்திகை தீபம், அன்னாபிஷேகம், பௌர்ணமி பூஜை, பங்குனி உத்திரத் திருவிழா போன்ற விழாக்கள் மிக சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயில், திட்டக்குடி.
மின்னஞ்சல் முகவரி: vaithiyanathasamy@gmail.com

# அருள்மிகு வாமனபுரீஸ்வரர் திருக்கோயில்
# திருமாணிக்குழி
## (பாடல் பெற்ற தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

கடலூரிலிருந்து 12 கி.மீ. தொலைவில் கடலூர்–பாலூர்–பண்ருட்டி சாலையில் கெடில நதிக்குக் கிழக்கே உள்ளது.

### இறைவன் பெயர்

இத்திருத்தலத்தில் இறைவன் பெயர் அருள்மிகு வாமனபுரீஸ்வரர் ஆகும். மாணிக்கவரதர் என்றும், உதவி நாயகர் என்றும் அழைக்கப்படுகிறார்.

### இறைவி பெயர்

அருள்மிகு அம்புஜாக்ஷி, மாணிக்கவல்லி என்றும், உதவி நாயகி என்றும் அழைக்கப்படுகிறார்.

### தல விருட்சம்

கொன்றை மரம்

### தலத்தை பாடியவர்

சமயகுரவர்கள் நால்வரில் ஒருவரான

திருஞானசம்பந்தரால் ஒரு பதிகம் பாடப்பெற்ற திருத்தலமாகும்.

### தல வரலாறு

இத்தலம் மூர்த்தி, தீர்த்தம், வனம், கிரி, நதி சங்கமம், பதிகம் முதலியவைகளால் பிரசித்திபெற்ற திருத்தலமாகும். இத்திருத்தலத்தில் இறைவனை நேரிடையாக தரிசிக்க இயலாது.



மூலவர் முன் திரையிடப் பட்டிருக்கும். தேவர்களுக்கு ஞானத்தைப் புகட்டியும், அஞ்ஞானத்தை விலக்கவும் தோன்றியவர். சதாகாலமும் இறைவியோடு ஒன்றி இருப்பதாக வரலாறு. அதனால் இத்தலத்தில் மற்றைய ஸ்தலங்களுக்குள் விளங்கும் போக சக்தி அம்பாள், பள்ளியறை சொக்கர் போன்ற விக்கிரகங்கள் கிடையாது. திருப்பள்ளியறையும் கிடையாது.

இவ்வுலகில் மலையின்மேல் தீபமேற்றிய தீபஒளியாகக் காட்சியளிக்கும் திருக்கோயில்கள் இரண்டாகும். ஒன்று திருவண்ணாமலை, மற்றொன்று திருமாணிக்குழி ஆகும்.

இத்திருக்கோயில் அர்த்த மண்டபத்தில் திருமால் வாமனனாகத் தோன்றி திருவிக்ரமனாகிக் காட்சிகொடுத்து மீண்டும் வாமனனாகி தன் ஐம்புலன்களையும் சுருக்கி இடைவிடாது வழிபாடு செய்ததால் அவருடைய பூஜைக்கு இறைவன் தன் பதினோரு ருத்ர கணங்களில் பூஜைக்குக் காவல் கணமாகிய பீம சங்கரன் என்பவரைக் காவலாக நியமித்த இடமாகும். ஆகையால் திரைச்சீலையில் அமைந்த பீம சங்கருக்கு வழிபாடுகள் நடந்தபிறகே இத்தல இறைவனைக் காண முடியும்.

இத்திருத்தலத்தில் மகாபலி சக்கரவர்த்தி தோன்றிய வரலாறு குறிப்பிடும் நிகழ்ச்சியாக, இந்திரனுடைய தாயார் அதிதிதேவி வழிபட்டு பூஜித்து வருங்கால் விளக்கில் உள்ள நெய்



உறைந்து அணையும் தருவாயில் இருந்த திருவிளக்கில் எலியானது பசியின் கொடுமையால் விளக்கில் உள்ள உறைந்த நெய்யை வாயால் சாப்பிட அதன் மூக்கு நுணியில் திரி தூண்டிவிடப்பட்டு சுடர் சிட்டம் நீங்கி பிரகாசமாகி எரிந்தது. தன்னிலை உணராத அபுத்தி நிலையில் நிகழ்ந்த இச்செயல் காரணமாக இறைவன் மகிழ்ந்து எலிக்கு மறு ஜென்மாவில் சக்கரவர்த்தி பட்டம் கொடுத்தார். அந்த எலி திருமாலின் பக்தனாகிய பிரகலாதனின் பேரனாகத் தோன்றியது. அன்று முதல் பராக்கிரமம் வெளிப்பட்டதால் மகாபலி சக்கரவர்த்தியாக தோன்றியவுடன் முன்ஜென்மாவின் சிவ பக்தியினால் மீண்டும் தர்மத்தையே செய்து வந்தான். தேவர்கள் மகா விஷ்ணுவிடம் சென்று முறையிட விஷ்ணுவும் மகாபலியை அழிக்கும் நோக்குடன் காசிப மகரிஷிக்கும் அதிதிதேவிக்கும் 12–வது குழந்தையாக வாமனனாக குள்ள உருவத்தோடு பிறந்து தான் தவமியற்ற மூன்றடி மண் யாசித்தார்.

அப்பொழுது அசுரகுல குரு சுக்ராச்சாரியார் தடுத்தும் கேளாமல் காக்கின்ற கடவுளே யாசிக்கும்போது அளிக்காமல் இறப்பது சக்கரவர்த்திக்கு அழகில்லை என்று நினைத்து வழங்கினார். விஷ்ணுவானவர் உலகமே வியக்கும் வண்ணம் ஓரடியால் விண்ணையும் இரண்டாவது அடியால் மண்ணையும்

அளந்து உலகை வசப்படுத்தினார். மூன்றாவது அடிக்கு தன்னையே அளந்துகொள்ள திருமாலின் திருவடிக்கு அருகே அமர்ந்தார். இவரின் தர்மநிலையை உணர்ந்த மகாவிஷ்ணு சிரஞ்சீவியாக அருளினார். இந்நிகழ்ச்சி இங்கு நடைபெற்றதாக வரலாறு.

## தல சிறப்பு

இத்தலத்தில் ஈசனை ஒரு முறை வழிபட்டால் காசிக்கு சென்று 16 முறை வழிபாடு செய்வதற்கும், திருவண்ணாமலையை 8 முறை வழிபடுவதற்கும், சிதம்பரத்தினை 3 முறை வழிபடுவதற்கும் சமம்.

## பூஜைகள்

இத்திருக்கோயிலில் நான்கு கால பூஜை நடைபெற்று வருகின்றன.

## திருவிழாக்கள்

முக்கியத் திருவிழாவாக மாசிமகம், கடலூர் தேவனாம்பட்டினத்தில் சமுத்திர தீர்த்தவாரி உற்சவம் ஆகும். ஒவ்வொரு பிரதோஷத்தின்போதும் இங்கு சிறப்பு வழிபாடு நடைபெற்று வருகிறது. இவ்விழாக்காலங்களில் ஆயிரக்கணக்கான பக்தர்கள் கலந்துகொள்கின்றனர். உள்ளூர் மற்றும் வெளியூரிலிருந்து தினமும் பக்தர்கள் பெருமளவில் தரிசித்தவண்ணம் உள்ளனர். கார்த்திகை மாதம் ரோகிணி நாளில் மலைமேல் தீபம் ஏற்றப்பெறும்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வாமனபுரீஸ்வரர் திருக்கோயில்,
திருமாணிக்குழி, கடலூர்.

# அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி திருக்கோயில்

## வேலுடையான்பட்டு, நெய்வேலி–3



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருத்தலம் கடலூர் மாவட்டத்தின் தென்மேற்கே நெய்வேலி மத்திய பேருந்து நிலையத்தின் அருகில் 2 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு சிவசுப்ரமணியர்

### இறைவி பெயர்

அருள்மிகு வள்ளி தேவசேனா

## பூஜை காலங்கள்

தினசரி நான்கு கால பூஜைகள்

## தலச் சிறப்பு

இத்திருக்கோயில் இறைவன் அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி வள்ளி தெய்வானையோடு ஒரே பீடத்தில் கருங்கல்லில் புடைப்புச் சிற்பமாகக் கையில் வில்லுடன் அரியதொரு காட்சி தருகிறார்.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயில் பிரம்மோற்சவ திருவிழாவான பங்குனி உத்திரப் பெருவிழா வெகு சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இத்திருவிழாவில் தேரோட்டத்தின்போதும் மறுநாள் பங்குனி உத்திரத்தன்றும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் காவடியும் அலகுகாவடியும் எடுத்து நேர்த்திக்கடன் செலுத்துகிறார்கள். அன்று முழுவதும் இறைவனுக்கு பால் அபிஷேகம் மட்டுமே இடைவிடாமல் நடைபெறும். இத்திருக்கோயில் முருகன் குடிகொண்ட பிரார்த்தனைத் தலமாகும்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் 8 மணி வரை

அலுவலக முகவரி
நிர்வாக அறங்காவலர்
அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி திருக்கோயில்
வேலுடையான்பட்டு, நெய்வேலி–3,
குறிஞ்சிப்பாடி வட்டம்
மின்னஞ்சல் முகவரி: neyveligrouptemples@gmail.com

# அருள்மிகு பிரளயகாலேஸ்வரர் திருக்கோயில்
# பெண்ணாடம்
## (பாடல்பெற்ற தலம்)



### அமைவிடம்

விருத்தாசலம் நகருக்கருகே மேற்கே திட்டக்குடி செல்லும் சாலையில் சுமார் 17 கி.மீ. தொலைவில் பெண்ணாடம் எனும் நகரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. சென்னை–திருச்சி புகைவண்டிப் பாதையில் பெண்ணாடம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே 1½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. தலத்தின் பெயர் திருப்பெண்ணாகடம். திருக்கோவிலின் பெயர் திருத்தூங்கானை மாடம்.

### இறைவன் பெயர்

பிரளயத்திலிருந்து மக்களைக் காத்தமையால் இறைவன் பிரளயகால ஈசுவரர் என்று அழைக்கப்படுகிறார். இங்குக் குடிகொண்டுள்ள இறைவனுக்கு சுடர்க்கொழுந்து நாதர், கைவழங்கீசர் எனவும் பெயர்கள் உண்டு.

## இறைவி பெயர்

அருள்மிகு அழகிய காதலியம்மன், ஆமோதனாம்பாள், கடந்தை நாயகி எனத் திருப்பெயர்கள் வழங்கப்பெறுகின்றன.

## தல வரலாறு

பெண்ணாகடம் பெண்+ஆ+கடம் எனும் மூன்று சொற்களின் கூட்டில் தோன்றியதாகும். பெண் என்றால் தேவகன்னியர், ஆ என்றால் காமதேனு, கடம் என்றால் வெள்ளை



யானை. இம்மூவரும் இத்தல இறைவனை வழிபட்டதால் இவ்வூருக்குப் பெண்ணாகடம் எனப் பெயர் வழங்கலாயிற்று.

சிவஞானபோதம் அருளிய மெய்கண்ட தேவ பெருமான் அவதரித்த திருத்தலம் இதுவேயாகும். சந்தான குரவர்களில் மூன்றாமவரான மறைஞானசம்பந்தர் அவதரித்ததும் இத்தலமே.

ஒருமுறை பிரளயம் எனப்படும் ஊழிக்காலக் காலவெள்ளம் பெருக்கெடுத்து மண்ணுலகையும், உயிர்களையும் அழித்து முன்னேறிய போது சைவமும், தமிழும் தழைத்தோங்கிய வெள்ளாற்றிற்கும் தென் பெண்ணையாற்றுக்கும் இடைப்பட்ட நடுநாடு மட்டும் வெள்ளத்தால் மூழ்கடிக்கப்படாது உயர்ந்து நின்றது கண்ட தேவர்கள் அதற்கான காரணத்தைத் தேடியபோது நடுநாட்டின் கண் வெள்ளாற்றங்கரையில் குடிகொண்டிருந்த இறைவனே இதற்குக் காரணம் எனக் கண்டறிந்து அந்த ஈசனை

நாடி ஊழி வெள்ளத்திலிருந்து உலகை உய்விக்க வேண்டினர்.



எம்பெருமானும், நந்தியம்பெருமானுக்கு வெள்ளத்தைத் தடுக்க ஆணையிட்டார். நந்திகேசுவரர் கிழக்கு நோக்கித் திரும்பி ஊழி வெள்ளத்தை உறிஞ்சிவிட்டதாக திருக்குடந்தைப் புராணத்தில் பிரளயம் காத்த சருக்கத்தில் கூறப்பட்டுள்ளது. இதுமுதல் இத்தலத்து நந்தியம்பெருமானுக்கு அதிகாரநந்தி எனப்பெயர் வந்தது. இத்திருக்கோயிலில் பிற சிவன் கோயில்களுக்கு மாறாக நந்திகேஸ்வரர் இறைவனை பார்த்திராமல் கிழக்கு நோக்கி அமர்ந்திருப்பதைக் காணலாம்.

அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான கலிக்கம்பர் அவதரித்த திருத்தலம் இதுவாகும். அவரும், அவர் தம் மனைவியாரும் தம் வீட்டிற்கு வருகின்ற சிவனடியார்களுக்குப் பாத பூசை புரிவது வழக்கம். ஒருநாள் அவர்களது இல்லத்திற்கு வந்த சிவனடியார்களுள் ஒருவர் சில ஆண்டுகளுக்கு முன் கலிக்கம்பர் வீட்டில் குற்றேவல் புரிந்து வந்த ஒருவராக

கையைத் துண்டித்துவிட்டார். கருணாமூர்த்தியான சுடர்க்கொழுந்து நாதர் கலிக்கம்பர் மனைவிக்கு இழந்த கையை மீண்டும் வழங்கியதால் அப்பெருமான் கைவழங்கீசர் எனப்படுகிறார்.

### தலத்தைப் பாடியவர்கள்

திருநாவுக்கரசர் மற்றும் திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற திருத்தலம்.

### பூஜைகள்

இத்திருக்கோயிலில் நான்கு கால பூஜை நடைபெற்று வருகின்றன.

### திருவிழாக்கள்

ஆடிப்பூரத் திருக்கல்யாணம், திருக்கார்த்திகை பிரதோஷம், மற்றும் சித்திரைப் பெருவிழா ஆகிய விழாக்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை **8.00** மணி முதல் மதியம் **12.00** மணி வரையில்
மாலையில் **4.00** மணி முதல் இரவு **8.00** மணி வரை


அலுவலக முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு பிரளயகாலேஸ்வரர் திருக்கோயில்,

பெண்ணாடம், திட்டக்குடி.

மின்னஞ்சல் முகவரி: pralayakaleswarar@gmail.com

# அருள்மிகு சிஷ்ட குருநாதர் திருக்கோயில் திருத்துறையூர்

(பாடல் பெற்ற தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

பண்ருட்டி பேருந்து நிலையத்திலிருந்து பண்ருட்டி–அக்கடவல்லி நெடுஞ்சாலையில் பண்ருட்டியிலிருந்து 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. விழுப்புரம்–பண்ருட்டி ரயில் மார்க்கத்தில் பூண்டி ரயில் நிலையத்திலிருந்து 1 கி.மீ. தூரத்தில் உள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு சிஷ்டகுருநாதர்

### இறைவி பெயர்

அருள்மிகு சிவலோக நாயகி

### தல சிறப்பு

'சந்தான குரவர்களில் ஒருவராகிய அருள்நந்தி சிவாச்சாரியார் அவதாரம் மற்றும் முக்தி அடைந்த சிவத் தலம் இதுவேயாகும்'.

நடுநாட்டின்கண் தென்பெண்ணை நதியின் தென்பால்

அமைந்துள்ள திருத்தலமாகும். இத்திருத்தலம் மேற்கு நோக்கிய திருத்தலமாகும். அம்மன் வடக்கு நோக்கி நின்ற கோலத்தில்



அருள்பாலிக்கின்றாள். குருவடிவில் இறைவன் இருப்பதால் கல்வி ஞானம் வேண்டுபவர்கள் இத்தல இறைவனை வழிபட்டால் வரையாத கல்வியை வழங்குவான் என்பது திண்ணம். தேவராப் பதிகம் பெற்ற நடுநாட்டுத் தலங்களில் 15வது தலமாகும். சித்திரை 5,6,7 தேதிகளில் மாலை சூரியன் மறையும்போது சூரிய ஒளி கருவறையில் மூலவர் மீது படுகின்றது. சூரியன் வழிபாடு செய்வதாக ஐதீகம்.

## தலத்தை பாடியவர்கள்

சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் குரு வடிவில் அமர்ந்து தீட்சை கொடுத்ததால் சிஷ்டகுருநாதர் என்று பெயர் பெற்றார். சுந்தரருக்குத் தவநெறியை அருளிய தலம். சுந்தரர் இத்தல நாதரை 11 பாடல்களால் பாடியுள்ளார். ஒவ்வொரு பாடல்களின் இறுதியில் 'வேண்டிக்கொண்டேன் தவநெறியே!' என்று முடிவதிலிருந்து இதனை நன்கு அறியலாம்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்
அருள்மிகு சிஷ்டகுருநாதர் திருக்கோயில், திருத்துறையூர்,
பண்ருட்டி வட்டம்.

# அருள்மிகு தீர்த்த புரீஸ்வரர் திருக்கோயில்
# திருவட்டத்துறை
## (பாடல்பெற்ற தலம்)




### அமைவிடம்

விருத்தாசலம்–திட்டக்குடி பேருந்து சாலையில் பெண்ணாடத்திற்கு மேற்கில் கொடிக்களம் என்ற பேருந்து நிறுத்தத்தில் இறங்கி 1 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள திருவட்டத்துறை என்னும் கிராமத்தில் இத்தலம் அமைந்துள்ளது. ஜீவநதி எனப்படும் வெள்ளாற்றின் வடகரையில் இவ்வூர் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு அறத்துறை நாதர்

### இறைவி பெயர்

அருள்மிகு ஆனந்தநாயகி

### தல வரலாறு

**திருஞான சம்பந்தர் சுவாமிகளுக்குச் சிவபெருமான் முத்துப்பல்லக்கு, முத்துக்குடையும், முத்துச் சின்னங்களும்**



**கொடுத்து அருளிய அற்புதம் நிகழ்ந்த திருத்தலம் இதுவேயாகும்.**

மகாவிஷ்ணு, ஆதிசேஷன், சனீஸ்வரன், செவ்வாய், வால்மீகி முனிவர் ஆகியோர் பூஜித்துப் பேறுபெற்ற தலம். சேர, சோழ, பாண்டியர்கள் மூவரும் தனித்தனியாக இக்கோயிலில் லிங்கம் அமைத்து வழிபட்டுள்ளதை இன்றும் காணலாம். கடலூர் மற்றும் விழுப்புரம் மாவட்டத்தை உள்ளடக்கிய நடுநாட்டில் அமைந்துள்ள 22 சிவத்தலங்களில் ஒன்றான இத்தலம் அமைந்துள்ளது.

### தலத்தை பாடியவர்கள்

திருநாவுக்கரசர், மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தர் ஆகிய மூன்று நாயன்மார்களால் பாடல் பெற்ற தலம். ஆதிசங்கரர், குருநமச்சிவாயர் மற்றும் இராமலிங்க அடிகள் ஆகியோர் பாடிய தலம்.

### திருவிழாக்கள்

ஆண்டுதோறும் மாசி மகம், ஆடிப்பூரத் திருக்கல்யாணம், திருக்கார்த்திகை உற்சவம் ஆகியவை சிறப்பாக

நடைபெறுகின்றன. மாசி மகத் திருவிழாவில் 10ம் நாள் தீர்த்தபுரிஸ்வரர் வெள்ளாற்றில் தீர்த்தவாரி நடத்தி இறந்தோரின் பாவங்களைப் போக்கி முக்தியளிப்பதாக ஐதீகம். எனவே, ஒவ்வோர் ஆண்டும் மாசி மகத்தின்போது ஏராளமானோர் இத்துறையில் கூடி முன்னோர்களுக்குத் திவசம் அளிப்பது வழக்கத்தில் உள்ளது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12.00 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு தீர்த்தபுரீஸ்வரர் திருக்கோயில்,
திருவட்டத்துறை, திட்டக்குடி.

## அருகம்புல் மகிமை

பிள்ளையார் வழிப்பாட்டில் அருகம்புல் இருப்பது அவசியம். விதை எதுவும் போடப்படாமல் வளரக்கூடியது அருகம்புல். இதைப்போல மனிதனின் ஆத்மாவிற்கு விதை எதுவும் இல்லை. அது தானே ஏற்பட்டது. தானே ஏற்பட்ட ஆத்மா என்று அருகம்புல்லை உனக்கு காணிக்கையாக்கி வழிப்படுகிறேன் என்று இதற்கு அர்த்தம்.

# அருள்மிகு பதஞ்சலீஸ்வரர் திருக்கோயில்
# கானாட்டாம்புலியூர்

(பாடல் பெற்ற தலம்)




## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் காட்டுமன்னார்கோயில் வட்டத்தில் உள்ள முட்டத்திலிருந்து 1 கி.மீ. தொலைவிலும், சிதம்பரத்திலிருந்து 30 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது

## .இறைவன் பெயர்

அருள்மிகு பதஞ்சலீஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு அம்புஜாஷி, கானார் குழலி, கோல் வளக்கையம்மை.

## தல விருட்சம்

நெல்லி

## தீர்த்தம்

சூரிய தீர்த்தம், கொள்ளிடம்

## தலத்தைப் பாடியவர்

ஆலால சுந்தரர் எனப்பெயர் பெற்ற சுந்தரமூர்த்தி சுவாமியின் பதிகம் பாடப்பெற்ற திருத்தலம் ஆகும்.

## தல வரலாறு

நாராயணன் வாய்வழி நடராஜ சரிதத்தைக் கேட்ட



ஆதிசேஷர் தானும் தாண்டவ சொரூபத்தை நேரில் காண வேண்டுமெனப் பணிந்து நிற்க அங்ஙனமே ஆகுக என நாராயணன் ஆசிர்வதிக்க கோதாவரி நதிக்கரையில் பைமீனசம் என்னும் ஊரில் அத்திரிமகிரிஷிக்கும் அனுசூயைக்கும் மகனாய் மனித உருவில் ஆதிசேஷர் பிறந்தார். பின் உபநயன ப்ரம்மோபதேசங்கள் முடித்து தில்லை வந்தடைந்து அங்கு தரிசனத்திற்காகக் காத்திருந்த வியாக்ரபாதருடன் தில்லை மூவாயிரம் முனிவர்களுடன் துதித்து நின்று சர்வேஸ்வரனும், சர்வஞ்யனும், சகலவேத சொரூபனும், சகலபாப நிவாரணனுமான எம்பெருமான் ஸ்ரீ ஆனந்த நடராஜ மூர்த்தியின் திருநடனத்தைக் கண்டுகளித்தார். அதன்பின் சில காலம் சிதம்பரத்திலேயே தங்கியிருந்து ஆயிரங்கால் மண்டபம் என்றழைக்கப்படும் ராஜ சபையில் தனது யோக சூத்ர விரிவுரை நூலான மஹாபாஷ்யத்தை

ஆயிரம் சீடர்க்கு உபதேசித்தார். பின் மீண்டும் பரமனைக் காணும் ஆவல் வர பகவானைத் துதிக்க ஸ்ரீ நந்திதேவர் இவ்விடத்தில் ஒரு யோசனை (12 மைல்) தூரம் (நிருதியால்) சென்று தவமியற்றுவீர் எனக்கூறி மறைந்தார்.

பின் திருக்கானாட்டு முள்ளூர் (கானாட்டாம்புலியூர்) வந்தடைந்து தவங்கள் பல செய்து உமையோடு விடையேறும் ஈசனைக் கண்ணாரக் கண்டார். தன் பெயரிலேயே இத்தல இறைவன் வழங்குற வேண்டுமென வரம் கேட்க ஈசன் பதஞ்சலிஸ்வரர் ஆனார்.



பதஞ்சலி முனிவர் தவமியற்றி வந்த காலத்தில் இந்த ஷேத்ரம் மதூகவனம் எனப்பெயர் பெற்றிருந்தது. சோழ மன்னர் காலத்தில் சோழநாடு ஒன்பது வளநாடுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் விருதராச பயங்கர வளநாட்டின் உட்பிரிவுகளின் ஒன்று கானாடு என்பதாகும். அக்கானாட்டைச் சார்ந்த முள்ளூர் எனும் ஊர் கானாட்டுமுள்ளூர் என வழங்கப்பெற்றது என்றும் சுந்தரமூர்த்தி சுவாமி காலாலேயே நடந்து வந்ததால் இது கானாட்டுமுள்ளூர் எனப்பெயர் பெற்றது என்றும் சொல்லப்படுகிறது.

இத்தலத்தில் தெற்கு நோக்கி வினை நீக்கும் கனக நாயகியாம் ஸ்ரீ அம்புசாக்ஷி அருள்பாலிக்கிறாள். விநாயகர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், பதஞ்சலி முனிவர் ஆகியோர் எதிரே வழிபட துணையான சிவகாம சுந்தரியுடன் எம்பெருமான் ஸ்ரீ ஆனந்த நடராஜமூர்த்தி திருநடனம் புரிந்தவாறே அருள்பாலிக்கிறார்.

## பரிகார தலம்

ஆதிசேஷனே பதஞ்சலி முனிவராய்த் தவமியற்றி ஈசனைக் கண்ட க்ஷேத்ரமாகையால் இது நாக தோஷங்கள் கழிக்க சிறந்த க்ஷேத்திரம் ஆகும்.

## திருவிழாக்கள்

மஹா சிவராத்திரி, சஷ்டி உற்சவம், ஆனித்திருமஞ்சனம் போன்ற திருவிழாக்கள் வெகுவிமரிசையாக நடைபெறுகின்றன.



# அருள்மிகு மங்களபுரீஸ்வரர் (எ) திருச்சோபுரநாதசுவாமி திருக்கோயில் தியாகவல்லி

(பாடல்பெற்ற தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டம், கடலூர் நகரத்திலிருந்து சிதம்பரம் செல்லும் இரயில் பாதையில் ஆலப்பாக்கம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே சுமார் 2 கி.மீ தொலைவில் இக்கோயில் அமைந்துள்ளது. கடலூரிலிருந்து வடலூர் செல்லும் பாதையில் 20 கி.மீ. தொலைவில் உள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு சோபுரநாதர், மங்களபுரீஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு வேல்நெடுங்கண்ணி

## பூஜைகள்

இத்திருக்கோயிலில் 4 கால பூஜைகள் நடைபெறுகின்றன.

## தல விருட்சம்

கொன்றைமரம் திருக்கோயிலின் பின்புறமுள்ள நந்தவனத்தில் தல விருட்சமாக உள்ளது.

## தலத்தை பாடியவர்கள்

திருஞானசம்பந்தர் பாடிய நடுநாட்டு தலங்கள் 22ல் இது முக்கியமான தலமாகும்.

## தல வரலாறு

கி.பி.6ம் நூற்றாண்டில் சோழ மன்னன் திரிபுவனசக்கரவர்த்தியால் இக்கோயில் கட்டப்பட்டது. அக்காலத்தில் இவ்வூர் திருச்சோழபுரம் என்று அழைக்கப்பட்டது.



திரிபுவன மன்னருக்கு மூன்று மனைவிகள் இருந்தனர். ஏழிசைவல்லி, மதுராந்தகவல்லி, தியாகவல்லி என்னும் மூன்று மனைவியருள் மூன்றாவது மனைவி தியாகவல்லி பெயரால் தியாகவல்லி என்று பெயர் பெற்றது. இத்தலம் அகத்திய முனிவரால் பூஜிக்கப்பட்ட தலமாகும்.

## தல சிறப்பு

அகத்தியருக்குச் திருச்சோபுரநாதர் காட்சி கொடுத்த தலமாகும்.

## திருவிழாக்கள்

பங்குனி மாத பிரமோற்சவம் 10 நாட்கள் நடைபெறுகிறது. பிரதோஷ கால வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12.00 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை


அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு மங்களபுரீஸ்வரர் (எ)
திருச்சோபுரநாதசுவாமி திருக்கோயில்,
தியாகவல்லி.


## திருமாலின் சயனத்தலங்கள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீரங்கம் | - | வீர சயனம் |
| மகாபலிபுரம் | - | தல சயனம் |
| திருமயம் | - | போக சயனம் |
| திருக்கோஷ்டியூர் | - | பால சயனம் |
| கும்பகோணம் | - | உத்தான சயனம் |
| திருவனந்தபுரம் | - | அனந்த சயனம் |
| திருமோகூர் | - | பிரார்த்தனா சயனம் |
| திருப்புல்லானி | - | தர்ப்ப சயனம் |
| திருச்சித்திரக்கூடம் | - | போக சயனம் |
| திருநீர்மலை | - | மாணிக்க சயனம் |
| ஸ்ரீவில்லிப்புத்தூர் | - | வடபத்திர சயனம் |



# அருள்மிகு சிவக்கொழுந்தீஸ்வரர் திருக்கோயில்
# தீர்த்தனகிரி

(பாடல் பெற்ற தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருத்தலம் திருப்பாதிரிப்புலியூர்–சிதம்பரம் செல்லும் பிரதான சாலையில், திருப்பாதிரிப்புலியூரிலிருந்து 22 கி.மீ. தூரத்திலும், சிதம்பரத்திலிருந்து 38 கி.மீ. தூரத்திலும் உள்ள மேட்டுப்பாளையம் என்ற ஊரில் இறங்கி அங்கிருந்து 5 கி.மீ. தூரத்தில் உள்ள தானூர் சென்று இத்திருத்தலத்தை அடையலாம்.

### இறைவன் பெயர்

அருள்மிகு சிவக்கொழுந்தீஸ்வரர்

### இறைவி பெயர்

அருள்மிகு நீலாயதாக்ஷி (கருந்தடங்கண்ணி)

### கோபுரம்

மூன்று நிலை

## தல விருட்சம்

கொன்றை மரம்

## தீர்த்தம்

ஜாம்பவா தீர்த்தம்

## தல வரலாறு



ஒரே நாளில் திணை விளைந்த சிற்பக் காட்சி

பெரியான் என்னும் சிவபக்தர் சிவத்தொண்டு புரிந்து வருகையில், இறைவன் தொண்டனைச் சோதிக்க வேண்டி, அடியாராக வந்து பெரியானிடம் அன்னம் கேட்க, பெரியான் தான் வைத்திருந்த அனைத்துத் தினை விதைகளையும் அப்போது தான் நிலத்தில் தெளித்திருந்தப்படியால் தினை இல்லாமல் கலங்கிச் சிவனடியாரிடம் சிறிது நேரம் இங்கே இருங்கள் என்று கூறிவிட்டு சென்று தனக்கு வைத்திருந்த கஞ்சியை எடுத்து வந்து அடியாரைக் காணும்போது அடியார் அங்கு இல்லாமல் தன் வயலில் விதைத்திருந்த தினை விதை முழுவதையும் நன்கு விளைந்திருந்ததது கண்டு அதிசயமுற்று ஆண்டவனை அழுது தொழுதான். ஒரே இரவில் தினை விதைக்கப்பட்டு தினை விளையப்பட்ட அதிசய திருத்தலம் அதனால் தினை நகர் என்றே இவ்வூர் பெயர்க் காரணம் பெற்றது.

### தலத்தைப் பாடியவர்

சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடல் பெற்ற திருத்தலமாகும்.

### திருவிழாக்கள்

சித்திரை வருடப்பிறப்பு, ஆனித் திருமஞ்சனம், விநாயகர் சதுர்த்தி, கார்த்திகை தீபம், மார்கழி ஆருத்ரா தரிசனம், தைப்பொங்கல், மாசி சிவராத்திரி.

### பூஜை காலங்கள்

நான்கு கால பூஜைகள்

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு சிவக்கொழுந்தீஸ்வரர் திருக்கோயில்,
தீர்த்தனகிரி, குறிஞ்சிப்பாடி வட்டம்.



# அருள்மிகு சுயம்பிரகாச ஈஸ்வரர் மற்றும் பொள்ளாப்பிள்ளையார் திருக்கோயில் திருநாரையூர்

(பாடல்பெற்ற தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருத்தலமானது சிதம்பரம்–காட்டுமன்னார்கோயில் பேருந்து சாலையில் உள்ளது. சிதம்பரத்தில் இருந்து 17 கி.மீ. தெற்கேயும், காட்டுமன்னார்கோயிலில் இருந்து 8 கி.மீ. வடக்கேயும் அமைந்துள்ளது. சிதம்பரம், காட்டுமன்னார்கோயில் இடையில் உள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு சுயம்பிரகாச ஈஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு திரிபுரசுந்தரி

## தலத்தை பாடியவர்கள்

இத்தலத்து இறைவனை திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் தேவாரப் பாடல்களால் பாடி மகிழ்ந்தனர். நம்பியாண்டார் நம்பி அவதாரத் தலம். அவர் திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை பாடியுள்ளார்.

## தல வரலாறு

அருள்மிகு திருபுரசுந்தரி சமேத சுயம்பிரகாச ஈஸ்வரர் சுயம்பு லிங்கமாகக் காட்சி தருகின்றார். கந்தர்வன் ஒருவன் மிருகண்ட மகரிஷியின் தவத்தைக் கலைத்ததால் நாரையாகப்போக என்று சாபமிட்டார். சாபவிமோசனத்திற்காக சுயம் பிரகா



ச ஈஸ்வரனைத் தினமும் காசி சென்று தன் அலகால் தீர்த்தம் கொண்டு வந்து வழிபட்டு வந்தபோது காலம் கனிய ஓர் நாள் காற்றுமழை அதிகமாக விழ ஆரம்பித்தது. அந்த நாரையின் சிறகுகள் வீழ்ந்த இடம் சிறகிழந்த நல்லூர் ஆகும். பின்பு சிறகுகள் இன்றிப்பறக்க முடியாததனால் தன் உடலால் தவழ்ந்து வந்து இறைவனுக்கு அபிஷேகம் செய்து வழிபட்டது. இறைவன் மகிழ்ந்து நாரைக்கு மோட்சம் கொடுத்தார். எனவே இந்த ஊருக்கு நாரையின் பெயராலேயே திருநாரையூர் என்று வழங்கப்பட்டது.

## பொள்ளாப் பிள்ளையார்

இப்புண்ணிய ஷேத்திரத்தில் அனந்தேச சிவாச்சாரியார் என்பவர் இறைவனுக்குத் தொண்டு செய்து வந்தார். அவர் ஓர் நாள் வெளியூர் சென்றபோது அவரது மகன் நம்பியாண்டார் நம்பி இறைவனுக்கு அமுது படைத்தார். பொள்ளாப்பிள்ளையாரைச் சாப்பிடும்படி வேண்டினார். பிள்ளையார் சாப்பிடவராததனால் தன் தலையை முட்டிக் கொண்டு அழுதார். அப்போது பிள்ளையார் நேரில் தோன்றி நம்பி கொடுத்த அமுதை உட்கொண்டார்.

இதனை நம்பியாண்டார் நம்பி கூற தந்தை நம்பவில்லை. மறுநாள் மறைந்து நின்று பார்த்து அகம் மகிழ்ந்தார். இச்செய்தி காட்டுத் தீ போல் பரவியது.

இச்செய்திகேட்ட மன்னன் இராஜராஜ சோழன் நம்பியாண்டார் நம்பியிடம் பொள்ளாப் பிள்ளையார் உணவு உட்கொள்வதைத் தாம் பார்க்க வேண்டும் எனக்கேட்டார். கொண்டுவந்த பொருள்கள் அனைத்தையும் பிள்ளையார் உட்கொண்டுவிட்டார். மன்னன் சிவன் அடியார்கள் சில தேவாரப்பாடல்கள் பாடுவதைக் கேட்டுப் பரவசம் அடைந்திருந்தார். முழுமையும் கேட்க விரும்பி பிள்ளையாரிடம் மன்னன் தேவாரப்பாடல்கள் முழுமையும் எங்கே உள்ளன எனக்கேட்டார். பிள்ளையார் சிதம்பரம் நடராஜர் கோயிலில் உள்ளதாகக் கூறினார். அவ்வாறே தேவாரங்கள் கண்டெடுக்கப்பட்டன.

பொள்ளாப் பிள்ளையார் என்பது உளியால் பொளியாத (பொள்ளாத) பிள்ளையார் எனப் பொருள்படும்.

இத்தலம் தேவாரப் பதிகம் பாடல் பெற்ற காவிரி வடகரைத் தலங்களில் 33–வது தலமாகும்.

### திருவிழாக்கள்

இங்கு நம்பியாண்டார் நம்பி குரு பூஜை விழா வைகாசி மாதம் புனர்பூச நட்சத்திரத்தில் நடைபெறும். மற்றும் மாதந்தோறும் சங்கடஹர சதுர்த்தியன்று மக்கள் பெரும் திரளாக வந்து பொள்ளாப் பிள்ளையார் அருளைப் பெற்றுச் செல்கின்றனர்.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு சுயம்பிரகாச ஈஸ்வரர் திருக்கோயில்,
திருநாரையூர், காட்டுமன்னார்குடி வட்டம்

# அருள்மிகு இராஜகோபால ஸ்வாமி திருக்கோயில், புதுப்பாளையம்.



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூர் பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் உள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு இராஜகோபால ஸ்வாமி

### இறைவி பெயர்

அருள்மிகு ருக்குமணி, சத்யபாமா

### தலச் சிறப்பு

கடலூர் நகரத்தில் அமைந்துள்ள புதுப்பாளையம் என்ற இடத்தில் கெடிலம் நதிக்கரையில் அருள்மிகு ருக்குமணி, சத்யபாமா உடனுறை அருள்மிகு இராஜகோபாலசுவாமி திருக்கோயில் அமைந்துள்ளது. ஒவ்வொரு வருடமும் மாசிமகத்தன்று தீர்த்தவாரிக்கு வரும் திருவந்திபுரம், அருள்மிகு தேவநாதசுவாமியை, அருள்மிகு இராஜகோபாலசுவாமி

எதிர்கொண்டு அழைத்து வருவது வழக்கமாகும். இத்திருக்கோயிலில் மாசி மக தீர்த்தவாரி முடிந்ததும், அருள்மிகு தேவநாத பெருமாள் இத்திருக்கோயிலுக்கு எழுந்தருளி இரு பெருமாளும் பக்தி உலாவருதல் கண்கொள்ளாக் காட்சியாகும். இங்கு அருள்மிகு தேவநாத சுவாமிக்கு மண்டகப்படி செய்விக்கப்படுகிறது. இத்திருக்கோயிலில் அருள்மிகு இராஜகோபால சந்நிதி, அருள்மிகு செங்கமலத் தாயார் சந்நிதி, அருள்மிகு ஆண்டாள் சந்நிதி, அருள்மிகு வரசித்தி ஆஞ்சநேயர் சந்நிதி, அருள்மிகு சக்கரத்தாழ்வார் சந்நிதி முதலியவை உள்ளன.

இங்குள்ள வரசித்தி ஆஞ்சநேயர் வடக்கு முகமாகப் பார்த்து எழுந்தருளியிருப்பது தென்னிந்தியாவிலேயே கிடைக்கப்பெறாத சிறப்பம்சமாகும்.

## திருவிழாக்கள்

கிருஷ்ணஜெயந்தி, வைகுண்ட ஏகாதசி போன்ற திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

## பூஜைகள்

வைகாநச ஆகமப்படி பூஜைகள் நடைபெறுகின்றன.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு இராஜகோபாலசுவாமி திருக்கோயில்,
புதுப்பாளையம், கடலூர் வட்டம்.
தொலைபேசி எண்.: 04142 295115.
இணையதள முகவரி : www.cuddalorerajagopalaswamy.org
மின்னஞ்சல் முகவரி : *rajagopalaswamytemple@gmail.com*

# அருள்மிகு இரட்டைப் பிள்ளையார் திருக்கோயில், புதுப்பாளையம்.



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூர் பேருந்து நிலையத்திலிருந்து 1 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு இரட்டைப் பிள்ளையார்

## தல சிறப்பு

இத்திருக்கோயிலில் விநாயகர் பெருமான் சந்நிதி,

அருள்மிகு சுந்தரேஸ்வரர் சந்நிதி, அருள்மிகு நவக்கிரஹ சந்நிதி, அருள்மிகு சுப்ரமணியர் சந்நிதி, அருள்மிகு மீனாட்சி அம்மன் சந்நிதி ஆகியவை உள்ளன. அவையனைத்தும் கிழக்கு முகமாக உள்ளன. இத்திருக்கோயில் ஆரம்ப காலத்தில் முட்காடுகளுக்கு நடுவில் அமைந்திருந்தது. முனிவர் ஒருவர் வந்து விநாயகரைத் தரிசித்துவிட்டு, இந்த விநாயகர் இரண்டும் ஒன்றாக இருக்கக் கூடாது என்றும், இதற்கு ஒரு கோயில் கட்டி ஒரு விநாயகரை கோயில் கருவறையிலும், மற்றொரு விநாயகரை அர்த்த மண்டபத்திலும் வைக்க வேண்டும் எனக் கூறினார். அவ்வாறு செய்தால் ஊர் விருத்தியடையும் எனவும் கூறிச் சென்றுவிட்டார். இத்திருக்கோயிலில் முனிவர் கூறியபடி ஒரு விநாயகர் கருவறையிலும், மற்றொரு விநாயகர் மகாமண்டபத்தின் தென்பாகத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டு வணங்கப்பட்டு வருகிறது. எனவே, இத்திருக்கோயில் இரட்டைப் பிள்ளையார் திருக்கோயில் என வழங்கப்பட்டு வருகிறது.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் விநாயகர் சதுர்த்தி திருவிழா, நவராத்திரித் திருவிழா, மாசிமக தீர்த்தவாரி விழா போன்றவை நடைபெற்று வருகின்றன. இத்திருக்கோயிலிலிருந்து இரண்டு பிள்ளையார்களையும் ஒரே நேரத்தில் தரிசனம் செய்வதால் பக்தர்கள் வேண்டுதல் மிக விரைவில் நிறைவேறிவிடுகிறது என்பது பக்தர்களினால் கண்கண்ட உண்மையாகும்.

அலுவலக முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு இரட்டைப்பிள்ளையார் திருக்கோயில்,

புதுப்பாளையம், கடலூர்.

# அருள்மிகு வீர ஆஞ்சநேயர் சுவாமி திருக்கோயில், திருப்பாதிரிப்புலியூர்



## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டத்தின் தலைநகரம் கடலூரில் திருப்பாதிரிப்புலியூர் என்னும் திவ்விய தலத்தில் கெடில நதிக்கரையில் கரையின் மேற்கே பேருந்து நிலையத்திற்கு எதிரிலும், புகைவண்டி நிலையத்திற்கு அருகிலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு வீர ஆஞ்சநேய ஸ்வாமி

## தல வரலாறு

சுமார் **300** ஆண்டுகளுக்கு முன்னர் இத்திருக்கோயில் அமைந்துள்ள இடம் முட்புதர்களாக இருந்தது எனவும், அதில் கிடந்த ஒரு கருங்கல்லினைப் புரட்டிப் பார்க்கும் போது அதில் வீரஆஞ்சநேயர் உருவம் இருந்ததால் அதனைக் கண்ணுற்ற

புகைவண்டி நிலைய அதிகாரி ஒருவர் சிறிய கொட்டகை அமைத்து வழிபாடு செய்ததாகவும், நாளடைவில் சிறிது சிறிதாகக் கோவில் கட்டுமானம் நடைபெற்றதாகவும் தெரிகிறது.

இத்திருக்கோயில் ஸ்ரீ வீரஆஞ்சநேய சுவாமியைப் பிரதி வாரம் வியாழன், சனி மற்றும் ஞாயிறு கிழமைகளில் பிரார்த்திக்கச்



சிறந்த தினங்களாகும். வீர ஆஞ்சநேய ஸ்வாமிக்கு வெண்ணை வைத்து, வடைமாலை சாத்தி வழிபடுவது மிகச் சிறப்புடையதாகும்.

### திருவிழாக்கள்

பிரதி வருடம் மார்கழி மாதம் அமாவாசை அன்று ஸ்ரீ அனுமந்த் ஜெயந்தி விழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது. ஸ்ரீராமநவமியை அடுத்த 10ம் நாள் முதல் தொடங்கி 13 நாட்கள் மஹோற்சவம் நடைபெறுகிறது. ஒவ்வொரு ஆண்டும் தமிழ் வருடப்பிறப்பான சித்திரை முதல் நாள் லட்சதீப விழா வெகு விமரிசையாக கொண்டாடப்பட்டு வருகிறது. அன்றையதினம் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் ஒன்றுகூடி விளக்குகள் ஏற்றி ஆஞ்சநேயரை வழிபடுகிறார்கள்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை


அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வீர ஆஞ்சநேய ஸ்வாமி திருக்கோயில்,
திருப்பாதிரிப்புலியூர், கடலூர்.
தொலைபேசி : **04142–224328.**
மின்னஞ்சல் முகவரி: veeraanjaneyarcud@gmail.com




# அருள்மிகு லட்சுமி நரசிம்மர் திருக்கோயில் சிங்கிரிகுடி



### திருக்கோயில் அமைவிடம்

பாண்டி – கடலூர் சாலையில் தவளக்குப்பம் என்ற இடத்திலிருந்து மேற்கே 2 கி.மீ தொலைவில் சிங்கிரிகுடி (சிங்கிரிகோயில்) என்னும் ஊரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது

### இறைவன் பெயர்

அருள்மிகு லட்சுமி நரசிம்மசுவாமி

### இறைவி பெயர்

அருள்மிகு கனகவல்லி தாயார்

### தீர்த்தம்

ஜமதக்னி தீர்த்தம், இந்து தீர்த்தம், பார்கவ தீர்த்தம், வாமன தீர்த்தம், கருட தீர்த்தம்.

### தலச் சிறப்பு

இங்குமூலவர் ஸ்ரீ நரசிம்மர் பதினாறு திருக்கைகளுடன்

பஞ்சாயுதங்களைத் தாங்கிக் கொண்டு இரண்யனை வதம் செய்யும் கோலத்தில் காட்சியளிக்கிறார். மூலமூர்த்திக்குக் கீழே இடப்புறம் இரணியனியன் மனைவியான நீலாவதி, கீழே வலப்புறம் மூன்று அசுரர்கள், பிரகலாதர், சுக்கிரர், வசிஷ்டர் ஆகியோர்கள் இருக்கின்றார்கள். சிறிய வடிவில் பால நரசிம்மர், யோக நரசிம்மர் உள்ளனர். ஐந்தை நேத்திரமால் என்ற நூலில் திருவகிந்திரபுரம் தேவநாதன் இத்திருக்கோயிலில் நரசிங்கராகக் காட்சியளிக்கிறார் என்று உள்ளது.



## புராணச் சிறப்பு

வசிஷ்டர் இத்திருத் தலத்தில் நரசிங்கரைத் தியானம் செய்து தவம் புரிந்து சித்தி பெற்றதாகப் புராணம் கூறுகிறது. இத்திருத்தலம் முற்காலத்தில் கிருஷ்ணாரண்யம் என்று அழைக்கப்பட்டுள்ளதாக உள்ளது.

## வரலாற்றுச் சிறப்பு

இரணியனை வதம் செய்த எம்பெருமானை ஸ்ரீநரசிம்ம அவதார கோலத்தில் மீண்டும் தரிசிக்க வேண்டி தவம் செய்த பிரகலாதனுக்கு எம்பெருமான் ஸ்ரீமத் நாராயணன் நரசிம்மராக காட்சியளித்ததாக வரலாறு. காலை வேளையில் பால நரசிம்மராகவும், மத்தியான வேளையில் யோக நரசிம்மராகவும், சாயங்கால வேளையில் உக்ரநரசிம்மராகவும் காட்சியளிப்பதாக வரலாறு. இத்தலம், ஸ்ரீநரசிம்மரின் ஜென்ம நட்சத்திரமான சுவாதியன்று ஒரே நேர்க்கோட்டில் அமைந்துள்ள மூன்று நரசிம்மர்

தலங்களில் முதன்மையும் முதலாவதாக தரிசிக்க வேண்டியதும் ஆகும்.

## திருவிழாக்கள்

வைகாசி மாதத்தில், பிரம்மோற்சவம், வைகாசி ஸ்வாதி நட்சத்திரத்தில் திருத்தேர், ஸ்ரீ வைகுண்ட ஏகாதசி, மாசிமக தீர்த்தவாரி, பங்குனி உத்திரம் திருக்கல்யாணம்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.30 மணி முதல் இரவு 8.30 மணி வரை



அலுவலக முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு லட்சுமிநரசிம்மர் திருக்கோயில்,

சிங்கிரிகுடி.

# அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் திருக்கோயில்
# காட்டுமன்னார்கோயில் நகர்

## (ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் அவதாரதலம்)



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூர் மாவட்டம், சிதம்பரத்திலிருந்து தென்மேற்கே 25 கி.மீ. தூரத்திலும், ஸ்ரீமுஷ்ணத்திலிருந்து 35 கி.மீ. தூரத்திலும் கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து 15 கி.மீ தூரத்திலும் கும்பகோணத்திலிருந்து 40 கி.மீ தூரத்திலும் உள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு ஸ்ரீவீரநாராயணப்பெருமாள்

### இறைவி பெயர்

அருள்மிகு ஸ்ரீதேவி, பூதேவி

## பூஜைகள்

ஆறுகால பூஜை நடைபெறுகின்றன.

## தலச் சிறப்பு

வைணவ ஆசார்யர்களான ஸ்ரீமந்நாதமுனிகள், ஸ்ரீ ஆளவந்தார் ஆகியோரின் அவதார தலம். ஸ்ரீமந்நாதமுனிகள் இந்த ஆலயத்தில் மன்னனாருக்குக் கைங்கர்யம் செய்த பெருமையைப் பெற்றது இப்பேரூர்.



ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்தில் இங்கு மன்னர் கோயிலுக்கு வந்த மேலக்கோட்டை திருநாராயணபுரத்து ஸ்ரீவைஷ்ணவர்கள் விளங்குகிறார். தினசரி நான்கு கால பூஜைகள் நடைபெறுகின்றன. மார்கழி மாதத்தில் இராப்பத்து, பகல்பத்து உற்சவமும், ஏகாதசி திதியில் சொர்க்க வாசல் திறப்பு உற்சவமும் சிறப்புற நடைபெறுகிறது. நம்மாழ்வாரின் ஆரா அமுதே என்னும் பாசுரத்தை கேட்ட ஸ்ரீமந் நாதமுனிகள் குருகூர் (ஆழ்வார் திருநகரி) சென்று அங்கிருந்து நாலாயிரத்திவ்யப் பிரபந்தப் பாசுரங்களைப் பெற்றுவந்தார். ஸ்ரீமந்நாதமுனிகன் இல்லாவிட்டால் இப்பாசுரங்கள் கிடைத்திருக்காது. ஆழ்வார்களின் அருளிச் செயல்களாம் இத்தேன் தமிழ்ப் பாடல்களுக்கு அவரே இசை அமைத்துப்

பிரசித்தமாக்கினார். ஸ்ரீமந்நாதமுனிகள் மூலம் ஆழ்வார்களின் அருளிச் செயல் பாசுரங்களை வெளிக்கொணர இந்த மன்னார் சந்நதி வழி காட்டியதால் இவ்வூர் காட்டும் மன்னனார் கோயில் எனப்பட்டது. வீரநாராயணபுரம், மன்யுஷேத்திரம், வீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் எனவும் வழங்கப்படுகிறது. மதங்க மாமுனிவருக்குப் பெருமாள் சேவை சாதித்து அருளிய இடமாதலால் மதங்காஸ்ரமம் என்ற சிறப்புப் பெயரும் உண்டு.

லட்சுமிநாத ஸமாரம்பாம் நாதயாமுன மத்யமாம் அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம் என்கிற கூரத்தாழ்வாரின் தனியனுக்கு ஏற்றபடி பெருமாளுக்கு வலது பக்கம் தாயாரும், இரு மருங்கிலும் ஆசார்யார்களான ஸ்ரீமந்நாதமுனிகளும், ஸ்ரீ ஆளவந்தாரும், முன் மண்டபத்தில் ஸ்ரீராமானுஜரும், ஸ்ரீமன் மணவாள மாமுனிகளும், ஆழ்வார்களும் வைஷ்ணவ சம்பிரதாய கிரமப்படி சேவை சாதிக்குமாறு சந்நிதிகள் அமைந்து இருப்பது பெருஞ்சிறப்பு, மூலவர் ஸ்ரீ வீரநாராயணப்பெருமாள் நின்ற திருக்கோலம் ஸ்ரீதேவி பூதேவியுடனும், உற்சவர் ஸ்ரீராஜகோபாலன், ருக்மணி சத்யபாமா பசு மற்றும் கன்றுடன் காட்சி அளிக்கிறார்கள். தாயார் மூலவர் மரகதவல்லித் தாயார் உற்சவர் செங்கமலவல்லித் தாயார் ( ஹேமாம்புஜநாயகி) நித்ய உற்சவராக அழகிய மன்னனார் எனப்படும் காட்டும் மன்னார் (சுந்தர கோபாலன்) உபய நாச்சியார்களுடனும் பிரார்த்தனைப் பெருமாளாக செண்பகமன்னனார் உபய நாச்சியார்களுடனும் சேவை சாதிக்கிறார்கள். இவை தவிர ஸ்ரீ நம்மாழ்வார் சந்நிதி புளியமரத்துடன் உபதேசக்கிரமத்தில் சீடர் மதுரகவி ஆழ்வாருடன் உள்ளது. ஸ்ரீமந்நாதமுனிகள் சாளக்கிராமத் திருமேனியாகும். இவரது திருவடியில் சீடர்களான உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, மேலையகத்தாழ்வான், கீழையகத்தாழ்வான், திருக்கண்ண மங்கையாண்டான், குருகை காவலப்பன் ஆகியோர் உள்ளனர். மேலும் திருமங்கை ஆழ்வார் ஸ்ரீயோக நரசிம்மர், ஸ்ரீஆளவந்தார், ஸ்ரீஆண்டாள், மதங்க மகரிஷி முதலிய சந்நிதிகள் உள்ளன.

இத்திருக்கோயிலின் கருவறை விமானத்தின் தென்புறமும், வடபுறமும், பாலிமொழியிலும், அக்காலத் தமிழ்

எழுத்துகளிலும் கல்வெட்டுச் செய்திகள் உள்ளன. சோழர்கள் நாயக்கர்கள், ராயர்கள் ஆகியோர் ஆலயத்துக்கு வழங்கிய உதவிகள் குறிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீமந்நாதமுனிகள் சந்நிதியின் வெளிப்புறத்தில் வடக்குப் பிரகாரத்தில் உள்ள திருமஞ்சன நீர்விழும் தும்புக்கருகில் கருங்கல் சுவரில் கருங்கல் சிற்பம் உள்ளது. சோழமன்னனுக்குக் கோயிலில் வரவேற்பு அளிக்கப்படும் காட்சி சித்திரிக்கப்பட்டுள்ளது. கண்டராதித்த சோழன் காலக் கல்வெட்டில் வீரநாராயண விண்ணகர் எனவும், ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் பத்தாம் ஆண்டுக் கல்வெட்டில் பெருமாளின் பெயர் மன்னனார் என்றும் கிருஷ்ண தேவராயர் காலக்கல்வெட்டில் அழகிய மன்னனார் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

## திருவிழாக்கள்

சித்திரை மாதம் பிரமோற்சவம் நடைபெறும், ஆனி மாதத்தில் ஸ்ரீமந்நாதமுனிகள் அவதார உற்சவம் ஆடி மாதத்தில் ஸ்ரீஆளவந்தார் அவதார உற்சவம் ஆண்டாள் உற்சவம் நிகழ்கின்றன.

ஆவணி மாதத்தில் உரியடி உற்சவம், பவித்ரோற்சவம் மார்கழி மாதத்தில் பகல்பத்து, இராப்பத்து உற்சவங்கள், வைகுண்ட ஏகாதசி மற்றும் ஸ்ரீ ராமநவமி மகா உற்சவம் முதலான உற்சவங்கள் வெகு விமரிசையாக நடைபெறுகின்றன.

இத்திருக்கோயில் பாஞ்சராத்ர ஆகம தென்கலை சம்பிரதாயத் திருக்கோயிலாகும்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12.00 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வீரநாராயணப்பெருமாள் திருக்கோயில்,
காட்டுமன்னார்குடி நகர் மற்றும் வட்டம்.

# அருள்மிகு சரநாரயணப் பெருமாள் திருக்கோயில்

## திருவதிகை, பண்ருட்டி



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் பண்ருட்டி பேருந்து நிலையம் மற்றும் ரயில் நிலையத்திலிருந்து பண்ருட்டி–கடலூர் (வழி பாலூர்) நெடுஞ்சாலையில் 1கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு சரநாராயணப்பெருமாள்

### இறைவி பெயர்

அருள்மிகு செங்கமலத்தாயார்

### தல விருட்சம்

செண்பக மரம்

### பூஜைகள்

இத்திருக்கோயிலில் 2 கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

## தல வரலாறு

நடுநாட்டின்கண் அமைந்துள்ள திருவதிகையில் அமைந்துள்ளது. திரிபுர தகனத்தின்போது சிவபெருமானுக்குச்



சரம் (அம்பு) தந்ததால் சரநாராயணன் என்ற திருப்பெயருடன் சுவாமி நின்ற திருக்கோலத்தில் அருள்பாலிக்கின்றார்.



இத்திருத்தலத்தில் சயன நரசிம்மர் சயனக் கோலத்தில் காட்சி தருகின்றார்.

திருவக்கரையில் வக்ராசூரனைச் சம்கரித்தபின் சிரம

பரிகாரத்திற்காக இச்சந்நிதியில் சயனித்ததாகப் புராணம் கூறுகின்றது. வில்லிபுத்தூரார் பாரதத்தில் அர்ச்சுனன் தீர்த்தயாத்திரை வந்தபோது இந்தப் பெருமானை சேவித்ததாகப் புராணம் கூறுகிறது. இப்பெருமாள் ஒப்பிலியப்பன், ஸ்ரீநிவாசனைப் போல் மார்க்கண்டேய மகரிஷி புத்திரி ஸ்ரீதேவியைத் திருமணம் செய்து கொண்டு நின்ற திருக்கோலத்தில் திவ்யதம்பதிகளாக அருள்பாலிக்கின்றனர். இத்திருக்கோயில் பிரார்த்தனை தலமாகும். அமாவாசையில் இப்பெருமாள் சிறப்பு சேவை சாதிக்கின்றார். இப்பெருமாளை ஏழு அமாவாசையில் அங்கப்



பிரதட்சணம் செய்து வழிபட்டால் வேண்டியதை வேண்டியவாறு அருளக்கூடிய பெருமாளாக அருள்பாலிக்கிறார். பெரிய திருவடியாகிய கருடாழ்வார் இத்தலத்தில் மாறாக கையைக் கட்டிக்கொண்டு சேவக பாவத்தில் காட்சி தருகின்றார்.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு சரநாராயணப் பெருமாள் திருக்கோயில்,
திருவதிகை, பண்ருட்டி.

# அருள்மிகு நர்த்தனவல்லபேஸ்வரர் திருக்கோயில் திருக்கூடலையாத்தூர்.

(பாடல் பெற்ற தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் சிதம்பரத்துக்கு மேற்கே 25 கி.மீ தொலைவில் மனிமுத்தா நதியும், வெள்ளாறு நதியும் கூடும் இடத்தில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு நர்த்தனவல்லபேஸ்வரர்

## இறைவி

அருள்மிகு ஞானசக்தி, பராசக்தி

## தீர்த்தம்

சங்கம தீர்த்தம்

## தல வரலாறு

இத்தலத்தில் பார்வதி, லட்சுமி, சரஸ்வதி மூவரும் உத்திரவாகினி நதிவடிவாகிய திரிவேணி சங்கமம் எனப் பெயர் பெற்றதனால் இங்கு பிதுர் கர்மாக்கள் செய்தவர் கயாபிண்டம் செய்த பலனைப் பெறுவர்.

சிவபெருமான் கயிலையில் விஷ்ணுமூர்த்தி முதலிய தேவர்களுக்குக் காட்டிய நர்த்தன தரிசனத்தைப் பிரம்மதேவரும் காண விரும்பி பிரார்த்திக்க சிவாக்ஞையால் இங்கு



சரஸ்வதியோடு தவம் புரிந்து யாகம் முதலியன செய்து தரிசனம் கிடைக்கப்பெற்றதால் சுவாமிக்கு நர்த்தனவல்லபேஸ்வரர் என்ற பெயர் ஏற்பட்டது. இவ்வாறு மூர்த்தி, ஸ்தலம், தீர்த்தம் ஆகிய



மூன்றிலும் சிறப்பு பெற்றது. சுந்தரர் விருத்தாசலத்திற்குச்

செல்லும்போது சிவபெருமான் அந்தணர் உருக்கொண்டு அவர் முன் தோன்றி கூடலையாற்றூர் வழியாகச் செல்ல வேண்டுமென்று அழைத்து வந்து சுந்தரரால் பதிகம் பாடப்பெற்ற தலமாகும்.

### தலத்தைப் பாடியவர்கள்

இத்தல இறைவனைச் சுந்தரர், சேக்கிழார், அருணகிரிநாதர், இராமலிங்கஅடிகள் ஆகியோர் பாடல்களால் பாடியுள்ளனர்.

### பூஜை காலங்கள்

தினசரி நான்கு கால பூஜைகள்

### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் சித்திரை மாதம் சூரிய பூஜை, மஹா சிவராத்திரி போன்ற திருவிழாக்கள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.



# அருள்மிகு அமிர்த கடேஸ்வரர் திருக்கோயில்
# மேலக்கடம்பூர்

## (பாடல் பெற்ற தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் சிதம்பரத்தின் தென்மேற்கே 30 கி.மீ தூரத்திலும், காட்டுமன்னார்கோயிலிலிருந்து எய்யலாம் செல்லும் பாதையில் 6 கி.மீ தூரத்தில் உள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு அமிர்தகடேஸ்வரர்.

### இறைவி பெயர்

அருள்மிகு சோதிமின்னம்மை (வித்ய ஜோதி நாயகி)

## தல வரலாறு

'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற பதிகத்தை அப்பர் சுவாமிகள் பாடிய தலம் இத்திருத்தலம் ஆகும்.

அசுரர்களும், தேவர்களும் திருப்பாற்கடலைக் கடைந்து அமிர்த கலசத்தினைப் பெற்ற பின், தேவர்கள் முழு முதற்கடவுளான விநாயகரை வணங்காமல் அமுதுண்ண அமர்கிறார்கள். இவர்களுக்கு பாடம் புகட்ட எண்ணிய விநாயகர் அமிர்த கலசத்தினைப் பூலோகத்தில் மறைத்து வைக்கிறார். அவ்வாறு எடுத்து வந்து மறைத்து வைக்க முற்படுகையில் ஓர் துளி அமிர்தம் கடம்ப வனக்காட்டில் வீழ்ந்து சுயம்புலிங்க மூர்த்தியாகிறது. கடம்பவனக்காடு இந்நாளில் கடம்பூர் எனவும், தல மரம் கடம்ப மரமாகவும் ஆனது. இதனால் இத்தல இறைவன் ஸ்ரீஅமிர்தகடேஸ்வரர் என்றே அழைக்கப்படுகிறார். இவர் சாந்த மூர்த்தியாகவும், காலசம்ஹார மூர்த்தியாகவும் அருள் பாளிக்கிறார்.



இக்கோயில் லிங்க மூர்த்தி சுயம்புலிங்க மூர்த்தியாக உருவானவர். எனவே, தொப்புள் ஸ்தானமாக கருதப்படும் கொடிமரம் இல்லை. மேலக்கடம்பூர் கோயில் 'கரக்கோயில்' வகையினைச் சார்ந்தது. நான்கு சக்கரங்களுடன் கிழக்கு நோக்கி குதிரைகள் பூட்டிய வண்ணம் அழகிற தேர் வடிவில் அமைக்கப்பெற்று சிறப்புடன் காட்சியளிக்கிறது. இந்திரனின் தாய் இத்தலத்து இறைவனை நாள்தோறும் விண்ணுலகில் இருந்து பூசித்து வந்தாள். தன் தாயின் கடமையை எளிதாக்க எண்ணி இந்திரன் இக்கோயிலைக் கரங்களால் அகழ்ந்து, சக்கரம் பூட்டி குதிரைகளைப் பிணைத்து இழுக்க முயலுகையில், விநாயகரை வணங்காமல் காரியம் செய்ய முற்பட்டதனால் வெகுண்ட விநாயகர் ஆரவாரத்துடன் தன் கால்

பெருவிரலால் தேரை அழுத்த தேர்ச் சக்கரம் புதையுண்டு கல்லாய்ச் சமைந்தது. இப்புராண வரலாற்றினை நினைவூட்டும் வகையில் கரக்கோயில் சக்கரம் வடமேற்கு மூலையில் புதைந்துள்ளதையும் காணலாம். இக்கரக்கோயில் கர்ப்பக்கிரகத்தின் வடமேற்குமூலை சற்று சாய்ந்த நிலையில் அமைக்கப் பெற்றிருக்கிறது.

முதலாம் குலோத்துங்கன் அவையில் ராஜகுருவாக கவுட (வங்காளம்) தேசத்திலிருந்து சிதம்பரம் நடராஜரை தரசிக்க வந்த ஸ்ரீகந்தசிவன் என்பவர் இருந்தார். இவர் தன்னுடன் ரிஷப தாண்டவமூர்த்தி மேல்நோக்கிய ரிஷபத்தின்மேல், வீசிய பத்து கரங்களில் கத்தி, சூலம், தீச்சட்டி, காபலம், பாம்பு, கேடயம், தண்டம், குத்தீட்டி ஏந்தி பிரளயகாலத்தில் சகல ஜீவன்களும் தன்அடி சேர்ந்திட காட்சியினைக் காட்டிடும் அற்புதக் கலைப் படைப்பு உடைய ஓர் அற்புதமான சிறிய செப்புத் திருமேனியினைக் கொணர்ந்தார். பிரளயகாலத்தில் உலக ஜீவராசிகள் அனைத்தும் பரம்பொருளான சிவன் காலடியில் அடைக்கலமாகின்றன. சிவபெருமான் ரிஷபத்தின் மேல் நின்று பிரளய தாண்டவமாடி அருள்பாலிக்கிறார்.

முதலாம் குலோத்துங்க சோழனின் வேண்டுகோளின்படி ராஜகுரு ஸ்ரீ கண்ட சிவம் கி.பி. 1110ல் கடம்பூரில் தங்கி 'திருக்கரக்கோயில்' நிர்மான திருப்பணி செய்து வந்துள்ளார். பின்னர் தன் உபாசனா மூர்த்தியான 'ரிஷபத் தாண்டவ மூர்த்தியை' இங்கேயே விட்டுச் சென்றிருக்கலாம் என்பது ஆராட்சியாளர்களின் கணிப்பு. இம்மூர்த்தியைப் பிரதோஷ நாட்களில் வணங்குவது சிறப்பு. இதுபோல் ஓர் கற்சிற்பம் கிழக்கு வங்காளத்தில் உள்ளதாக அறியப்படுகிறது.

ராஜேந்திர சோழ மன்னன் வாதாபி வரை படை நடத்திச் சென்று வரும்போது அங்குள்ள மன்னர்களின் கோட்டை வாயில் கணபதி சிலைகளையும், துபாரபாலகர் சிலைகளையும் எடுத்து வந்து தமிழகத்தில் பிரதிஷ்டை செய்தான். இதன் பின்னரே விநாகர் வழிபாடு தென்னிந்தியாவில் வேரூன்ற ஆரம்பித்தது. துவாரபாலகர் சிலைகள் தஞ்சை சரஸ்வதி மஹாலில் வைக்கப்பட்டுள்ளன.

பங்குனி மாதம் 3, 4, 5–ம் தேதிகளில் மட்டும் காலை 6.00 மணிக்கு சூரிய உதயத்தின் கதிர்கள் மூலஸ்தானத்தில் அமிர்தகடேஸ்வரர் திருமேனி மீது வீழ்ந்து ஜோதி மயமாய் அளிக்கும் காட்சி அற்புதமான கண்கொள்ளாக் காட்சியாகும். அச்சமயம் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெறும். ஸ்ரீ சனீஸ்வரபகவான் இங்கு கழுகு வாகனத்தில் காட்சி தருகிறார். ராம அவதார காலக்கட்டத்திற்கு முன்னரே சனீஸ்வருக்குக் காகம் வாகனமாகத் திகழ்கிறது. எனவே, இச்சிலை ராமஅவதார காலக்கட்டத்திற்கு முற்பட்ட வரலாற்றினை நினைவூட்டுகிறது. தில்லையில் பதஞ்சலி முனிவருக்காக நடராஜர் ஆனந்தக் கூத்தாடினார். சிதம்பரத்தின் அருகில் உள்ள இத்தலத்தில் பதஞ்சலி முனிவர் தம் தலை மீது நடராஜரை வைத்துக் கூத்தாடி மகிழும் காட்சி மிக அழகுற வடிவமைக்கப்பட்டுள்ளது.

மேலக்கடம்பூர் சிவாலய திருவிழாவிற்கென குலோத்து



ங்கன் அளித்த பல செப்புத் திருமேனிகள் உற்சவ காலங்களில் எழுந்தருள செய்யப்படுகின்றன.

### தலத்தைப் பாடியவர்கள்

இத்திருக்கோயில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் (6–ம் நூற்றாண்டிலும்) சுந்தரர், மாணிக்கவாசகர் (9–ம் நூற்றாண்டிலும்) ஆகிய நால்வரால் பாடல் பெற்ற ஸ்தலமாகும். இராமலிங்கஅடிகள் (19–ம் நூற்றாண்டு) ஸ்ரீமன் பாம்பன் சுவாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் ஆகியோரால் வணங்கி வழிபடப் பெற்றது இத்தலம்.

### பரிகார தலம்

அங்காரகன் வழிபட்டு அருள்பெற்ற தலமாதலால் இத்தல இறைவனை வழிபடுவோர் அங்காரதோஷம் (செவ்வாய் தோஷம்) நீங்கி நலம் பெறுதல் கண்கூடு.

### திருவிழாக்கள்

மஹாசிவராத்திரி, வருடப்பிறப்பு, ஆனித் திருமஞ்சனம், விசாஹ உற்சவம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, கந்தசஷ்டி முதலான திருவிழாக்கள் வெகு விமரிசையாக நடைபெறுகின்றன.



# அருள்மிகு பாசுபதேஸ்வரர் திருக்கோயில்
# திருவேட்களம், சிதம்பரம்.

(பாடல் பெற்ற தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழக வளாகத்தை ஒட்டி உள்ள திருவேட்களம் எனும் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு பாசுபதேஸ்வரர்

### இறைவி பெயர்

அருள்மிகு நல்லநாயகி

### தல விருட்சம்

வெள்ளெருக்கு, மூங்கில்

### தீர்த்தம்

கிருபாகடாட்ச தீர்த்தம்

## தல வரலாறு

அர்ச்சுனருக்குச் சிவபெருமானால் பாசுபதம் வழங்கப்பட்ட வரலாற்று சிறப்பு உள்ளது. அதன் காரணமாகவே இத்தல இறைவனுக்குப் பாசுபதேஸ்வரர் எனும் திருநாமம் வழங்கப்படுகிறது.

அர்ச்சுனனுடைய உற்சவ விக்ரகம் இத்திருக்கோயிலில் உள்ளது. இறைவன் கிராத (வேட) மூர்த்தியாக பார்வதி தேவியுடன் பாசுபதாஸ்திரம் கையில் ஏந்திய உற்சவ விக்ரகம் உள்ளது.

## தலத்தைப் பாடியவர்கள்

திருஞானசம்பந்தர் மற்றும் திருநாவுக்கரசர் ஆகியோரால் பாடல் பெற்ற ஸ்தலம்.

## திருவிழா

ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரம் அன்று உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது.



## நவக்கிரக வழிபாட்டு பலன்

| | |
|---|---|
| சூரியன் | – ஆன்ம பலமும், உடல் நலமும் தரும். |
| சந்திரன் | – மன நலம், புகழ் வழங்குவார். |
| செவ்வாய் | – ஆரோக்கியம், வீரம் கிட்டும். |
| புதன் | – கல்வி மற்றும் அறிவு விருத்தியாகும். |
| வியாழன் | – சந்தான பாக்கியம். |
| வெள்ளி | – அழகும், இன்ப வாழ்வும் நல்கும். |
| சனி | – நீண்ட ஆயுள். |
| ராகு | – காரிய வெற்றி. |
| கேது | – குடும்ப அபிவிருத்தி உண்டாகும். |

# அருள்மிகு திருக்குமாரசாமி திருக்கோயில் ராஜேந்திரப்பட்டினம். (திருஎருக்கத்தம்புலியூர்)

(பாடல் பெற்ற தலம்)



**திருக்கோயில் அமைவிடம்**

விருத்தாசலத்திலிருந்து தெற்கே 10 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.

**இறைவன் பெயர்**

அருள்மிகு திருக்குமாரசுவாமி

**இறைவி பெயர்**

அருள்மிகு வீரார்முலையம்மை

**தல விருட்சம்**

வெள்ளெருக்கு

**தல சிறப்பு**

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரும், திருஞானசம்பந்தப் பெருமான் காலத்தில் வாழ்ந்து அவர் அருளும் தேவாரத்திருப்பதிகங்களுக்கு உடனிருந்து யாழ் வாசிக்கும்

தொண்டு செய்தருளியவருமான திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவதரித்த திருத்தலம் இத்தலம் ஆகும். அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சிவபெருமான், ஆன்மாக்கள் தன்னை வழிபட்டு உய்திபெறவேண்டும் என்ற பெருங்கருணையால் சிவலிங்கம் முதலான திருவுருவுக்கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பலவற்றுள் இத்தலம் சிறப்பு வாய்ந்ததாகும். மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறப்புற்றதாய் விளங்குவது ராஜேந்திரப்பட்டினம் என வழங்கும் திருஎருக்கத்தம்புலயூர் ஆகும். வியாக்ரபாத முனிவர் பூசித்தவனாகப் பெரும்பற்றப்புலியூர் (சிதம்பரம்), பெரும்புலியூர், திருப்பாதிரிப்புலியூர், ஓமாம்புலியூர், திருஎருக்கத்தம்புலியூர் ஆகிய ஐந்து தலங்கள் கூறப்பெறும். அவற்றுள் வெள் எருக்கைத் விருட்சமாகக் கொண்டுள்ளதால் இத்தலம் எருக்கத்தம்புலியூர் என்று கூறப்படுகிறது. இங்கு விளங்கும் அருள்மிகு திருக்குமாரசுவாமி சுயம்பு மூர்த்தி அம்பிகை வீரார்முலையம்மை மணக்கோலத்தில் சுவாமியின் வலது பக்கத்தில் விளங்குகிறார்.




### தலத்தை பாடியவர்கள்

சம்பந்தர் சுவாமிகள் மற்றும் அப்பர் சுவாமிகள் இப்பெருமான் மீது தேவாரம் பாடியுள்ளார்கள்.

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு திருக்குமாரசுவாமி திருக்கோயில்
ராஜேந்திரப்பட்டினம், விருத்தாசலம் வட்டம்

# கடலூர் மாவட்ட திருக்கோயில்கள் வரைபடம்






குறிப்பு

| | |
|---|---|
| மாநில எல்லை | |
| மாவட்ட எல்லை | |
| வட்டஎல்லை மற்றும் தலைமயிடம் | |
| ஊராட்சிஒன்றிய தலைமயிடம் | |
| பேரூராட்சி தலைமயிடம் | |
| தொடர்வண்டி பாதை | |
| தேசிய நெடுஞ்சாலை | |
| மாநில நெடுஞ்சாலை | |
| இதர மாவட்ட சாலை | |
| ஆறு, ஏரி, ஓடை | |
| **திருக்கோயில்கள்** |  |

# அருள்மிகு உச்சிநாதசுவாமி திருக்கோயில்
# சிவபுரி

(பாடல் பெற்ற தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் சிதம்பரத்திலிருந்து தென்கிழக்கே சுமார் 5 கி.மீ தூரத்தில் அண்ணாமலை நகர் செல்லும் சாலையில் கவரப்பட்டு – பேரளம்பட்டு சாலையில் சிவபுரி உள்ளது.

## இறைவன் பெயர்

உச்சிநாதேஸ்வரர்

## இறைவி பெயர்

கனகாம்பிகை

## பூஜைகள்

தினசரி இருகால பூஜைகள் நடைபெறுகின்றன

## தல விருட்சம்

நெல்லிமரம்

## தீர்த்தம்

கிருபா சமுத்திரம்

## தலத்தைப் பாடியவர்கள்

திருஞானசம்பந்தரால் பாடல்பெற்ற திருத்தலம். கன்வ மகரிஷி வழிபட்ட தலம், தேவாரத் திருப்பதிகம் பெற்ற காவிரி வடகரை தலங்களில் இத்தலம் மூன்றாவது தலம். இத்தல முருகனை அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியுள்ளார்.

## தல வரலாறு

திருஞானசம்பந்தருக்குச் சிவபெருமான் உச்சிக் காலத்தில் அமுதுபடைத்து மகிழ்ந்தார் என்றும் அதன் காரணமாகவே சுவாமிக்கு உச்சிநாதசுவாமி எனும் பெயர் விளங்கப்பெறுவதாக வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

## திருவிழாக்கள்

ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் சிறப்பாக உற்சவம் நடைபெறுகிறது.



# அருள்மிகு பிரணவ வியாக்ரபுரீஸ்வரர் திருக்கோயில்
# ஓமாம்புலியூர்
# (குரு பரிகார தலம் மற்றும் பாடல் பெற்றத் தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டத்தில், காட்டுமன்னார்கோயிலுக்குத் தெற்கே 7கி.மீ தொலைவிலும் சிதம்பரத்திலிருந்து 32 கி.மீ. தொலைவிலும் இத்திருக்கோயில் அமைந்துள்ளது. பேருந்து வசதி உண்டு.

### இறைவன் பெயர்

அருள்மிகு பிரணவ வியாக்ரபுரீஸ்வரர், துயர்தீர்த்தநாதர்

### இறைவி பெயர்

அருள்மிகு புஷ்பலதாம்பிகை, பூங்கொடிநாயகி

### தல விருட்சம்

இலந்தை மரம் (வதரி)

### தீர்த்தம்

கௌரி தீர்த்தம்

### தலத்தைப் பாடியவர்கள்

'உம்பர்கள் ஏத்தும் ஓமாம்புலியூர் உடையவர்
வடதளி இதுவே
—என திருஞானசம்பந்தரும்

'பொழில் கெழுவு தரும் ஓமாம்புலியூர்'
– என அப்பர் பெருமானும்

'ஓமாம்புலியூர் வாழ் உத்தமமே'
– என வள்ளலாரும்
பாடி மகிழ்ந்துள்ளனர்.

### தல சிறப்பு

வியாக்ரபாதர் (புலிக்கால் முனிவர்) சிவபெருமானைப்



பூஜித்த இடங்கள் புலியூர் எனப் போற்றப்படுகின்றன. அவை ஐந்தாகும். அவற்றுள் ஒன்று ஓமாம்புலியூர் அருள்மிகு பூங்கொடி நாயகி உடனுறை துயர்தீர்த்தநாதர் திருக்கோயிலாகும். ஓமம்

என்றால் வேள்வி என்று பொருள்படும். வேள்வி சிறப்புடைய ஊர். ஓமம் + ஆம் + புலியூர் என்றழைக்கப்பட்டு தற்போது ஓமாம்புலியூர் எனப்படுகிறது.

இத்திருக்கோயில் வியாக்ரபாதர் பூஜித்த ஸ்தலம். கோயிலுக்குள் உபதேசம் செய்யும் வடிவில் தட்சிணா மூர்த்தியானவர் மூலமூர்த்தியாக, குருமூர்த்தியாக உள்ளதால் குரு மூர்த்தத்தலமாக விளங்குகிறது.

சிவபெருமானே குருதட்சிணாமூர்த்தியாக இருந்து, ப்ரணவத்தின் உட்பொருளைப் பார்வதி தேவிக்கு உபதேசம் செய்த குருஸ்தலம். எனவே,

குரு பெயர்ச்சி பூஜைக்கும், பரிகார பூஜைக்கும் உகந்த ஸ்தலமாக இது விளங்குகிறது. ரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கான பிரார்த்தனை மற்றும் பரிகார ஸ்தலமாக விளங்குகிறது. ஓம் என்னும் பிரணவத்திற்கு பொருள் உபதேசம் நடைபெற்ற இடமாதலால் ஓம் +ஆம் + புலியூர், ஓமாம்புலியூர் எனவும் பொருள்படுவதை அறியலாம்.

இத்திருக்கோயிலில் வேறு எங்கும் இல்லாத வகையில் சுவாமி சந்நிதிக்கும், அம்பாள் சந்நிதிக்கும் நடுவில் குருதட்சிணாமூர்த்தி உபதேசக்கிரமத்தில் காட்சி தரும் சந்நிதி உள்ளது. புகழ்பெற்ற ஐந்து புலியூர்களின் சிவலிங்க உருவங்கள் சிறப்பாக உள்ளது. சலந்தரனை வெல்வதற்காக சிவபெருமான் திருமாலுக்குச் சக்கரம் வழங்கும் சிற்பம் உள்ளது. திருக்கோயில் பிரகாரத்தில் வியாக்ரபாத முனிவருக்குக் காட்சி தந்த நடராஜர் சந்நிதி உள்ளது. திருக்கோயிலுக்கு அருகே மற்றொரு சிவாலயம் உள்ளது. அங்கு நாகவல்லி உடனுறை வரதனீஸ்வரர் கோயில் கொண்டுள்ளார்.

### பூஜை காலங்கள்

தினசரி 4 கால பூஜைகள் நடைபெறுகிறது.

### திருவிழாக்கள்

சித்திரை வருடப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித்திருமஞ்சனம், தைப்பூசம், மஹாசிவராத்திரி, பங்குனி உத்திரம் முதலான திருவிழாக்கள் வெகுவிமரிசையாக நடைபெற்று வருகின்றன.

# அருள்மிகு புத்துமாரியம்மன் திருக்கோயில்
# குறிஞ்சிப்பாடி



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூரிலிருந்து வடலூர் செல்லும் பிரதான சாலையில் கடலூரிலிருந்து **32** கி.மீ. தூரத்திலும், வடலூரிலிருந்து **3** கி.மீ. தூரத்திலும் ஊரின் நடுநாயகமாக அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

அருள்மிகு புத்துமாரியம்மன்

## தல விருட்சம்

வேம்பு

## தீர்த்தம்

புஷ்பகரணி

## தல சிறப்பு

இத்திருக்கோயில் கிழக்கு நோக்கிய நிலையில் நான்கு புறமும் உயரமான சுற்று மதில்களால் ஆனது. கோயிலின் உள்ளே நுழைந்தவுடன் சுமார் 300 ஆண்டுகளுக்கு மேலாக விளங்கி வரும் தல விருட்சமாகிய வேம்பு மரம் காட்சியளிக்கின்றது.

கர்ப்பக்கிரகத்தில் சுதை வேலைப்பாடுகளுடன் கூடிய மாரியம்மன் புற்றின் மீது அமர்ந்து உடுக்கை, சூலம், கத்தி, கபாலம் ஏந்திய நான்கு திருக்கரங்களுடன் கம்பீரமாக சிரித்த முகத்துடன் காட்சி அளிக்கின்றார். ஐந்து தலை நாகம் அம்பாளுக்கு குடை பிடிப்பதுபோல் அமைந்திருப்பது இன்னும் சிறப்பானதாகும். அம்பாளின் காலடியில் ரேணுகா சிலா விக்கிரகமாக கழுத்துமாரியம்மன் என்ற பெயரில் சுயம்பு மூர்த்தியாக காட்சியளிக்கிறாள்.

## பிரார்த்தனை

இத்திருக்கோயில் இறைவியை வெள்ளியன்று விரதம் இருந்து வணங்கி வழிபடுவோருக்கு அனைத்துவித நோய்களும் தீரும் என்றும், புத்திர பாக்கியம் கிட்டும் என்பது மக்களின் நம்பிக்கையாக உள்ளது.

## திருவிழாக்கள்

திருக்கோயிலின் பெருந்திருவிழாவாக ஆடிமாதம் நடைபெறும் செடல் திருவிழாவாகும், இத்திருவிழா பத்து நாள்கள் வெகு சிறப்பாக நடைபெறும். மேலும் தைமாதம் நடைபெறும் சாகை

விழா (கூழ் வார்த்தல்), வைகாசி மாதம் முதல் வெள்ளி அக்னி நட்சத்திரத்தில் பானக பூஜை விழாவும், புரட்டாசியில் நவராத்திரி விழாவும், மார்கழியில் திருப்பட்சியும் சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

## பூஜை காலங்கள்

இரண்டு கால பூஜை

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு புத்துமாரியம்மன் திருக்கோயில்,
குறிஞ்சிப்பாடி, குறிஞ்சிப்பாடி வட்டம் – 607302.



# அருள்மிகு அழகர் திருக்கோயில்
# தென்னம்பாக்கம்



### திருக்கோயில் அமைவிடம்

வேண்டுவோர்க்கு வேண்டும் வரம் அளிக்கும் அழகர் திருக்கோயில் கடலூர்– பாண்டி பிரதான சாலையிலிருந்து பாகூர் என்ற ஊருக்கு மேற்கே 15 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு பூரணி, பொற்கலை உடனுறை அழகுமுத்து ஐயனார், வடக்கு நோக்கி வீரனார்.

### தல வரலாறு

'அமிழ்தினும் இனியது நமது ஆன்றோர் தேசம்' என்பர் சான்றோர். இம்மொழிக்கேற்ப சித்தர்களும், முனிவர்களும் உலாவிய நம் தென்னாட்டில், அழகர் சித்தர் என்பவர் பல சித்துக்களோடு இப்பகுதியில் வாழ்ந்து வந்துள்ளார்.

முட்புதர்களும், மரங்களும் நிறைந்த காட்டில் கொடிய நச்சுப் பாம்புகளுடன் வசித்து வந்த அழகர் சித்தர் பக்தர்களுக்கு அருள் வழங்கி வாழ்ந்து வந்தார். இத்தகைய சித்தர் சித்திரை முதல் திங்கள் கிழமையன்று பக்தர்கள் பலரையும் அழைத்து

அழகுமுத்து அய்யனார் கோயிலில் இருந்த நீர் நிறைந்த கிணற்றில் இறங்கி அருள்ஜோதி ஆனார். அழகர் சித்தர் அருள்ஜோதியான இடம் இன்றளவும் திருக்கோயிலின் கருவறையாக வணங்கப்பட்டு



வருகின்றது. இக்கருவறையின் முன்புறம் அருள்மிகு பூரணி பொற்கலையுடன் அழகுமுத்து ஐயனாரும் வலப்புறத்தில் வடக்கு நோக்கி வீரனாரும் வீற்றிருந்து அருள்பாலித்து வருகின்றனர்.

## பிரார்த்தனை தலம்

அழகர் சித்தர் அருள்ஜோதியான இத்தலம் ஒரு பிரார்த்தனை தலமாக விளங்குகின்றது. இத்திருக்கோயிலில் நீண்டகாலமாக திருமணம் நிறைவேறாதவர்களும், தீராத நோயுடைவர்களும், குழந்தைப்பேறு இல்லாதவர்களும் வேண்டுதல் செய்து, வேண்டுதல் நிறைவேறியவுடன் உருவ பொம்மைகளை கோயிலின் இருபுறமும் அமைப்பது வழக்கமாகும். இத்தகு பிரார்த்தனைகள் உள்நாட்டிலிருந்து மட்டுமல்லாமல் அயல்நாட்டினரும் வேண்டுதல்கள் நிறைவேறிய பின்னர், உருவப்பொம்மைகளை அமைத்துள்ளனர். பக்தர்களின் வேண்டுதல்கள் நிறைவேறியுள்ளமைக்கு இத்திருக்கோயிலில் உள்ள ஆயிரக்கணக்கான உருவப்பொம்மைகளே சான்றாகும்.

## திருவிழாக்கள்

இத்தகு சக்திவாய்ந்த திருக்கோயிலில் ஆண்டுதோறும்

சித்திரை மாதம் முதல் திங்கள்கிழமை பெரும் திருவிழா நடைபெற்று வருகிறது. அன்றைய தினம் திருக்கல்யாண திருவிழாவில் ஒரே நேரத்தில் 100–க்கும் மேற்பட்ட மங்கள வாத்தியம் இசைப்பது பெரும் சிறப்பாகும். திருவிழாவின்போது இப்பகுதிவாழ் ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஒரே இடத்தில் கூடுவது வியக்கத்தக்கதாகும்.





அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு அழகர் திருக்கோயில்,
தென்னம்பாக்கம்.
கடலூர் வட்டம்

# அருள்மிகு அய்யனார் திருக்கோயில்
# கொஞ்சிக்குப்பம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் திருமுனைப்பாடி நாட்டின் திருவதிகை, வீரட்டானேஸ்வரர் திருக்கோயிலுக்குத் தெற்கிலும் வடலூர் இராமலிங்க வள்ளலார் நிறுவிய ஞானசபைக்கு வடக்கிலும், பண்ருட்டி, கும்பகோணம் நெடுஞ்சாலையில் பண்ருட்டியிலிருந்து 12 கி.மீ. தெற்கிலும் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு அய்யனார்

## இறைவி பெயர்

அருள்மிகு பூரணி, பொற்கலை

## தல வரலாறு

வல்லவராயன் வந்தியதேவன் சோழநாட்டில் இருந்து தொண்டைநாட்டிற்குச் செல்லும் வழியில் இத்திருக்கோயிலில் இளைப்பாறி குளக்கரையில் சந்தியா வந்தனம் முடித்துச் சென்றான் என்று வரலாறு கூறுகிறது. அடர்ந்த புதர்க் காடுகளுக்கு இடையில் இத்திருக்கோயில் காணப்படுகிறது.

## பிரார்த்தனைத் தலம்

பிரார்த்தனை வேண்டுதல்களை சீட்டில் எழுதி வீரபத்திர சுவாமி வாளில் கட்டிவிட்டால் பிரார்த்தனை நிறைவேறும். மேலும், இத்திருக்கோயில் பல ஊர்களில் உள்ளவர்களுக்கு குல தெய்வமாகவும், பிரார்த்தனை தலமாகவும் உள்ளது. களவு மற்றும்

குடும்ப நலனுக்கு வேண்டுதல் செய்பவர்கள் பிரார்த்தனை கட்டணம் செலுத்தி, பிராது கட்டினால் களவு போன பொருட்கள் திரும்பக் கிடைக்கும். குடும்ப தோஷ பரிகாரங்கள் நிவர்த்தியாகும். பழங்காலந்தொட்டு இத்திருக்கோயிலில் இவ்வழக்கம் நிலவி வருகின்றது. இதனால் தினமும் நூற்றுக்கணக்கான பக்தர்கள், அண்டை மாநிலத்தைச் சேர்ந்த பக்தர்களும் குடும்பநல பிரார்த்தனை சீட்டினைக் கட்டி பயன்பெறுகிறார்கள்.

## திருவிழா

ஆடி மாதத்தில் ஊரணி (ஊருணி) உற்சவம் மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது.



# அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்
# திருப்பாதிரிப்புலியூர்




## திருக்கோயில் அமைவிடம்

நடுநாட்டு திருப்பதிகளில் இரண்டில் ஒன்றானதும், நாலாயிர திவ்விய பிரபந்தம் அவதரித்த தலமானதும் ஆன திருக்கோயிலூர் அருள்மிகு தேகளீச பெருமாளின் அபிமானம் பெற்று விளங்குகின்ற அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில், திருப்பாதிரிப்புலியூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 1 கி.மீ தொலைவில் மேற்குத் திசையில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு வரதராஜப் பெருமாள்

## இறைவி பெயர்

அருள்மிகு பெருந்தேவித் தாயார்

## தலச் சிறப்பு

இத்திருக்கோயிலில் தென்கலை வைணவ சம்பிரதாயமும், பாஞ்சராத்ர ஆகமமும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. இத்திருக்கோயிலில் அருள்மிகு பெருந்தேவி தாயார்



சந்நிதி, அருள்மிகு ராமர் சந்நிதி, மணவாளமாமுனிகள் சந்நிதி, கருடாழ்வார் சந்நிதி, ஆஞ்சநேயர் சந்நிதி, ஆண்டாள் சந்நிதி முதலிய சந்நிதிகள் உள்ளன. இத்திருக்கோயிலில் மாசிமக தீர்த்தவாரி உற்சவத்திற்குத் திருக்கோயிலூர், அருள்மிகு தேகளீசப் பெருமாள் தோளிக்கினியானவர்கள் சுமார் 75 கி.மீ. வந்து அருள்மிகு வரதராஜப்பெருமாளுடன் தேவனாம்பட்டினம் கடற்கரைக்குச் சென்று தீர்த்தவாரி செய்வது மற்றும் மறுநாள்

திருக்கோயிலூர் பெருமாள் கருட வாகனத்திலும், அருள்மிகு வரதராஜப் பெருமாள் சேஷ வாகனத்திலும் ஒருசேர வீதியுலா வருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் பங்குனி மாத ஸ்ரீராமநவமி 11 தினங்கள் உற்சவம், ஆடி வெள்ளி, தை வெள்ளி தாயார் ஊஞ்சல், மாத மூல நட்சத்திரத்தில் மணவாள மாமுனிகள் உற்சவம் முதலியவை மிகவும் சிறப்போடு நடைபெற்று வருகின்றன.

தற்போது பிரதோஷ காலங்களில் சக்கரத்தாழ்வாருக்குச் சிறப்பு வழிபாடு மிகவும் சீரிய முறையில் நடைபெற்று வருகிறது. இத்திருக்கோயிலில் யுகாதி பண்டிகையும், தனுர்மாத பூஜைகளும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. அனுமத் ஜெயந்தி அன்று 10008 வடைமாலை சார்த்தப்படுகிறது. இம்மாவட்டத்திலேயே ஆடி சுவாதியன்று கருட ஜெயந்தி விழா நடைபெறுவது இங்கு மட்டுமே. ஆனி மாத பிரம்மோற்சவம் விசேஷமான ஒன்றாகும். பிரதி திருவோண நாளில் பிரார்த்தனை கருட சேவை நடைபெறுகிறது.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்,
திருப்பாதிரிப்புலியூர்.
தொலைபேசி எண்.: 04142 223150.
மின்னஞ்சல் முகவரி: varatharajaperumal.cud@gmail

# அருள்மிகு வரதராஜப் பெருமாள்திருக்கோயில்
# பண்ருட்டி நகர்



### திருக்கோயில் அமைவிடம்

பண்ருட்டி நகரின் மையப்பகுதியான கடை வீதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு வரதராஜப்பெருமாள்

### இறைவி பெயர்

அருள்மிகு பெருந்தேவி தாயார்

பெருமாள் சந்நிதியின் வலப்பக்கத்தில் அருள்மிகு பெருந்தேவித் தாயார் சந்நிதியும், இடப்பக்கத்தில் ஆண்டாள்

### தல வரலாறு

வரதராஜப்பெருமாள் நின்ற திருக்கோலத்தில் திருமகள் மற்றும் பூமகள் சமேதராய் காட்சிதருகின்றார். பெருமாள் சந்நிதியின் வலப்பக்கத்தில் அருள்மிகு பெருந்தேவி தாயார் சந்நிதியும், இடப்பக்கத்தில் ஆண்டாள் சந்நிதியும் அழகுற அமைக்கப் பட்டுள்ளது. இத்திருக் கோயில் திருக்கோயிலூர் தேகளீசப்பெருமாள் கோயிலுக்கு அபிமான ஸ்தலமாக விளங்குகிறது. திருக்கோயிலூர் தேகளீசப்பெருமாள் மாசிமக உற்சவத்தின்போது கடலாடி விட்டுத் திரும்பி வரும் வழியில் ஓர் இரவு இத்திருக்கோயிலில் தங்கி பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றார். இரண்டு பெருமாளுக்கும் இரண்டு கருட சேவை உற்சவம் வெகுசிறப்பாக நடைபெறுகிறது. தோப்பு உற்சவம் என்றழைக்கப்படும் வசந்த உற்சவம் வெகுசிறப்பாக நடைபெற்று வருகிறது. வியாபாரம் பெருக வேண்டுபவர் இத்தல பெருமாளைத் தரிசித்தால் செல்வ வளம் பெருகுவதால் வியாபாரிகளின் வழிபாட்டுத்தலமாகவும் இத்திருக்கோயில் விளங்குகிறது.



### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வரதராஜப்பெருமாள் திருக்கோயில்,
பண்ருட்டி.

# அருள்மிகு நாகம்மன் திருக்கோயில்
# திருப்பாதிரிப்புலியூர் – கடலூர்



**திருக்கோயில் அமைவிடம்**

கடலூர் – திருப்பாதிரிப்புலியூர் மையப்பகுதியில் இரயில்வே நிலையத்தை அடுத்து பேருந்துநிலைய முகப்பில் நாகம்மன் கோவில் அமைந்துள்ளது.

**இறைவி பெயர் :**

அருள்மிகு நாகம்மன்

**தல வரலாறு**

இத்திருக்கோயில் அமைந்துள்ள இடத்தில் முன்பு வேப்பமரமும், அதன்கீழ் பாம்புப் புற்றும் இருந்தன. பாம்பைத் தெய்வமாக வணங்கும் இயல்புடைய மக்கள் புற்றுக்குப் பூவிட்டு, பொட்டிட்டு, பாம்பிற்கு முட்டையும் பாலும் வைத்து நாகம்மன் என்று பெயரிட்டு வழிபடத் தொடங்கினர். பேருந்துகள் பெருகி மக்கள் போக்குவரத்து மிகுதிபட்ட நிலையில் நாகம்மனை வழிபடும் மக்களும் பெருகினர். ஊருக்குப் புறப்படும்போது தன் பயணம் நல்லமுறையில் அமையவும், தாம் சென்ற வேலை இனிதே நிறைவேறவும் வேண்டி நாகம்மனை வழிபட்டுச் சென்றனர்.



ஊரிலிருந்து திரும்பியபோதும் பயணம் நல்லமுறையில் அமைந்தமைக்கும், சென்ற செயலை நிறைவேற்றியமைக்கும் நன்றி சொல்லி வழிபட்டனர். பேருந்து நிலையம் பெரிதாக வளர்ந்தபோது சுற்றிலும் நிரம்பவும் கடைகள் அமைய கடைக்காரர்கள் தம் வியாபாரம் நன்கு நடைபெற வேண்டி காலையும், மாலையும் வழிபடலாயினர். பேருந்துகளின் உரிமையாளர்களும், நடத்துநர் மற்றும் ஓட்டுநர்களும் காலையும், மாலையும் வழிபடலாயினர்.

## பூஜைகள்

இரண்டு கால பூஜைகள்

## திருவிழாக்கள்

வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடும், ஆண்டுதோறும் ஆடி மாதம் ஐந்தாம் வெள்ளியில் செடல் பெருவிழாவும் சிறப்பாக நடைபெற்றது. அன்பர்கள் பலர் முன்வந்து செடல் விழாவைப் பத்துநாள் விழாவாக மிகச் சிறப்பாகச் செய்து வருகின்றனர்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்
அருள்மிகு நாகம்மன் திருக்கோயில்,
திருப்பாதிரிப்புலியூர், கடலூர்.

# அருள்மிகு முத்தையா சுவாமி திருக்கோயில் பெருமுளை



## திருக்கோயில் அமைவிடம்

திட்டக்குடி பெருநகருக்கு வடக்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் பெருமுளை எனும் சிற்றூரில் ஏரிக்கரையின் மேல் இத்திருத்தலம் அமைந்துள்ளது. இதனால் இத்தலத்தை அணைக்கரை என்றும் கூறுவார்கள்.

## இறைவன் பெயர்

அருள்மிகு முத்தையா சுவாமி

## தல சிறப்பு

பில்லியம், சூன்யம், வல்வினைகளை அகற்றும் தலமாக இத்தலம் விளங்கி வருகிறது. மேலும், இத்திருத்தலம் பரிவார தேவதைகளான ஸ்ரீஇராயப்பா சுவாமியும், ஸ்ரீபூமாலையப்பா சுவாமியும், முனிமார்களும் அருள்மிகு நவசக்திநாயகி ஈஸ்வரி,

பச்சையம்மா மற்ற கன்னிமார்களும் நவக்கிரக நாயகர்களும், ஸ்ரீவிநாயகர், ஸ்ரீநாராயணமூர்த்தி சுவாமியும், மஹாவிஷ்ணு, ஸ்ரீபெருமாள் சுவாமியும், ஸ்ரீசித்தநாத சுவாமியும் மற்ற பரிவார தேவதைகளும் இருந்து பக்தர்களின் கஷ்ட நஷ்டங்களைப் போக்கி இன்பத்தை அருள் பாலிக்கிறார்கள்



## தீர்த்தம்

வினை தீர்த்தகுளம்.

## பூஜை காலங்கள்

தினசரி 3 கால பூஜைகள் நடைபெறுகின்றன.

## திருவிழாக்கள்

பிரதி வருடம் ஆவணி மாதம் புதன் வார திருவிழாக்களும், பங்குனி மாத உத்திரத்தில் நடைபெறும் மஹோற்சவத்திலும், அடுத்த நாள் இராயப்ப ஸ்வாமியின் பார்புகழும் பாரிவேட்டை உற்சவமும் சிறப்பாக நடைபெறுகிறது. தமிழ்நாட்டின் பல மாவட்டங்களிலிருந்தும், குறிப்பாக சேலம் மாவட்டத்திலிருந்தும் பக்தர்கள் திரளாக வந்து திருவிழாக்களைச் சிறப்பித்து பெருவாழ்வு வாழ்கிறார்கள்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு முத்தையாசுவாமி திருக்கோயில்,
பெருமுளை, திட்டக்குடி.

# அருள்மிகு வீரபத்ர சுவாமி திருக்கோயில்
# வரக்கால்பட்டு



### திருக்கோயில் அமைவிடம்

இத்தகு புகழ்வாய்ந்த அருள்மிகு வீரபத்திரர் திருக்கோயில் கடலூர் பண்ருட்டி சாலையில் (கடலூரிலிருந்து 8 கி.மீ, பண்ருட்டியிலிருந்து 18 கி.மீ) வரக்கால்பட்டு எனும் கிராமத்தில் அமையப்பெற்றுள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு வீரபத்ரஸ்வாமி

### தல விருட்சம்

வில்வம்

### தல சிறப்பு

தக்கன் என்பவன் படைப்புக் கடவுளாகிய பிரம்மன் தொழிலுக்கு உதவும் வகையில் தன் நினைப்பினால் படைக்கப்பட்ட மானச புதல்வருள் ஒருவனாவான். இவன் சிவபெருமானைக் குறித்து தவம் செய்து தாட்சாயணியைத் தனக்கு மகளாகவும், சிவபெருமானை தனக்கு மருமகனாகவும் பெற வரம் பெற்றான். பின்னர் இவன் நடத்திய யாகத்தில் சிவபெருமானையும், தாட்சாயணியையும்அவமானப்படுத்தியதால்,



தக்கனை அழிக்க சிவபெருமானால் தோற்றுவிக்கப்பட்டவரே, அருள்மிகு வீரபத்திரர் மற்றும் பத்ரகாளியம்மன் ஆகும். சிவபெருமான் செய்தருளிய வீரச்செயல்கள் எட்டனுள் தக்கன் வேள்வியைத் தகர்த்த செயலும் ஒன்று.

நான்கு கைகள், முக்கண்கள், நெருப்புக்கொழுந்து போன்ற சிவந்த தலைமயிர் கோரபற்கள், ஓசை செய்யும் மணி மாலைகள், அஞ்சத்தக்க திருவுருவம், அணியப்பட்ட தலைமாலைகள், தேர்களால் ஆகிய அணிகள், பாம்பினால் ஆகிய பூநூல், கால்களில் சிலம்புகள், பாதரட்சைகள், நீலகண்டம், முழந்தாள் அளவு நீண்ட சடை, வாள், கேடயம், வில், அம்பு, பிண்டிபாலம் முதலிய படைக் கலன்கள், மண்டை ஓடு, உடம்பின் செந்நிறம், அழிக்கத்தக்க கொடிய பார்வை இவற்றை உடைய உருவமே அருள்மிகு வீரபத்திரர் ஆகும். சிவபெருமான் திருவருளினால் வீரபத்திரர் உலகில் தீமை செய்பவர்களை அழித்து நல்லவர்களைப் பாதுகாத்து அறம் நிலைபெற அருளாட்சி செய்பவராவார்.

### பூஜை காலங்கள்

இரண்டு கால பூஜைகள்

### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள ஆனந்த நடராஜப் பெருமானுக்கு வருடத்தில் நடைபெறும் 6 அபிஷேகங்களும் மிகவும் சிறப்பு வாய்ந்ததும், பெருந்திரளான பக்தர்களைத் தன்னகத்தே கொண்டதாகும்.

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வீரபத்ர சுவாமி திருக்கோயில்,
வரக்கால்பட்டு, கடலூர்.

# அருள்மிகு களப்பாளீஸ்வரர் என்கிற வீரட்டீஸ்வரர்சுவாமி திருக்கோயில் வேகாக்கொல்லை.



## திருக்கோயில் அமைவிடம்

பழம் பெருமை வாய்ந்த தமிழகத்துக் கோயில்களில் வேகாக்கொல்லை வீரட்டீஸ்வரர் சுவாமி திருக்கோயிலும் ஒன்றாகும். இத்திருக்கோயில் கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டத்தில் அமைந்துள்ளது. கடலூரிலிருந்து வடலூர் செல்லும் பிரதான சாலையில் கடலூரிலிருந்து 30 கி.மீ. தூரத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு வீரட்டீஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு ஸ்ரீ விசாலாட்சி அம்மாள்

## தல விருட்சம்

வில்வ மரம்

## பூஜை காலங்கள்

தினசரி இரண்டு கால பூஜைகள் நடைபெற்று வருகின்றன.

## தல வரலாறு

பண்ருட்டி திருவதிகையில் இறைவன் வீரட்டீஸ்வரர்



முப்புரம் எரித்தபோது அந்த வெம்மை தாங்காது உலகம் எரிந்தபோது வேகாக்கொல்லை என்ற ஊர் மட்டும் எரியாமல் இருந்ததாகவும், இறைவன் முப்புரம் எரித்து வேகாக்கொல்லையில் களைப்பாறியதால் களப்பாளி வீரட்டீஸ்வரர் என்ற பெயர் தாங்கி இவ்வூரில் நின்றதாகவும் கூறப்படுகிறது.

## தல சிறப்பு

திருக்கோயில் நுழைவு வாயிலைக் கடந்து சென்றால் வலது புறம் விநாயகர் சந்நிதி தனியாகவும், இடதுபுறம் முருகர் சந்நிதி தனியாகவும் அமைந்துள்ளது. கர்ப்பக்கிரக மண்டபத்தில் ஸ்ரீ களப்பாளீஸ்வரர் என்கின்ற வீரட்டீஸ்வரர் லிங்க வடிவில் காட்சியளிக்கின்றார். சுவாமியின் இடப்புறம் ஸ்ரீ விசாலாட்சி அம்மன் நின்ற திருக்கோலத்தில் கருணை வடிவத்தோடு அருள்பாலிக்கின்றார். சுவாமிக்கும், அம்பாளுக்கும் நந்தியே வாகனமாக அமைந்துள்ளது சிறப்பு வாய்ந்ததாக உள்ளது.

திருக்கோயிலின் திருச்சுற்றில் முருகர் சந்நிதிக்கு அடுத்து சனிபகவான் சந்நிதி, சண்டிகேஸ்வரர் சந்நிதி, சூரிய சந்திர சந்நிதி, மஹாவிஷ்ணு, தட்சிணாமூர்த்தி சந்நிதிகள் உள்ளன.

கடலூர் மாவட்டத்திலேயே சனிபகவானுக்கு என்று தனிக்கோயில் அமைந்துள்ளது இத்திருக்கோயிலில் தான்.

### திருவிழாக்கள்

மாசிமாதம் நடைபெறும் மாசிமகத்தன்று சுவாமி தீர்த்தவாரி செல்லும் திருவிழா மிகவும் பிரசித்தி பெற்றதாகும்.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு களப்பாளீஸ்வரர் என்கிற
வீரட்டீஸ்வரர்சுவாமி திருக்கோயில்
வேகாக்கொல்லை.



# அருள்மிகு பால்வண்ணநாதசுவாமி திருக்கோயில்
# திருக்கழிப்பாலை, சிதம்பரம்

(பாடல் பெற்ற தலம்)



## திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தை ஒட்டிய சிவபுரி எனும் கிராமத்தில் இத்திருக்கோயில் புதியதாகக் கட்டப்பட்டுள்ளது. இத்திருக்கோயில் ஏற்கனவே, கொள்ளிடம் நதிக்கரையில் இருந்ததாகவும், காலப்போக்கில் வெள்ளத்தால் இத்திருக்கோயில் அழிந்துவிட்டநிலையில் தற்போதுள்ள இடத்தில் கட்டப்பட்டுள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு பால்வண்ணநாதர்

## இறைவி பெயர்

அருள்மிகு வேதநாயகி

## தல விருட்சம்

வில்வம்

## தல தீர்த்தம்

கொள்ளிடம்

## தலத்தைப் பாடியோர்

அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரால் பாடல் பெற்ற தலம்.

அருணகிரிநாதரும் இத்தலத்தில் உள்ள முருகனைப் பற்றி திருப்புகழ் பாடியுள்ளார்.

## தல வரலாறு

கபிலமுனிவர் ஒவ்வொரு சிவத்தலங்களாக தரிசித்து வரும் போது, வில்வ வனமாக இருந்த இப்பகுதியில் தங்கி சிவபூஜை செய்ய நினைத்தார். இப்பகுதியில் பசுக்கள் தானாக பால்சுரந்து வந்த காரணத்தினால் மணல் முழுவதும் வெண்ணிறமாக காட்சியளித்தது. முனிவர் இந்த வெண்ணிற மணலை எடுத்து லிங்கம் அமைத்து வழிபாடு செய்தார். ஒருமுறை அந்த வழியாக வந்த மன்னனது குதிரையின் கால் குளம்பு, மணல் லிங்கத்தின்மீது பட்டு லிங்கம் பிளந்துவிடுகிறது. வருந்திய முனிவர் பிளவுபட்ட லிங்கத்தை எடுத்துவிட்டு வேறு லிங்கம் பிரதிஷ்டை செய்ய நினைத்தபோது, இறைவன் பார்வதி சமேதராகக் காட்சி தந்து, முனிவரே! பசுவின் பால் கலந்த வெண்ணிற மணலில் செய்த லிங்கம் பிளவு பட்டிருந்தாலும் அதை அப்படியே பிரதிஷ்டை செய்துவிடுங்கள். காமதேனுவே பசுவடிவில் இங்கு வந்து பால்சொறிந்துள்ளது. எனவே, இந்த லிங்கத்தை வழிபடுபவர்கள் சகல செல்வங்களும் அடைவார்கள் என்றார்.




## தல சிறப்பு

இத்தல இறைவன் சுயம்பு மூர்த்தியாக அருள்பாலிக்கிறார். குதிரையின் கால் குளம்பு பட்டு பிளந்துபோன வெண்ணிற லிங்கத்திற்கு தான் இன்றும் பூஜை நடக்கிறது. லிங்கத்திற்கு பின்னால் சிவனும் பார்வதியும் திருமணக்கோலத்தில் உள்ளனர்.

## தல பெருமை

இங்குள்ள பைரவர் காசியில் உள்ளதுபோல நாய் வாகனம் இல்லாமல், 27 மண்டை ஓட்டுடன், பூணூல் அணிந்து, சர்ப்பத்தை அரைஞான அணிந்து, ஜடாமுடி, சிங்கப்பல்லுடன் தனிக்கோயிலில் அருளுகிறார். காசியில் பைரவரை வடிவமைத்த சிற்பியே இங்குள்ள பைரவரையும் வடிவமைத்ததாக கூறப்படுகிறது.

இத்தல பைரவரை வணங்கினால் காசி பைரவரை வணங்கிய பலன் கிடைக்கும் என புராணங்கள் கூறகின்றன.

எனவே, இப்பகுதி மக்கள் இத்தலத்தை பைரவர் கோயில் என்றே அழைக்கின்றனர். தேய்பிறை அஷ்டமி இங்கு சிறப்பாக கொண்டாடப்படுகிறது. அகத்தியருக்கு காட்சி தந்த தலங்களில் இதுவும் ஒன்று. வால்மீகி முனிவர் இங்கு வழிபாடு செய்துள்ளதாக புராணங்கள் கூறுகின்றன. அருணகிரிநாதர் இத்தல முருகன் மீது திருப்புகழ் பாடியுள்ளார். இங்குள்ள நடராஜரின் சடைமுடி அள்ளிமுடிந்த கோலத்தில் உள்ளது. அருகில் சிவகாமியம்மன், தன் தோழிகளான விஜயா, சரஸ்வதியுடன் உள்ளது தனி சிறப்பாகும்.

## பிரார்த்தனைத் தலம்

எல்லா செயல்களிலும் வெற்றிகிடைக்க இங்குள்ள விஜய விநாயகருக்கு சங்கடஹர சதுர்த்தியில் அபிஷேகம் செய்து வழிபடுவது சிறப்பு. பிரார்த்தனை லிங்கத்திற்கு அபிஷேகம் செய்த பாலை அருந்தினால் குழந்தை பாக்கியம் கிடைக்கும். உஷ்ணம் சம்பந்தப்பட்ட நோய் விலகும் என்பது நம்பிக்கை.

## பூஜைகள்

ஒருகால பூஜை நடைபெறுகிறது.

## திருவிழா

தைப்பூசம், நவராத்திரி, கார்த்திகை சோமவாரம், ஐப்பசி அன்னாபிஷேகம், மார்கழி திருவாதிரை.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 11 மணி வரையில்

மாலையில் 5.00 மணி முதல் இரவு 7.15 மணி வரை

# அருள்மிகு வேணுகோபால சுவாமி திருக்கோயில்
# வெங்கடாம்பேட்டை



## திருக்கோயில் அமைவிடம்

வெங்கடாம்பேட்டை என்னும் திருத்தலம் கடலூர் மாவட்டத்தைச் சேர்ந்த பண்ருட்டி வட்டத்தில் உள்ளது. கடலூரிலிருந்து 32 கி.மீ தூரத்தில் உள்ள குறிஞ்சிப்பாடி நகருக்கு வடக்கே 5 கி.மீ தூரத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு பாமா ருக்குமணி சமேத வேணுகோபால சுவாமி

## கோபுரம்

ஏழுநிலை மாடத்துடன் காட்சியளிக்கிறது

## பூஜை

தினப்படி இத்திருக்கோயிலில் ஒருகால பூஜை நடைபெற்று வருகிறது.

## தல பெருமை

இத்திருக்கோயில் ஊருக்குக் கிழக்கே, ஏழு நிலை இராஜகோபுரத்துடனும், நெடிய மதில் சுவர்களுடனும் கிழக்கு நோக்கிய திருவாயிலுடனும் அமையப்பெற்றது.

திருக்கோயில் கருவறையில் நின்ற திருக்கோலத்துடன் காட்சியளிக்கும் ஸ்ரீ வேணுகோபாலனைக் காணும்போது

"சிறு விரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்ப
குறு வெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல் கொடுஊதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந் திறங்கிச் செவியாட்ட கில்லாவே"

என்று பெரியாழ்வார் வருணித்துப் பாடினாரே அந்தக் கோலத்தை அப்படியே மெய்சிலிர்த்துக் காணும் வண்ணம் எழில் தோற்றமாக இறைவன் தோன்றுகின்றார். இறைவனுக்கு இருபுறமும் ருக்மணி–சத்தியபாமா கைகளில் கமலத்துடன் காட்சியளிக்கின்றார்கள். மூலவர் தரிசனம் முடிந்து தெற்கே திரும்பினால் செங்கமலவல்லி தாயார் சன்னதியும், ஆலய வலம் வருகையில் வடக்கே ஆண்டாள் சன்னதியையும் காணமுடியும். தெற்குப் பக்கம் நோக்கியவாறு பாம்பணை மீது துயிலுடன் உலகளந்த பெருமாள் நீண்ட நெடுங்காட்சியுடன் துயில்கொள்ளும் காட்சி ஸ்ரீ வைகுண்டத்திற்கே சென்று இறைவனை நேரில் பார்ப்பது போல அருந்துயில் காட்சி மெய்சிலிர்க்க வைப்பதாக உள்ளது. பெருமாள் திருப்பாதத்தருகே நாச்சியார் சீதையும், வீர ஆஞ்சநேயரும் காட்சி தருகின்றார்கள். திருவடிகள் இரண்டும் தாமரை மலர் மீது பதியப்பெற்றுள்ளது மற்ற திருக்கோயில்களில் இல்லாத சிறப்பு ஆகும்.

சூரிய, சந்திர கிரகங்கள்; மூலவரையும், தாயாரையும் குறிப்பிட்ட ஒரு மாதத்தில் வணங்கும்படியாக திருக்கோயில் கட்டப்பட்ட அமைப்பு தெய்வீகத்தன்மை வாய்ந்தது.

### தல சிறப்பு

திருக்கோயிலுக்கு எதிர்ப்புறத்தில் தமிழ்நாட்டில் எங்கும் காணப்பெறாத 15 மீட்டர் உயரமுள்ள நெடுங்கல் தூண்களால் அமைந்துள்ள தொல்பொருள் சிறப்புமிக்க ஊஞ்சல் மண்டபம் அமைந்துள்ளது.

### திருவிழாக்கள்

வைகுண்ட ஏகாதசி, மாசிமகம், கிருஷ்ணஜெயந்தி, கார்த்திகை தீபம், தைத்திருநாள் போன்றவை முக்கிய திருவிழாவாக நடைபெறுகின்றன.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரை நடைதிறந்திருக்கும் நேரமாகும்.


அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு வேணுகோபாலசுவாமி திருக்கோயில்,
வெங்கடாம்பேட்டை,
குறிஞ்சிப்பாடி வட்டம்.


## வைகுண்ட ஏகாதசி

மார்கழி மாதம் வருகின்ற ஏகாதசிக்கு 'வைகுண்ட ஏகாதசி' என்று பெயர். அன்றைய தினம் சகல விஷ்ணு ஆலயங்களிலும் சொர்க்க வாசல் திறப்பு நடைபெறும். அதில் நுழைந்து வந்தால் சகல பாக்கியங்களும் கிடைக்கும்.



# அருள்மிகு தாகம் தீர்த்தபுரீஸ்வரர்திருக்கோயில்
# இறையூர்



### திருக்கோயில் அமைவிடம்

சென்னை–திருச்சி இருப்புப் பாதையில் பெண்ணாடம் நிறுத்தம் திட்டக்குடி–விருத்தாசலம் முதன்மை சாலையில் 22 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது இத்தலம்.

### இறைவன் பெயர்

அருள்மிகு தாகம் தீர்த்தபுரீஸ்வரர்

### இறைவி பெயர்

அருள்மிகு அன்னபூரணி

### பூஜைகள்

இத்திருக்கோயிலில் மூன்று கால பூஜை நடைபெறுகிறது. இத்தலத்தில் அன்னபூரணி அம்மன் எழுந்தருளியுள்ளதால் உபயதாரர்களால் பக்தர்களுக்கு அவ்வப்போது அன்னம் விநியோகிக்கப்படுகிறது.

### தல விருட்சம்

ஆலமரம்

### தலத்தைப் பாடியவர்

இத்தல முருகனை அருணாகிரிநாதர் வழிபட்டு திருப்புகழ் பாடியுள்ளார்.




### தல வரலாறு

நடுநாட்டுத் திருத்தலங்களுள் ஒன்றான திருவட்டத்துறை அருள்மிகு அறத்துறநாதரை தரிசிப்பதற்காக திருஞானசம்பந்தர் அன்னபூரணி சமேத தாகம் தீர்த்தபுரீஸ்வரர் திருக்கோயிலில் இரவு தங்கி, சுவாமியை வழிபட்டுவிட்டு உறங்கும்போது இறைவன் திருஞானசம்பந்தரின் கனவில் தோன்றி உனது கால்கள் வலிக்க சிரமம் பாராது என்மீது பற்று கொண்டு என்னைத் தரிசிக்க வருகின்றாய். உனது பிஞ்சுக்கால்கள் வலிக்க வருவதைக் கண்டு என் மனம் வேதனை அடைகிறது. எனவே, நீ ஏறி வருவதற்கு

முத்துப்பல்லக்கும் அணிவதற்கு முத்துச் சின்னம் மற்றும் முத்துக் குடை ஆகியவைகளை அறத்துறை நாதர் சன்னதியில் அருளுகின்றேன். அதனை அந்தணர்கள் கொண்டு வந்து தருவார்கள். அதனை ஏற்றுக் கொண்டு வருவாயாக எனக் கனவில் தோன்றிக் கூறினார். திருஞான சம்பந்தருக்குக் கூறிய விவரங்களை அவ்வூர் அந்தணர்களுக்கும் கூறி சந்நிதியில் முத்துப்பல்லக்கு, முத்துச் சின்னம், முத்துக் குடை போன்றவைகளை அருளி மறைந்தார்.

அதிகாலையில் சந்நிதியைத் திறந்து பார்க்கும்போது இருந்த பொருள்களைக் கொண்டுவந்து திருஞானசம்பந்தரிடம் அளித்து அழைத்துவந்தனர். அறத்துறை நாதர் கனவில் தோன்றிய இடத்தில் திருக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது.

### திருவிழாக்கள்

பங்குனி உத்திரத்திருவிழா ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு தாகம் தீர்த்தபுரீஸ்வரர் திருக்கோயில்,
இறையூர், திட்டக்குடி வட்டம்.

## பஞ்சாமிர்தமும், பழ அமிர்தமும்



பஞ்சாமிர்தம் என்பது வாழைப்பழம், தேன், சர்க்கரை (நாட்டுச் சர்க்கரை), பேரிச்சை, கல்கண்டு ஆகிய ஐந்து மட்டுமே சேர்ந்தது ஆகும். இது தவிர ஏதேனும் ஒரு பழமோ அல்லது இதர பொருளோ சேர்ந்தால் அது பஞ்சாமிர்தம் அல்ல. அது பழ அமிர்தம் எனப்படும்.

# அருள்மிகு வேதநாராயணப் பெருமாள் திருக்கோயில் வளையமாதேவி



### திருக்கோயில் அமைவிடம்

இத்தலம் சிதம்பரத்திலிருந்து மேற்கே 24 கி.மீ. தொலைவில் விருத்தாசலம் செல்லும் பிரதான சாலையில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு வேதநாராயணப் பெருமாள்

### இறைவி பெயர்

அருள்மிகு கமலவல்லித்தாயார்

### தல வரலாறு

இத்தலம் கார்த்தியாயன முனிவர் தவமிருந்த தலமாகும். இவர் சூரியனிடம் வரம் பெற்று அம்புஜவல்லித் தாயார், கமலவல்லித் தாயார் என்ற இரு குழந்தைகளை சரம் மூலம் பெற்றார். ஸ்ரீமுஷ்ணம் பூவராக சுவாமி இத்தலத்திற்கு வந்து

அம்புஜவல்லித் தாயாரை மணம் புரிந்து சென்றார் என்பது வரலாறு. திருமணத்திற்குச் சீதனமாக வளையமாதேவி எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர்.



## திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் வைகாசி விசாகத் திருவிழா 10 நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. மாசி மகத்தில் கிள்ளை சமுத்திரத்தில் தீர்த்தவாரி திருவிழாவும் சிறப்பாக கொண்டாடப்பட்டு வருகிறது.



# அருள்மிகு முத்துக்குமாரசுவாமி திருக்கோயில்
# பரங்கிப்பேட்டை



## திருக்கோயில் அமைவிடம்

இந்துக்களின் புண்ணிய ஷேத்திரமாகவும், பூலோக கைலாயம் என்று சிறப்புப்பெயரால் அழைக்கப்படும் தில்லையம்பலத்திலிருந்து கிழக்கே 15 கல் தொலைவிலும் கடலூரிலிருந்து 40 கல் தொலைவிலும், இத்திருத்தலம் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு வள்ளிதேவசேனா சமேத முத்துக்குமாரசாமி

## தல வரலாறு

மூன்று நிலை ராஜகோபுரத்துடன் அழகிய நெடிய மதில்களைக் கொண்ட இத்திருக்கோயில் மூலவர் வள்ளி தேவசேனாவுடன் முத்துக்குமாரசுவாமியாக கிழக்கு நோக்கிக் காட்சியளிக்கின்றார். அம்பாளுக்கும் இரண்டு விமானங்கள் உள்ளன. இக்கோயிலில் துர்க்கை அம்மன் சந்நிதி தனி சந்நிதியாக அமைந்துள்ளது.

### பிரார்த்தனை தலம்

இக்கோயிலில் உள்ள துர்கை அம்மன் சந்நிதியில் ராகு



காலத்தில் துர்க்கை அம்மனுக்குத் தீபமேற்றி வழிபட்டால் எல்லாவித துன்பங்களும் விலகும் என்பது கை மேல் கண்ட பலன்.

### திருவிழாக்கள்

இத்திருக்கோயிலில் தை– பிரம்மோற்சவம், கந்தசஷ்டி சூரசம்ஹாரமும், வினாயகர் சதுர்த்தி, திருக்கார்த்திகை சோமவாரம், மார்கழி திருப்பள்ளியெழுச்சி உற்சவங்கள் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன.

### பூஜை காலங்கள்

நாள்தோறும் இரண்டு கால பூஜைகள் சிறப்பாக நடைபெறுகிறது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 5.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு முத்துகுமாரசாமி திருக்கோயில்
பரங்கிப்பேட்டை

# அருள்மிகு அனந்தீஸ்வரர் திருக்கோயில்
# சிதம்பரம் நகர்



## திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம் நகரின் மேற்குப் பகுதியில் இத்தலம் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு அனந்தீஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு சவுந்தரநாயகி

## தல வரலாறு

அருள்மிகு சௌந்தரநாயகி சமேத அனந்தீஸ்வரர் லிங்கவடிவில் கிழக்கு முகமாகக் காட்சி தருகின்றார். அருள்மிகு சௌந்தரநாயகி அம்மன் நின்ற கோலத்தில் தெற்கு முகமாகக் காட்சி தருகின்றார். இத்திருக்கோயிலில் உள்ள மூலவர் அருள்மிகு அனந்தீஸ்வரர் பதஞ்சலி முனிவரால் ஸ்தாபிதம் செய்து ஆத்மார்த்தமாகப் பூஜை செய்யப்பட்ட லிங்கம் ஆகும். இதுவே சிதம்பரத்தின் ஆதி கோயில் எனக் கூறுவர்.

தாருகாவனத்தில் சிவபெருமான் ரிஷிகளின் ஆணவத்தைப் போக்க ஆடிய ஆனந்தத் தாண்டவத்தை நினைத்து பாற்கடலில் பள்ளி 'கொண்ட ஸ்ரீ நாராயணன் மகிழ்ச்சி



அடைய அதனால் அவர் திடீரென ஆதிசேஷனுக்கு மிகவும் பாரமாக இருந்தார். ஆதிசேஷன் சுவாமி திடீரென தங்களின் உடல் பாரம் அதிகரித்துள்ளதே என்ன காரணம் சுவாமி என்று கேட்க, சிவபெருமானின் ஆனந்த தாண்டவத்தைக் கண்டேன் அதனால் என் கனம் அதிகமாகி விட்டது என்று சொல்லத் தானும் அந்த ஆனந்த நடனத்தைப் பார்க்க அருள்புரிய வேண்டும் என ஆதிசேஷன் கேட்டுக்கொண்டார். அதற்கு எம்பெருமான் சிவனை நோக்கித் தவம் செய் என்று ஆதிசேஷனுக்குத் தெரிவித்தார். சிவபெருமான் பதஞ்சலி முனிவரின் தவத்தை ஏற்று நீ போய் தில்லைவனம் சென்று புலிக்கால் முனிவருடன் சேர்ந்து பூஜை செய், மேலும், மாமுனிவர் அத்திரி மகரிஷி பதிவிரதை அனுசுயா தாயாருக்கு மகனாக உருமாறிச் செல் என அருளினார். உடன் ஆதிசேஷன் நாகச்சேரி குளத்தில் ஸ்நானம் செய்து பூஜையிலிருந்த முனிதம்பதியினர்களின் பாதத்தில் பாதி மனித உருவமும் பாதி பாம்பு உருவமும் கொண்டு குழந்தையாகப்

பிலந்துவாரம் வழியாக விழுந்தார். பாதத்தில் விழுந்ததால் பதஞ்சலி என பெயரிட்டு வளர்த்தனர். அனந்தம் என்றால் சர்ப்பம் என்று பொருள். பாம்பு ஆகிய பதஞ்சலி முனிவர் வழிபட்டதாலேயே இத்தலத்து இறைவனுக்கு அனந்தீஸ்வரன் எனப்பெயர் ஏற்பட்டது.

பிறகு ஸ்ரீ வியாக்ரபாதரும், ஸ்ரீ பதஞ்சலி முனிவரும் தங்களின் ஆத்மார்த்த பூஜைகளை முடித்துக்கொண்டு தில்லை வனத்தை அடைந்து மூலநாதேஸ்வரரை வேண்டி நடனக் காட்சி அருளும்படி பூஜைசெய்து வந்தனர். இவர்கள் தவத்திற்கு மெச்சிய சிவபெருமான் ஆனந்த தாண்டவம் புரிந்து அருள்பாலித்தார்.

### பரிகார தலம்

சுவாமியை பூஜிக்க நாகதோஷம் விலகும். பதஞ்சலி அருளிய பதஞ்சலி பகவானை அர்ச்சிக்க நன்றாக படிப்பு வரும். இங்கு உச்சிகால பூஜையில் சித்தர்கள், முனிவர்கள் சுவாமி தரிசனம் செய்ய வருவதால் மிகவும் விஷேசம் ஆகும். சௌந்தர நாயகி அம்பாளை அர்ச்சிக்க சகல துன்பங்கள் விலகும்.

### தீர்த்தம்

நடராஜப் பெருமானுக்குரிய பத்து தீர்த்தங்களில் ஒன்றான அனந்த தீர்த்தமாக திருக்குளம் அமைந்துள்ளது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.30 மணி முதல் 8.30 மணி வரை

அலுவலக தொடர்பு முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு அனந்தீஸ்வரர் திருக்கோயில்,
சிதம்பரம் நகர், கடலூர் மாவட்டம்.

# அருள்மிகு கீழத்தெரு மாரியம்மன் திருக்கோயில்
# சிதம்பரம் நகர்



## திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம் பேருந்து நிலையம் எதிர்புறம் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

அருள்மிகு மாரியம்மன்

## தல வரலாறு

இந்த மாரியம்மன் கிள்ளை அருகிலுள்ள பிச்சாவரம் ஜமீன் வகையராவில் இதைக் குலதெய்வமாக வணங்கி வந்துள்ளார்கள். இதுபோல் ஸ்ரீநடராஜர் கோயிலில் உள்ள தீட்சிதர்களும் குலதெய்வமாக வணங்கி வருகிறார்கள். இத்திருக்கோயிலுக்கு ஆடி மாதத்தில் தீமிதி திருவிழா வருடம் தோறும் நடைபெற்று வருகிறது. இத்திருக்கோயில் வளாகத்தில் பேச்சியம்மன் கோயில்,

துர்க்கையம்மன் கோயில், நவக்கிரஹ கோயில், ஐயப்பன் கோயில் இந்த ஆலயத்தில் பக்தர்களால் வழிபட்டு இருந்து வருகிறது.

இந்தக் கோயிலின் முக்கிய அம்சம் மாரியம்மன் எதிர்புறத்தில் நந்தி இருந்து வருகிறது. சில மாரியம்மன் கோயிலில் சிங்கம், கழுமரம்தான் இருக்கும்.

முன் புராண காலத்தில் சிவபெருமான் அசுரர்கள் தில்லை நகருக்குள் நுழையாமல் இருக்க தெற்கே வெள்ளந்தாங்கி அம்மனும் மேற்கே எல்லையம்மனும், வடக்கே தில்லைக் காளியும் கிழக்கே மாரியம்மனும் இருக்க சிவபெருமான் கட்டளையிட்டதாக தல புராணத்தில் இருந்து வருகிறது. அன்று முதல் இந்த மாரியம்மன் கோயிலுக்கு கீழத்தெரு மாரியம்மன் என்று பெயர் பெற்று விளங்கிவருகிறது. சிதம்பரம் நடராஜர் தல வரலாற்றில் இந்த செய்தி இடம் பெற்றுள்ளது.

## எந்த தேவைக்கு யாரை வணங்கலாம்?



| | | |
|---|---|---|
| ▶ அறிவு, வீரியம், அழகு | – | முருகன் |
| ▶ ஆற்றல் அதிகரிக்க | – | ஆஞ்சநேயர் |
| ▶ பணச்செழிப்பு | – | லட்சுமி |
| ▶ மந்திர சக்தி பெற | – | காளி |
| ▶ கலை, கல்விச் செல்வம் | – | சரஸ்வதி |
| ▶ யோகாசனத்தில் சிறக்க | – | பரமேஸ்வரன் |
| ▶ வெற்றி மேல் வெற்றி | – | கணபதி |
| ▶ குடும்பக்கஷ்டம் தீர | – | மாரியம்மன், காமாட்சி |
| ▶ நல்ல குழந்தைகள் | – | சாஸ்தா |
| ▶ எல்லா இன்பமும் பெற | – | திருமால் |

# அருள்மிகு இராகவேந்திரர் அவதார தலம்

## புவனகிரி, சிதம்பரம் வட்டம்



### அவதாரம்

சிதம்பரம் வட்டம், புவனகிரியில் திம்மணபட்டர், கோபிகாம்பாள் தம்பதியினருக்கு கி.பி.1595, 1596 இல் திருஅவதாரம் செய்தார். திருவேங்கடத்தான் அருளால் குழந்தை பிறந்ததால் வேங்கடத்தான் என்று பெயரிடப்பட்டது. 7 வயதிலேயே 4 வேதங்களையும், 6 சாத்திரங்களையும் 18 புராணங்களையும் கற்றுத்தேர்ந்தார். திருமண பருவம் அடைந்ததும் அன்பிலும், பண்பிலும், சிறந்த குணவதியான சரசுவதிபாய் என்பவரை திருமணம் செய்து வைக்கப்பட்டது. ஆனால் இல்லறத்தில் ஈடுபடாமல் இறை சிந்தனையிலேயே இருந்து வந்தார். பிறகு அண்ணார் குருராஜர் உதவியுடன் கும்பகோணம் ஸ்ரீமடம் சென்று ஸ்ரீ கதீந்திர தீர்த்தர் சீடராக இருந்து வேதாந்தங்களைக் கற்றுத்தேர்ந்தார்.

### பரிமளாச்சாரியார் பட்டம் பெற்றது.

ஒரு நாள் பாடசாலையில் படித்த மாணவர்கள் பொறாமை கொண்டு குருநாதர் கதீந்திர தீர்த்தரிடம் வேங்கடநாதன் சரியாகப் படிப்பது இல்லை. கிண்டல் கேலி செய்வதாகப் பொய் சொன்னார்கள். இருந்தாலும் குருநாதர் அதனை ஏற்காமல், நேரில் அறிவாற்றலை அறிய எண்ணி இருந்தார். ஒருநாள் “நியாய கதா”

என்ற பாடம் நடத்தியபோது பாடத்தைப் பாதிலேயே நிறுத்திவிட்டார்.

எல்லா மாணவர்களும் வகுப்பு முடிந்துவிட்டது என்று மகிழ்ச்சியோடு சென்றுவிட்டனர். ஆனால் வேங்கடநாதர் அன்று இரவு தூங்கவில்லை. “நியாய கதா” என்ற வார்த்தைக்குக் குருநாதரே விளக்கம் அறியாததால் பாடம் பாதியில் நிறுத்தி விட்டார். ஆனால் வேங்கடநாதன் அன்று இரவு “நியாய கதா” என்ற வார்த்தைக்குப் பரிமளம் என்று தெளிவாக ஓலைச்சுவடியில் எழுதியிருந்தார். குருநாதர் வேங்கடநாதரின் அறிவாற்றலை அறிந்து பரிமளாச்சாரியார் என்ற பட்டம் வழங்கி குருநாதரான கதீந்திர தீர்த்தர் மகிழ்ந்தார். அன்று முதல் மற்ற மாணவர்களும் அன்போடு பழகினார்கள்.

## மகா பாஷ்யசார்யர் பட்டம் பெற்றது

கதீந்திர தீர்த்தரும், சீடர்களும் தேச யாத்திரை புறப்பட்டு மதுரை சேர்ந்தனர். மதுரையில் திராவிட சந்நியாசி என்பவர் வியாகரன சாத்திரத்தில் சிறந்த பண்டிதர் தன்னை யாரும் வெல்ல முடியாது என்று அகந்தையுடன் இருந்தார்.

குருநாதரின் கட்டளைப்படி திராவிட சந்நியாசியிடம் வாதிட்டு வெற்றிபெற்ற வேங்கடநாதருக்கு “மகா பாஷ்யர்” என்ற பட்டத்தை குருநாதர் கதீந்திர தீர்த்தர் வழங்கினார்.

குருநாதருடன், சீடர்களும் தஞ்சாவூர் வந்து தங்கியிருந்த போது அமைச்சர் கோவிந்த தீட்சிதர் மகன் யக்ஞநாராயணன் என்ற அத்வைத வேத பண்டிதரிடம் “தத்வமஸி” என்ற சுருதி வாக்கியம் குறித்து 18 நாட்கள் புலவர்களும், பண்டிதர்களும் விவாதம் செய்தனர். 19ம் நாள் வேங்கடநாதன் விவாதத்தில் வென்று பட்டாச்சாரியார் என்ற பட்டம் பெற்றார்.

அன்று முதல் வேங்கடநாத பட்டாச்சாரியார் என்று அழைத்தனர். வேங்கடநாதரின் குடும்பம் வறுமையில் இருந்தபோது மனைவியின் வேண்டுகோளின்படி செல்வந்தர் வீட்டுச் சுபகாரியத்தில் கலந்து கொண்டு ஓரமாக உட்கார்ந்து வேதபாராயணம் செய்தார்.

அப்போது தலைமைப் புரோகிதர் சந்தனம் அரைத்துக் கொடுக்கச்சொல்லியபோது, அக்னி சூத்திர பாராயணம் சொல்லி அரைத்துக் கொடுத்ததால், சந்தனம் பூசியவுடன் அனைவரும்

கதற, வேங்கடநாதரிடம் ஏன் எரிகின்றது என்று கேட்க அக்னிசூத்திர பாராயணம் செய்து அரைத்ததால் எரிகின்றது.

மீதமுள்ள சந்தனத்தை வருண பாராயணம் சொல்லி செய்து கொடுக்க அனைவரும் பூசியதும் குளிர்ச்சியாக இருந்ததால், அனைவரும் வியந்து வேங்கடநாதரின் தெய்வத்தன்மையை அறிந்து போற்றினர். அதன் பிறகு செல்வந்தர் சன்மானம் கொடுத்து அனுப்பினார்.

**சன்யாசம் ஏற்றல்:**

குருநாதர் கதீந்திரத் தீர்த்தர் உடல் நலம் குன்றியதால் மடத்தின் பொறுப்பையும், மூலராமர் பூசையையும் ஒப்படைக்க, வேங்கடநாதரிடம் கேட்டபோது தன் மனைவி விபரம் அறியாதவள் என்றும் மகன் சிறியவன் என்றும் சொல்லி மறுத்தார். மறுமுறை திரும்பவும், குருநாதருக்கு உடல் நலம் குன்றியதாலும், ஸ்ரீ சாரதா தேவியும் கனவில் தோன்றி சந்நியாசம் ஏற்றுக்கொள்ளச் சொல்லியதால் மனைவியிடம் சந்நியாசம் ஏற்பதாகக் கூறி, ஆறுதல் வார்த்தைகள் கூறி, விடுபட்டுத் தஞ்சை மன்னர் இரகுநாதர் அரண்மனையில் 1625 ம் ஆண்டு குருநாதர் கதீந்திர தீர்த்தர் சாத்திர முறைப்படி வேங்கடபட்டருக்கு சந்நியாச தீட்சை வழங்கி ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் என்று பெயரிட்டார். வேங்கடநாதர் சந்நியாசம் பெற்றதை அறிந்து அவர் மனைவி சரசுவதிபாய் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்துகொண்டார். தற்கொலை செய்வது மிகப்பெரிய பாவம். தற்கொலை செய்பவர்கள் பேயாக அலைவார்கள். அதைப்போலச் சரசுவதிபாய் பேய்ரூபம் பெற்று வேதனை பட்டபோது ராகவேந்திரர் கமண்டல நீரை மந்திரித்துத் தெளித்தவுடன் நற்கதி பெற்றார்.

தஞ்சையிலிருந்து குருநாதர் கதீந்திரர், ராகவேந்திரர் இருவரும் கும்பகோணம் மடத்திற்கு வந்தவுடன் கதீந்திரர், அனைத்துப் பொறுப்புகளையும் இராகவேந்திரரிடம் ஒப்படைத்து விட்டு தேசயாத்திரை புறப்பட்டு பல மாநிலங்கள் சென்று கடைசியாக கி.பி.1626 இல் ஆரணகுந்தி என்ற இடத்தில் கதீந்திர சுவாமிகள் பிருந்தாவனஸ்தரானார்.

இராகவேந்திரர் தேசயாத்திரை புறப்பட்டு, கந்தநாதி என்ற கிராமத்தில் ஏழையான வெங்கண்ணா வீட்டில் தங்கிச்செல்லும்போது வெங்கண்ணா ஆபத்தில் என்னை நினைத்துக்கொள் என்று சொல்லிச் சென்றார். வெங்கண்ணா விறகு சுமந்து வந்தபோது சித்தி மசூதிகான் என்ற நவாப்

வேட்டையாட வந்து ஓய்விற்காக மரநிழலில் இருந்த நவாப் ஓலைச்சுவடியைக் கொடுத்துப்படிக்கச் சொன்னபோது தனக்குப் படிக்கத் தெரியாது என்று கூறினார். படிக்காவிட்டால் தலையை எடுத்து விடுவேன் என்று கூற வெங்கண்ணா இராகவேந்திரரை மனதில் நினைத்து ஓலைச்சுவடியை படித்துக் காண்பித்ததில் நவாப் மகிழ்ந்து பரிசு கொடுத்ததுடன் அரண்மனையில் திவானாக்கினார். இது இராகவேந்திரரின் கருணையால் ஏற்பட்ட செயலாகும்.

## இராகவேந்திரர் தந்த மண்ணின் மகிமை

இராகவேந்திரரின் சீடர் ஒருவர் திருமண உதவி கேட்டதும் மண்ணை அள்ளிக் கொடுத்தார். அதை பத்திரமாக எடுத்துக்கொண்டு ஒரு வீட்டில் தங்க நேர்ந்தது. சீடர் தங்கியிருந்த வீட்டில் பிரசவத்திற்காக இருந்த நிலையில் பூதம் ஒன்று குழந்தை பிறந்ததும் கொல்ல வந்தது. வீட்டுத்திண்ணையில் இருந்த சீடர் வைத்திருந்த மண்ணிலிருந்து ஒளிக்கதிர்கள் வந்ததால் பூதம் வீட்டிற்குள் சென்று கொல்ல இயலவில்லை. பூதம் சீடரிடம் மண் இருந்த டப்பாவை கொடு நான் வேண்டியதைக் கொடுக்கிறேன் என்றதும், சீடர் பொற்காசு கேட்டதும், ஒரு குடம் நிறைய பொற்காசு பூதம் கொடுத்ததும், சீடர் மண்ணை பூதத்தின் மீது தூவ அழகிய தேவனாக மாறி வானத்தில் மறைந்தது. இதையறிந்த வீட்டுத்தலைவர் தன் தமயன் மகளைத் திருமணம் செய்து வைத்தார். அந்த அற்புதம் இராகவேந்திரர் கொடுத்த மண்ணால் ஏற்பட்டது.

## உயிர் மீட்டுத் தந்த மகிமை

கிரீடகிரி என்ற ஊரில் தேசாமி ரகுநாத ராமன் என்பவர் ராகவேந்திரர் மீது அபார பக்தி கொண்டு வாழ்ந்து வந்தார். அவர் ராகவேந்திரரை அழைத்து ராமர் பூசை செய்து முடித்ததும் அனைவருக்கும் பிரசாத தீர்த்தம் வழங்கிக் கொண்டிருந்தபோது திடீரென புழு ஒன்று தீர்த்தத்தில் விழுந்து இறந்ததும், இராகவேந்திரர், ரகுநாதரை அழைத்து வீட்டில் அசுத்தம் ஏற்பட்டுவிட்டது. வீட்டை சோதனை செய்யச் சொல்லிப் பார்த்த

போது, பாயசக்குண்டாவில் 3 வயது மகன் இறந்து கிடைந்ததைப் பார்த்து வருந்தினர். உடனே இராகவேந்திரர் தன் முன் கொண்டு வருமாறு கூறியதும் தன் முன் படுக்க வைத்ததும் கமண்டல நீரை தெளித்ததும் உறங்கிய குழந்தை விழித்தது போல் எழுந்தது. அனைவரும் மகிழுந்து ராகவேந்திரரைத் துதித்தனர்.

## கனகதாசரும், வியாசரும்:

ஒரு சமயம் இராகவேந்திரர் திருப்பதி செல்லும் வழியில் ஒரு ஆஞ்சநேயர் கோயிலில் தங்கியிருந்தபோது கோயிலுக்குள் வராமல் தயங்கி நின்ற ஒருவரைக் கூர்ந்து தான் வியாசர் என்பதையும், அவர்தான் கனகதாசர் என்பதையும் உணர்ந்து ராமர் பூசைக்கு நிவேதனம் செய்ய ஏதாவது ஒரு பொருள் கொண்டு வந்தார். சாதுர்மாத விரத நாள்களில் நிவேதனத்தில் கடுகு சேர்க்கக்கூடாது என்று சிலர் நினைவு கூர்ந்தபோது, இவர் முற்பிறவியில் கனகதாசராக இருந்து ஹரியைத் தரிசிக்கச் செய்தவர் இவர் என்பதால் இனி நிவேதனத்திற்கு கடுகு உபயோகப்படுத்தலாம் என்று கூறி நிவேதனம் செய்து தீர்த்தமும், பிரசாதமும் பெற்றுப் பிறவா முக்தி நிலை பெற்றார்.

## மூன்று சோதிடர்களும் மூன்று அந்தணர்களும்:

மலையாள நாட்டிலிருந்து 3 சோதிடர்கள் வந்தனர். இராகவேந்திரர் மூவரிடம் ஜாதகம் தனித்தனியாகக் கணிக்கக் கூறினார். மூன்று பேரும் ஆயுள்காலம் 100,300,700 என எழுதியிருந்தனர். ஆனால் விபரம் சொல்ல இயலவில்லை. ஆனால் சுவாமிகள் தனது வாழ்நாள் 100 ஆண்டுகள் எனவும், தான் 700 ஆண்டுகள் யோக நிலையில் பிருந்தாவனத்தில் இருப்பதாகக் கூறினார்.

ஒருமுறை வடநாட்டில் இருந்தபோது 3 அந்தணர்கள் பரிசோதிக்க எண்ணி மதிய உணவருந்த வந்தனர். அப்போது ஒருவருக்குச் சித்திரன்னம், ஒருவருக்கு, பாயசம், ஒருவருக்குக் கொழுக்கட்டை அளிக்கப்பட்டது அவர்கள் நினைத்ததும் அதுவேயாகும். உடனே அந்தணர்கள் ராகவேந்திரர் திருவடியில்

வீழ்ந்து வணங்கித் தாங்கள் வருங்காலத்தில் பிருந்தாவனத்தில் பூசை செய்யும் அந்தணர்களாக இருக்க வேண்டியபடியே இன்றும் இருக்கிறார்.

## இராகவேந்திரரும் வைரமாலையும்:

ஒரு முறை தஞ்சையில் விஜயராகவ மன்னர் ஆண்டபோது பெரும் பஞ்சம் ஏற்பட்டது. அப்போது இராகவேந்திரர் பெருமையை அறிந்து வருகைதர கேட்டபோது ஓர் மந்திர ஓலையைக் கொடுத்துத் தானிய கிடங்கில் வைத்துத் தானியலட்சுமியை தியானித்து அனைவருக்கும் தானியம் வழங்க கூறி, கூறியபடி தானியம் கொடுத்தபோதும் குறையாமல் இருந்தது. நல்ல மழை பொழிந்தது. வளம் கொழித்ததும், ஓமம் நடத்தினர். மன்னன் விலைமதிப்பில்லாததை அக்னியில் போட்டு விட்டாரே என்று எண்ணியபோது உடனே இராகவேந்திரர் வருணனை நினைத்ததும் அக்கினியிலிருந்து மேலே வந்தது. உடனே அதை மன்னரிடம் கொடுத்துவிட்டு தானமாகக் கொடுத்த பொருளை நீர் இழக்க விரும்பவில்லை என்று கூறியதும், மன்னர் மனம் வருந்தினார். இராகவேந்திரர் மன்னரிடம் எதைத் தானமாகக் கொடுத்தாலும் முழு மனதுடன் கொடுக்கவேண்டும் நாடு செழிக்க ஆலயங்களில் பூசை சரியாக நடக்கவேண்டும் என்று கூறியதும், மன்னன் மன்னிப்பு கேட்க ராகவேந்திரரும் மன்னித்து அருளினார்.

## இறுதிகாலம்

இராகவேந்திரர் ஒருநாள் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொண்டிருந்தபோது தற்செயலாக எழுந்து மேல்நோக்கி வணங்கி மாணவர்கள் விளக்கம் கேட்ட போது கிருஷ்ணர் விமானத்தில் அமர்ந்து வைகுண்டம் செல்லும்போது தரிசனம் தந்தார். அப்போது நான் பூத உடலுடன் எத்தனைக் காலம் இருக்கவேண்டும் என்று கேட்டபோது இரண்டு விரல்களை மூன்று முறை அசைத்துச் சென்றார். அதன் பொருள் 2 வருடம், 2 மாதம், 2 நாள் எனக் கூறினார். மாணவர்கள் வருந்தினர் பிறகு தேசயாத்திரை புறப்பட்டு ‘‘அதனா’’ என்னும் ஊரை அடைந்தார் சுவாமியின் சீடரான திவான் வெங்கண்ணா தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்று ராமர் பூசை செய்தார். அப்போது நவாப் சித்தி

மசூது கான் சுவாமியைச் சோதிக்க தட்டில் மாமிச துண்டுகளை வைத்து துணியில் மூடி சுவாமியிடம் வைத்தார். இதையறிந்த சாமிகள் நீரைத் தெளித்ததும், அவை பூக்கள் மற்றும் பழங்களாக மாறியது. நவாப் தெய்வீகத் தன்மையை அறிந்து சாமிகளிடம் ஏதாவது கேளுங்கள் என்று வற்புறுத்தியதால் துங்கபத்ரா நதியில் உள்ள "பாஞ்சாலம்" என்று கிராமத்தை வழங்கிவிட்டார். அது ஏற்கனவே வேறு முகமதிய பக்கீருக்கு வழங்கியிருந்தாலும், மீண்டும் அதை திரும்பப்பெற்று சுவாமிகளுக்கு வழங்கினார்.

## பிருந்தாவனம்

மந்திராலயத்தையும், பிருந்தாவனத்தையும் பாதுகாக்க ஆன்மீக சீடர் வெங்கண்ணாவிடம் பொறுப்புகளை ஒப்படைத்தார். அவருக்கு "ஸ்ரீ மோகீந்திர தீர்த்தர்" என்ற பெயருடன் சன்யாசம் தந்து கி.பி.1671 ம் வருடம் வியாழக்கிழமை சிரவண மாதம் கிருஷ்ணபட்சத்தில் பல நாட்டு பக்தர்கள் குவிந்திருந்த வேளையில் இறை நாமங்களைக் கூறி துங்கபத்ரா நதியில் நீராடினார். மிகுந்த சோகத்தில் இருந்த மக்களிடம் கிருஷ்ண நாமங்களைச் சொல்லவும், உண்மையைப் பேசவும், எக்காரணம் கொண்டும் பொய் பேசக்கூடாது என்றும், நான் பிருந்தாவனம் பிரவேசித்த பின்னும் உங்களுடன் இருப்பேன் என்று கூறி பிருந்தாவனத்தில் அமர்ந்தார்.



# அருள்மிகு நடனபாதீஸ்வரர் திருக்கோயில்
# திருகண்டேஸ்வரம்



## திருக்கோயில் அமைவிடம்

நடனபாதேஸ்வரர் திருக்கோயில் கடலூர்–பண்ருட்டி பிரதான சாலையில் (கடலூரிலிருந்து 13 கி.மீ. பண்ருட்டியிலிருந்து 13 கி.மீ. நெல்லிக்குப்பம் நகராட்சியின் மேற்கு எல்லையில் அமையப்பெற்றுள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு நடனபாதீஸ்வரர், ஆடும் அடிகள்.

## இறைவி பெயர்

அருள்மிகு ஹஸ்த தாளாம்பிகை, கைத்தாளம்போடும் உமை.

## தல விருட்சம்

வன்னி, வில்வம்

## தல வரலாறு

பண்டைக் காலத்தில் திருவடுகூர் என்றும் திருக்கண்ணீச்சுரம் என்றும் அழைக்கப்பெற்றுள்ளது. தற்போது



திருக்கண்டீஸ்வரம் என அழைக்கப்பெறும் இத்திருக்கோயில் மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகிய மூன்றுமே ஒருங்கே அமையப்பெற்ற சரித்திரப் புகழ் வாய்ந்த திருக்கோயிலாகும். இத்திருக்கோயிலில் குடிகொண்டுள்ள ஈசன் சுயம்பு மூர்த்தியாகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடலுக்கு இறைவி கைத்தாளம் போட்டதாகவும், நந்திதேவர் முழவு இசைத்ததாகவும், இதற்கேற்ப இறைவன் நடனமாடியதாகவும் முடிவில் இறைவன் ஆடியதற்கு சுந்தரரிடம் கூலி கேட்டதாக ஐதீகம் நிலவுகிறது.

இத்திருக்கோயில் பல்வேறு காலங்களில் நடைபெற்ற திருப்பணி நன்கொடைகள் குறித்த கல்வெட்டுகள் உள்ளன.

## தல சிறப்பு

இத்திருக்கோயிலின் சுவாமி சன்னதியின் ஈசான மூலையில் அமைந்துள்ள ஆனந்தபைரவர் சன்னதி மிகவும் சிறப்பு வாய்ந்ததாகும். இத்திருக்கோயிலின் சுவாமி சன்னதி மேற்கு நோக்கியும், அம்மன் சன்னதி கிழக்கு நோக்கியும் அமையப்பெற்று, அம்மன் சன்னதி எதிரே அழகிய புனித தீர்த்தக்குளமும் அமையப்பெற்றுள்ளது தனிச்சிறப்பாகும்.

## பூஜைகள்

இத்தகு பழமைவாய்ந்த ஆலயத்தில், நாள்தோறும் மூன்றுகால பூஜைகள் நடைபெற்று வருகிறது.

## திருவிழாக்கள்

ஆனி பிரம்மோற்சவம், ஆண்டு முழுவதும் உள்ள இந்துக்கள் பண்டிகையின்போது சிறப்பு பூஜைகளும், பௌர்ணமியின்போது தலவல பூஜையும் நடைபெற்றுவருகிறது.

ஆனந்தபைரவருக்கு அமாவாசை, பௌர்ணமி, அஷ்டமி, திதிகளிலும், ஞாயிற்றுக்கிழமைகளிலும் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. பெருந்திரளான பக்தர்களும் தங்களது வேண்டுதல்களை நிறைவேற்றிக்கொள்கின்றனர்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு நடனபாதீஸ்வரர் திருக்கோயில்,
திருக்கண்டேஸ்வரம், பண்ருட்டி வட்டம்.

# அருள்மிகு ஆதிபுரீஸ்வரர் திருக்கோயில், எய்தனூர்



## திருக்கோயில் அமைவிடம்

சோழமண்டல நாட்டில் அதிகாபுரி என்னும் திருவதிகை திருத்தலத்திற்கு கிழக்கில் 12 கி.மீ. தூரத்தில் மணிக்காதபுரம் எனும் திருமாணிக்குழிக்கும் கெடிலநதிக்கும் வடக்கே 3 கி.மீ தூரத்தில் அமையப் பெற்றுள்ளது சந்தானபுரி எனும் ஆதிபுர மகாசிவத்தலம்.

## இறைவன் பெயர்

அருள்மிகு ஆதிபுராதீசர்

## இறைவி பெயர்

அருள்மிகு பத்மதாளாம்பிகை

## தல புராணம்

இத்திருத்தலத்தில் நவதீர்த்தங்கள் உள்ளன. இதில் பிரம்ம தீர்த்தத்தினின்றும் திருமஞ்சனம் கொண்டு அபிஷேகம் செய்து பூசனை நைவேத்தியங்களை விதிப்படி செய்வித்து வணங்கினால் 1000 அஸ்வமேதயாகம் செய்த பலன் கண்டதாக தலபுராணம் தெரிவிக்கிறது. இராமாயணத்தில் கிஷ்கிந்தையின் அரசனான வாலி, இலங்கை அரசன் இராவணனை தன் வாலினால் கட்டி நான்கு திசைகளிலும் சிவபெருமானை வணங்கி பின்னர்,



ஆதிபுரம் என்னும் எய்தனூருக்கு வந்து சிவபெருமானை வணங்கினான். இந்த வரலாறு கருங்கல்லில் புடைப்பு சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. அதனால் இந்த திருக்கோயில் இராமாயண காலத்திலேயே இருந்துள்ளதை அறியலாம்.

இத்தலத்தில்தான் பங்குனிமாதம் கிருத்திகை நட்சத்திரம் தொடங்கி 10 நாள் பிரம்மோற்சவம் விழாவினை வாலி நடத்தியதாகப் புராண வரலாறு கூறுகின்றது.

இத்தலத்தில் 63 நாயன்மார்களில் ஒருவராக விளங்கிய ஏனாதிநாதருக்கு ஆதிபுரீஸ்வரர் தோன்றி நித்தியஞானதேகத்தை கொடுத்து அருள் வழங்கியதலமாகும். சிவன் திரிபுரம் எரிக்க புறப்பட்டபோது தேரோட்டியாக இருந்த பிரமன் தேரோட்டத்தை விட்டு சிவன் பாணம் விடும் அழகை கண்டு வியந்தபடி இருந்ததால் தேர்திசை தவறிசென்றது. இதனால் பிரம்மனுக்கு சாபவிமோசனம் பெற்ற தலமாகும்.

### கல்வெட்டுகள்

இத்தகு சிறப்பும் பழமையும் வாய்ந்த இத்தலத்தினைப் பல்வேறு அரசர்கள் திருப்பணிசெய்த வரலாற்றினை கருவறையைச் சுற்றியுள்ள கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு ஆதிபுரீஸ்வரர் திருக்கோயில்,
எய்தனூர், பண்ருட்டி வட்டம்.

# அருள்மிகு கூத்தாண்டவர் திருக்கோயில் கொத்தட்டை

## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் நகரிலிருந்து சிதம்பரம் செல்லும் பிரதான சாலையில் கடலூரிலிருந்து சுமார் 26 கி.மீ தொலைவில் 1 கி.மீ உள்ளடக்கிய கொத்தட்டை என்னும் கிராமத்தில் இத்திருத்தலம் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு கூத்தாண்டவர்

## தல வரலாறு

பாரதப்போர் ஏற்பட்ட காலத்தில், போர் தொடங்குவதற்கு முன்னதாகப் பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் பொதுவான நபரைப் பலியிட வேண்டும் என்ற நிலை ஏற்பட்டபோது, 32 லட்சணங்கள் பொருந்திய அரவான் என்பவரை பலியிடத் தீர்மானிக்கின்றனர். அத்தருணத்தில் பலியாவதற்கு ஒப்புக்கொண்ட அரவான் பாரதப்போர் முடியும்வரை அதனைக் காண்பதற்கான வரத்தினை வேண்டிப்பெறுகிறான். அரவான் திருமணமாகாதவர் என்பதால், அவருக்குத் திருமணமும் செய்து வைக்க வேண்டிய நிலையிலும் பலியாகப் போகின்ற ஒருவரை மணக்க எந்தப் பெண்ணும் முன்வரமாட்டாள் என்பதாலும், கிருஷ்ண பகவானே பெண் உருக்கொண்டு அரவானை மணந்ததாகவும், அரவான் பலியானதற்குப் பின் அவர் மாங்கல்யம் இழப்பதாகவும் வரலாறுகள் தெரிவிக்கின்றன. இந்த வரலாற்றின் அடிப்படையில் திருமணம் ஆகாதோர் இத்தெய்வத்தை வேண்டி பூஜை செய்வதால் திருமணம் கைகூடும் என்பது ஐதீகம். தற்போது சமுதாயத்தில் திருநங்கைகள் என்று சொல்லப்படும் அரவாணிகள் இத்திருக்கோயிலுக்கு வந்து பூஜை செய்து வழிபடுகின்றனர்.

## திருவிழா

ஆண்டுதோறும் வைகாசி மாதத்தில் நடைபெறும் உற்சவத்தின் போது சுமார் 5000க்கு மேற்பட்ட அரவாணிகள் இந்தியா முழுவதும் இருந்து இங்கு வந்து கூத்தாண்டவரைத் தரிசித்துப் பயன் பெறுகின்றனர்.

# அருள்மிகு ஆண்டவர் செல்லியம்மன் திருக்கோயில்
# பொய்யனப்பாடி
# திட்டக்குடி வட்டம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் விருத்தாசலம் சேலம் நெடுஞ்சாலையில் வேப்பூரை அடுத்த அடரி என்ற கிராமத்திலிருந்து தெற்கே சுமார் 2 கி.மீ தூரத்தில் உள்ளது.

## பிரார்த்தனைத் தலம்

இத்தலம் சுற்றுப்புறப் பகுதியில் வசிக்கும் மக்களின் குலதெய்வமாக இருந்து வருகிறது. தினந்தோறும் மக்கள் மொட்டையடித்து, பொங்கல் வைத்தும், தங்களது நேர்த்திக்கடனைச் செலுத்தி வருகின்றனர்.

## திருவிழாக்கள்

ஆண்டுதோறும் பிரம்மோற்சவம் வைகாசி மாதத்தில் 10 நாள்கள் நடைபெறும். 9–ம் நாள் தேரோட்டம் நடைபெறும். பல்லாயிரக்கணக்கான மக்கள் வருகைதந்து தங்களது பிரார்த்தனையைச் செலுத்துவார்கள்.

# அருள்மிகு பூமாலையப்பர் பச்சையப்பன் திருக்கோயில் நெய்வாசல்

## திருக்கோயில் அமைவிடம்

திட்டக்குடி சாலையில் ஆவினங்குடி பிரதான சாலையிலிருந்து தென்கிழக்குத் திசையில் 2 கி.மீ தொலைவில் உள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு பூமாலையப்பர், பச்சையப்பன்

## பிரார்த்தனைத் தலம்

இயற்கையிலேயே இத்திருக்கோயில் மரங்கள் சூழ்ந்த சூழலில் உள்ளது. பக்தர்கள் தங்களது கோரிக்கையை இறைவனிடம் குறி கேட்கும் முறையிலும் வழிபட்டுத் தங்களது நேர்த்திக்கடன்களைச் செலுத்தி வருகின்றனர்.

## பூஜை

தினசரி ஒரு கால பூஜை நடைபெறுகிறது.

## திருவிழாக்கள்

பிரதி வருடம், ஆவணி மாதம் பிரமோற்சவம் சிறப்பாக நடைபெறும்.

# அருள்மிகு பூலோகநாதர் திருக்கோயில்
# நெல்லிக்குப்பம்




## திருக்கோயில் அமைவிடம்

பூலோகநாதர்சுவாமி திருக்கோயில் கடலூர்–பண்ருட்டி சாலையில் நெல்லிக்குப்பம் நகரில் அமையப்பெற்றுள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு ஸ்ரீ பூலோகநாதர், ஸ்ரீபிரசன்ன வெங்கடாசலபதி

## இறைவி பெயர்

ஸ்ரீபுவனாம்பிகை அம்மன், அலர்மேல்மங்கை தாயார்

## பூஜைகள்

நாள்தோறும் இருகால பூஜையும், சிவராத்திரி மற்றும் நடராஜபெருமானுக்குரிய ஆறு அபிஷேகங்களும் சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

இத்திருக்கோயிலின் வடமேற்கு மூலையில் அமையப் பெற்றுள்ள விஷ்ணு துர்க்கை அம்மனுக்குச் செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் இராகுகால பூஜை சிறப்பாக நடைபெற்று வருகின்றது.

## தல விருட்சம்

வில்வமரம்

## தல வரலாறு

இத்திருக்கோயில் மிகவும் சிதைந்து கள்ளிச் செடிகள் முளைத்த காட்டில் புதைந்திருத்தபோது மாடு மேய்க்கும் சிறுவர்கள் எறிந்த கற்களினால் ஏற்பட்ட ஒலியினை அறிந்த வையாபுரி பரதேசி என்ற மாமுனிவர் அவ்விடத்தில் பூலோகநாதர் ஆலயத்தினைத் திருப்பணி செய்துள்ளார். தில்லைச் சிற்றம்பலத்தில் ஸ்ரீ நடராஜரையும், ஸ்ரீகோவிந்தராஜனையும் ஒரே இடத்தில் நின்று தரிசிப்பது போல இவ்வாலயத்திலும் ஸ்ரீ நெல்லித்தோப்பாக இருந்துள்ளது. இப்பகுதியில் நடைபெற்ற பெரும் கலவரத்தின்போது கர்ப்பினிப்பெண் ஒருவர் இங்கிருந்தது தப்பி ஒசூர் என்ற ஊருக்கு சென்றதாகவும், சில ஆண்டுகள் கழித்து அப்பெண் தனது குழந்தையுடன் மீண்டும் நெல்லிக்குப்பம் வருவதற்குப் புறப்பட்டபோது அப்பெண்ணிற்கு வழித்துணையாக ஒசூரிலிருந்து அம்மனே மூதாட்டி வடிவில் உடன் வந்ததாகவும், பின்னர் இங்கேயே தங்கிவிட்டதாகவும், அந்த அம்மனே தற்போது

ஒசூர் அம்மன் என வழிபட்டு வருவதாக ஐதீகம், பூலோகநாதரையும், ஸ்ரீ பிரசன்ன வெங்கடாஜலபதியையும் ஒரே இடத்தில் நின்று தரிசிக்கும்படி அமையப்பெற்றுள்ளது மிகச்சிறப்பானதாகும். இத்திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் ஸ்ரீ பூலோகநாதர் என்றும், இறைவி ஸ்ரீபுவனாம்பிகை அம்மன் என்றும், இறைவன் ஸ்ரீபிரசன்ன வெங்கடாஜலபதி, இறைவி அலர்மேல்மங்கை தயார் என்றும் கிழக்கு நோக்கியும், தெற்கு நோக்கியும் அமையப்பெற்றுள்ளது தனிச்சிறப்பாகும்.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு பூலோகநாதர் திருக்கோயில்,
நெல்லிக்குப்பம், பண்ருட்டி வட்டம்.



# அருள்மிகு படைவீட்டம்மன் திருக்கோயில்
# வைத்தி ரெட்டிபாளையம்



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் பண்ருட்டி நகரின் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது.

### இறைவி பெயர்

அருள்மிகு படைவீட்டம்மன்.

### தல வரலாறு

பல்லவ மன்னர்கள் படையெடுத்து வந்தபோது இந்த இடத்தில் பாடி வீடு அமைத்து அம்மனை வழிபட்டு, பின்னர்

படைநடத்தி வெற்றிபெற்றார்கள் என்பது வரலாறு. அதனால் அம்மனுக்குப் படைவீட்டம்மன் என்று பெயர் விளங்குகிறது. இத்திருக்கோயிலின் கருவறையில் மிகப்பெரிய புற்று அமைந்துள்ளது. அதில் அம்மன் நாக வடிவில் குடிகொண்டுள்ளாள். மூலவரான அம்மனுக்குக் கழுத்துடன் கூடிய தலை மட்டுமே உள்ளது. முழு உருவம் இல்லை.

இத்தாயானவள் குல தெய்வமாகவும் விளங்குகின்றாள். இது ஒரு பிரார்த்தனைத் தலமாகும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் பெண்கள் கூட்டம் இத்திருக்கோயிலில் அலை மோதும் என்பது குறிப்பிடத்தக்கது. படைவீட்டம்மன் இப்பகுதியில் பேசும் தெய்வமாக விளங்குகின்றாள்.

## திருவிழாக்கள்

ஆடி மாதம் வெள்ளிக்கிழமை செடல் உற்சவமும், தேரோட்டமும் வெகு சிறப்பாக நடைபெற்று வருகிறது.



# அருள்மிகு அங்காளபரமேஸ்வரி அம்மன் திருக்கோயில் மேல்காங்கேயன்குப்பம்

## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் பண்ருட்டி–காட்டுக்கூடலூர் சாலையில் முத்தாண்டிக்குப்பத்திலிருந்து வடக்காக 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

அருள்மிகு அங்காளபரமேஸ்வரி அம்மன்

## தல வரலாறு

கிழக்கு நோக்கிய திருத்தலம், வல்லாள கண்டனுடைய மனைவியான லிசாசனியினுடைய கர்ப்பத்தில் சிவன் குழந்தையாக அவதரித்தார். இக்குழந்தை பிறந்தால் மிகுந்த துன்பம் தேவர்களுக்கும், மனிதர்களுக்கம் ஏற்படும் என்ற காரணத்தால் தேவர்கள் லோகமாதாவாகிய பார்வதி தேவியிடம் முறையிட பார்வதி தேவி அங்காளபரமேஸ்வரி அம்மனாக அவதரித்து பாவாடைராயன் துணையுடன் லிசாசனியின் நிறைமாத கர்ப்பத்தில் இருக்கும் குழந்தையைக் குடலோடு பிடுங்கி எடுத்து அவளது குடலை மாலையாக அணிந்து வல்லாளகண்டன் முதலான அசுரர்களை அழித்துத் தேவர்களைக் காக்கின்றாள்.

## திருவிழாக்கள்

இந்த நிகழச்சி பங்குனி மாதம் அமாவாசையில் இத்திருக்கோயிலில் பிரம்மோற்சவ விழாவாக நடத்தப்படுகிறது. இதில் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு அம்மனுக்கு நேர்த்திக்கடன் செலுத்துகிறார்கள். ஏராளமான பேர்களுக்கு குல தெய்வமாகவும், பிரார்த்தனைத் தலமாகவும் இத்திருக்கோயில் விளங்கி வருகின்றது.

# அருள்மிகு அனந்தீஸ்வரர் திருக்கோயில்
# உடையார்குடி



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் காட்டுமன்னார்குடியிலிருந்து தெற்கே 5 மீ. தொலைவில் உள்ள வீரநாராயணபுர சதுர்வேதமங்கலம் என்றழைக்கப்படும் உடையார் குடியில் அமையப்பெற்றுள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு அனந்தீஸ்வரர்

## இறைவி பெயர்

அருள்மிகு சௌந்தரநாயகிஅம்மன்

## தல வரலாறு

கி.பி.946 ஆம் ஆண்டில் வீரநாராயணன் என்றழைக்கப்பட்ட முதலாம் பராந்தகச் சோழனால் இத்திருக்கோயில் திருப்பணி செய்யப்பட்டது. இத்திருக்கோயில் பூமியைத் தாங்கி நிங்கும் ஆதிஷேசன் உட்பட அட்ட நாகத்தின் முதன்மையான அனந்தன் வழிபட்டு முக்தி அடைந்ததால் அனந்தீஸ்வரார் என்றழைக்கப்பட்டது. இத்திருக்கோயிலின் எதிர்புறம் உள்ள சூரியன், சந்திர புஷ்கரணியில் இறைவனைத் தொழுது மாமன்னன் சுந்தரபாண்டியன் தனது தீராத தொழுநோயிலிருந்து விடுபட்ட தலமாகும்.

இத்திருக்கோயில் சோழர்காலத்தில் அமைக்கப்பட்ட கற்றளி வடிவம் இன்றளவும் மாற்றமின்றி காண்போரை வியக்கும் வண்ணம் அமைக்கப்பெற்றுள்ளது. இத்திருக்கோயிலில் விநாயகர், துர்க்கை, தட்சிணாமூர்த்தி, நவக்கிரகங்கள் போன்ற அனைத்துச் சன்னதிகளும் அமையப் பெற்றுள்ளன.



# அருள்மிகு சிவலோகநாதசுவாமி திருக்கோயில் மேல்பட்டாம்பாக்கம்



## திருக்கோயில் அமைவிடம்

சிவலோகநாதர் திருக்கோயில் கடலூர்–பண்ருட்டி பிரதான சாலையில் கடலூரிலிருந்து மேற்கே 15கி.மீ, தொலைவில் உள்ள மேல்பட்டாம்பாக்கம் என்னும் பேரூரில் அமையப்பெற்றுள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு சிவலோகநாதர்

## இறைவி பெயர்

அருள்மிகு ஞானபார்வதி அம்மாள்

## தல அமைப்பு

சிவபெருமான் அநாதிகாலம் தொட்டுத் தோன்றிய நிதியாய் அவன், அவள், அது என்னும் உயிரும் உலகுமாக நின்று, படைத்தல், காத்தல், அழித்தல் என முத்தொழில் புரிந்து, உயிர்களின் துயர்துடைத்துத் எங்கும் நீக்கமற நிறைந்து இயக்கும் இயல்பினை உடையவன். இத்தகு இறைவன் மேல்பட்டாம்பாக்கம் கிராமத்தில் சிவலோகநாதனாக எழுந்தருளியுள்ளார்.

## தல விருட்சம்

தல விருட்சமாக வன்னி, வில்வம், சரக்கொன்றை ஆகிய மூன்று விருட்சங்களையும் முக்கோண வடிவில் அமையப்பெற்று அதன் நடுவில் பிரம்மலிங்கம் என்ற தனியொரு லிங்கம்



அமைந்துள்ளது. இப்பிரம்மலிங்கத்திற்கு வன்னி, வில்வம், சரக்கொன்றை ஆகிய மூன்று விருட்சங்களிலிருந்தும் எந்நேரமும் இயற்கையாகவே அர்ச்சனை நடைபெறுவது காண்போரை வியக்க வைக்கும் அதிசயமாகும்.

### சரபேஸ்வரர் சன்னதி

மேலும், சிங்கமும், பட்சி உடலும் கொண்ட சரபேஸ்வரருக்கு, குடந்தை வட்டம் திருபுவனத்தைப் போன்றே இங்கும் தனி சந்நிதி அமையப்பெற்றுள்ளது தனிச் சிறப்பாகும்.

### திருவிழா, பூஜைகள்

இத்திருக்கோயிலில் திங்கள் கிழமை தோறும் சோமவார வழிபாடும், செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் துர்கா பூஜையும், வியாழக் கிழமை தோறும் குரு பூஜையும் , சனிக்கிழமைதோறும் ஐய்யப்ப பூஜையும், ஞாயிறு தோறும் சரபேஸ்வரர் பூஜையும் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. மேலும், ஒவ்வொரு பிரதோஷத்தின்போதும் நந்திகளுக்கு நடைபெறும் அபிஷேக ஆராதனை இப்பகுதி வாழ் மக்களிடையே பெரும் பிரசித்தி பெற்றதாகும்.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு சிவலோகநாதசுவாமி திருக்கோயில்,
மேல்பட்டாம்பாக்கம், பண்ருட்டி வட்டம்

# அருள்மிகு அரங்கநாதபெருமாள் திருக்கோயில் திருவதிகை



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருத்தலம் பண்ருட்டியிலிருந்து கடலூருக்குச் செல்லும் நெடுஞ்சாலையில் 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு அரங்கநாதர், பள்ளிகொண்ட பெருமாள்

## இறைவி பெயர்

அருள்மிகு அரங்கநாயகி, அதிகைவல்லி

## தல சிறப்பு

நடுநாட்டின்கண் கெடில நதியின் வடபால் அமைந்துள்ள திருத்தலமாகும். கிழக்கு நோக்கிய திருத்தலம். பெருமாள் திருநாமம் அரங்கநாதர் மற்றும் பள்ளிகொண்ட பெருமாள். எம்பெருமான் ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டுள்ளார். இடக்கையினால் பிரம்மாவுக்குச் சதுர்வேதத்தையும் உபதேசிக்கிறார். தாயார் சன்னதி வலப் பக்கத்தில் உள்ளது. தாயார் திருநாமம் அரங்கநாயகி மற்றும் அதிகைவல்லி, தாயார் அமர்ந்த

நிலையில் மிகப்பெரிய உருவில் அருள்பாலிக்கின்றாள். இடப்பக்கத்தில் ஆண்டாள் சன்னதி உள்ளது.



இதில் ஆண்டாள் மிகவும் அழகாகவும், நளினமாகவும் அருள்பாலிக்கின்றாள். இத்திருக்கோயிலில் சக்கரத்தாழ்வாருக்குத் தனி சன்னதி உள்ளது. கிருத்திகைதோறும் சுதர்சன ஹோமம் நடைபெற்று வருகின்றது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 6.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு அரங்கநாதசுவாமி திருக்கோயில்,
திருவதிகை, பண்ருட்டி.

# அருள்மிகு மலையாண்டவர் திருக்கோயில்
# சி.என். பாளையம்



## திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூரிலிருந்து நடுவீரப்பட்டு வழியாக குறிஞ்சிப்பாடி செல்லும் சாலையில் நடுவீரப்பட்டிலிருந்து மேற்கே 1 கி.மீ தொலைவில் உள்ளது. இது புஷ்பகிரி என்றும் அழைக்கப்படுகிறது. சுமார் 300 அடி உயரமான மலையின் உச்சியில் திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு மலையாண்டவர்

## தல அமைப்பு

செங்கல் திருப்பணி பல்லவர் கால கட்டிடக்கலை விமானங்கள் ஐந்து நிலைகளை உடையது. குடவரை போன்ற அமைப்பும் காணப்படுகிறது. மூலவர் தண்டாயுதபாணியாகக் கையில் தண்டுடன் காட்சி அளிக்கின்றார். பழநி தண்டாயுதபாணியை ஒத்தாற்போல் காணப்படுகிறார். விநாயகர் சன்னதி வலது பக்கத்தில் அமைந்துள்ளது. சித்தர்கள் இந்த மலையில் வசித்ததாகச் செய்திகள் கூறுகின்றன.



## திருவிழா

தை மாதம் பொங்கல் பண்டிகையை அடுத்து வரும் காணும்பொங்கல் அன்று (கரிநாள்) தெப்ப உற்சவம் வெகு சிறப்பாக நடைபெறுகின்றது. சுமார் 1 இலட்சம் பக்தர்களுக்கு மேல் கூடுவார்கள். மலையடிவாரம் முழுவதும் திருவிழா கடைகள் பெரும் அளவில் காணப்படும்.

# அருள்மிகு இளமையாக்கினார் திருக்கோயில்
# சிதம்பரம்



### திருக்கோயில் அமைவிடம்

சிதம்பரம் நகரின் மையப்பகுதியில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

இளமையாக்கினார், திருப்புலீச்சுரர்

### இறைவி பெயர்

இளமைநாயகி, திரிபுரசுந்தரி

### தல வரலாறு

திருநீலகண்ட நாயனாரும், கணம்புல்ல நாயனாரும் சிவபெருமானின் திருவருளால் முக்தி அடைந்த திருத்தலம் இதுவாகும். **63** நாயன்மார்களுள் ஒருவரும் தனியடியார்களில் முதல்வராகவும் பேசப்படுபவர் திருநீலகண்ட நாயனார். முதுமையடைந்த திருநீலகண்ட நாயனாரையும் அவரது மனைவியாரையும் இக்கோயில் எதிரில் உள்ள வியாக்ரபாத தீர்த்தத்தில் மூழ்கச் செய்து இளமை பெறச் செய்ததால் இந்த

இறைவனுக்கு இளமையாக்கினார் என்றும் பெயர் அமைந்தது. இறைவனின் உடன் அமர்ந்த இறைவியின் பெயர் இளமைநாயகி. இவர்கட்கு இதற்கு முன்னிருந்த பெயர் திருப்புலீச்சுரர் மற்றும் திரிபுரசுந்தரி என்பதாகும். தெய்வச் சேக்கிழார் இவ்வாலயத்தைத் திருப்புலிச்சுரம் என்றே வழங்குகிறார். தில்லையில் அவர் மனைவியார் இரத்தின சாலை அம்மையாரும் அயலறியாத வண்ணம் அண்ணலார் ஆணை உய்த்த வாழ்வில் உறுதிநெறியை உலகறியச் செய்யக் கருதிய சிவபெருமான் சிவயோகியாகி அவர் வீட்டிற்கு வந்தார். நாயனாரிடம் பழைய திருவோட்டைப் பாதுகாத்துத் தருமாறு கூறித் தந்து சென்றார். பின்னர் அவ்வோட்டை மறையச்செய்து மீண்டும் வந்து தரும்படிக் கேட்டார். ஓட்டைத் திரும்பத் தருவதற்கு இயலாததால் அவ்வழக்கு தில்லை வாழந்தணர் பேரவைக்குச் சென்றது. பேரவை கூறிய முடிவின்படி இறைவன் நாயனாரையும், மனைவியாரையும் அழைத்து வந்து இருவரும் கையைப்பற்றிக்கொண்டு ஓடு காணாமற் போனது உண்மை என வியாக்ரபாத தீர்த்தம் என்னும் இத்திருக்குளத்தில் மூழ்கச் சொன்னார்.

கையைப் பற்றிக்கொண்டு மூழ்கிச் சத்தியம் செய்து தருவதற்கு முன் அவர்களுக்குள் உள்ள சபதம் இடந்தராததால் நாயனார் வேறு வழியின்றி மனைவியாரைத் தீண்டாத உண்மையை உலகறிய மூங்கில் தண்டின் இரு பக்கத்தையும் பற்றிக்கொண்டு மூழ்கினார்கள். ஐம்புலன் வென்ற அவர்கள் செயலை உலகறியச் செய்த இறைவன் அவர்களுக்கு என்றும் நீங்கா இளமை நலம் அருளி செய்தார். இளமை பெற்ற திருநீலகண்டரும் அவர் மனைவியாரும் திருத்தொண்டு செய்து இறைவனடி எய்தினர். திருத்தொண்டர்புராணம் என்னும் பெரியபுராணத்திலுள்ள திருநீலகண்ட நாயனார் புராணத்தில் தெய்வச் சேக்கிழார் இவ்வரலாற்றை மிக அருமையாக 43 செய்யுள்களால் கூறியுள்ளார்.

### திருவிழா

ஒவ்வொரு ஆண்டும் தைமாதம் விசாக நட்சத்திரத்தில் நாயனார் இளமையான நாளைத் திருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள்.

# அருள்மிகு பசுபதீஸ்வரர் திருக்கோயில்
# திருவாமூர்
## (அப்பர் சுவாமிகள் அவதாரத் தலம்)



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் பண்ருட்டி – திருக்கோயிலூர் நெடுஞ்சாலையில் பண்ருட்டியிலிருந்து **11** கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு பசுபதீஸ்வரர்

### இறைவி பெயர்

அருள்மிகு சிவலோக நாயகி

### தல விருட்சம்

இத்திருக்கோயிலின் தல விருட்சமாக சரக்கொன்றை விளங்குகிறது.

### தலச் சிறப்பு

திருவாமூர் சைவ சமய குரவர்கள் நால்வருள் ஒருவரான திருநாவுக்கரசு சுவாமிகளும், அவரது தமக்கையாரும், **63** நாயன்மார்களில் ஒருவருமான திலகவதி அம்மையாரும்



அவதரித்த திருத்தலமாகும். இத்தலத்தினைச் சேக்கிழார் பெருமான் சிவம் பெருக்கும் திருவாமூர் எனப் பெரியபுராணத்தில் குறிப்பிட்டுள்ளார். இத்திருக்கோயில் சிவத்தலத்திற்குரிய அனைத்துப் பரிவார மூர்த்தங்களும் அழகுற அமையப் பெற்றுள்ளதோடு, அப்பர் பெருமானுக்கும், திலகவதி அம்மையாருக்கும் தனித்தனி சன்னதிகள் உள்ளது சிறப்பானதாகும். அருணகிரிநாதரின் திருப்புகழ் சிறப்பானதாகும். மேலும், இத்திருக்கோயிலுக்குத் தெற்கே அப்பர் பெருமானையே மூலவராகக் கொண்டு தனித் திருக்கோயில் ஒன்று உள்ளது. அப்பர் திருக்கோயிலின் அர்த்த மண்டபத்தின் இடப்பக்கத்தில் திருநாவுக்கரசு சுவாமிகளின் தமக்கையரான திலகவதி அம்மையாரும், பெற்றோர்களான புகழனார், மாதினியார் ஆகியோர் திருஉருவ சிலைகள் அழகுற அமையப்பெற்று வழிபடப்படுகிறது. திருக்கோயில் தல விருட்சமாகக் களர் உகாய் என்ற மரம் ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக இருந்து வருகிறது. இம்மரம் கொடிவகையா ! மரவகையா ! என்று அறிய இயலாத நிலையில், மரத்தினுடைய இலைகள் அறுசுவைகளை உள்ளடக்கியதாக உள்ளது விந்தையிலும் விந்தையாகும்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 8.00 மணி முதல் மதியம் 12.00 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8.00 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்
அருள்மிகு பசுபதீஸ்வரர் திருக்கோயில்,
திருவாமூர்.

# அருள்மிகு சுப்ரமணிய ஸ்வாமி திருக்கோயில்
# காராமணிக்குப்பம்



### திருக்கோயில் அமைவிடம்

இத்திருக்கோயில் கடலூர்–பண்ருட்டி பிரதான சாலையில் கடலூரிலிருந்து 10 கி.மீ மேற்கே அமையப்பெற்றுள்ளது.

### இறைவன் பெயர்

அருள்மிகு சுப்ரமணியர்

### இறைவி பெயர்

அருள்மிகு வள்ளி, தேவயானை

### தல விருட்சம்

சரக்கொன்றை

### தல வரலாறு

மாண்புகள் நிறைந்த இம்மாநிலத்தே வாழும் மக்கள்

பலதொழில் புரிந்து வாழ்கின்றனர். அவர்கள் செய்யும் தொழிலெல்லாம் சீர்தூக்கிப் பார்க்குங்கால் நெய்யும் தொழிலுக்கு நிகரில்லை, நெய்தல் தொழிலுக்குத் தேவையானது நூல். அதில் பலவகை சாயமிடுவதற்கான நீலச்சரக்குத் தயார் செய்வதற்கான தொட்டிகள் கட்டுவதற்கு இவ்வூரில் ஆழமாகத் தோண்டியபோது அருள் புதையலாக கிடைக்கப்பெற்றது அருள்மிகு வள்ளி, தேவயானை சமேத சுப்ரமணியர் ஆகியோரின் அற்புதச் சிலைகள். இந்த விக்ரகங்களை அருகில் இருந்த சரக்கொன்றை மரத்தினடியில் நிர்மானித்து பின்னர் காராமணிக்குப்பம்– குணமங்கலம் என்ற இரு கிராமத்திற்கும் பொதுவான எல்லையில் கிருத்திகை சாமியார் என்பவரின் முயற்சியால் அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயில் நிர்மானிக்கப்பட்டது.

இத்திருக்கோயில் அருள்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகள் வழிபட்ட தலமாகும். மேலும், அருள்கவியாக விளங்கிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் பதிகம் பாடிய திருக்கோயிலாகும்.

### பூஜை காலங்கள்

இரண்டு கால பூஜைகள்

### திருவிழாக்கள்

பங்குனி உத்திரம், கந்த ஷஷ்டி, சூரசம்ஹார திருவிழா மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

### கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்

மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை


அலுவலக முகவரி

செயல் அலுவலர்,

அருள்மிகு சுப்ரமணியஸ்வாமி திருக்கோயில்,

காராமணிக்குப்பம், கடலூர்.

# அருள்மிகு ஐந்து கிணற்று அம்மன் திருக்கோயில்
# கடலூர் முதுநகர்



## திருக்கோயில் அமைவிடம்

கடலூரிலிருந்து சிதம்பரம் செல்லும் சாலையில் கடலூர் முதுநகரில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

அருள்மிகு ஐந்து கிணற்று அம்மன்

## தல வரலாறு

கடலூர் துறைமுக நகர், ஒரு நாள் சில பூசாரிகள் வழிபாட்டிற்குச் சென்று வரும் வழியில் (சென்ற இடம் வண்டிப்பாளையம்) நல்ல தண்ணீர் குளத்தில் எல்லோரும் குளித்துச் சென்றார்கள். அதற்குப் பிறகு ஒரு பூசாரி மட்டும் கடைசியில் செல்லும் பொழுது என்னை எடுத்துச் செல் என்ற குரல் ஒலிக்கவே பூசாரி திரும்பிப் பார்த்த பொழுது அங்கே யாரும் இல்லை. அப்போது அவர் மட்டும் தனித்திருந்தார். மறுபடியும் பத்தடி தூரம் தள்ளி வரவும் என்னைத் தூக்கிக்கொண்டு போ என மீண்டும் ஒலிக்கத் திரும்பி பார்த்த பொழுது மறுபடியும் யாரும்

இல்லை. மூன்றாவது தடவையாக மீண்டும் குரல் ஒலித்தது. பூசாரி திரும்பி அக்குளத்தங்கரைக்குச் சென்று நின்றவுடன் நான் இங்குதான் இருக்கிறேன் என்று சொல்கிறாயே, ஆனால் என் பார்வைக்குத் தெரியவில்லையே எனச் சொல்லவும் ஒரு கல்லின் கீழிருந்து ஒரு பாம்பு வெளிப்பட்டு அவர் மேல் தவழ்ந்துகொண்டது. பிறகு மற்ற பூசாரிகளைச் சந்தித்து நடந்த நிகழ்ச்சிகளைக் கூறினார். பிறகு அந்த இடத்தில் சென்று அக்கல்லைப் பார்த்தார்கள். அது சலவையாளர் துணி துவைத்த கல்லாக உள்ளதே என நினைத்து அவர்கள் அதிர்ச்சியடைந்தார்கள். அக்கல்லைப் புரட்டியபோது அம்மன் திருவுருவம் சரியாக இருந்தது.

உடன் வந்த பூசாரிகளோடு அம்மனை எங்கு கொண்டுபோய் வைப்பது என்று எண்ணிக்கொண்டு இருக்கும்போது பாம்பு கழுத்திலிருந்து இறங்கிவிட்டது. இறங்கி நல்ல தண்ணீர் குளத்திற்குக் கிழக்கே சென்று தெற்கே திரும்பி நிறுவ வேண்டிய இடத்தில் வந்து கிழக்கே நோக்கி நின்றுவிட்டது. அதன் பின்னால் வந்தவர்கள் அம்மன் சிலையை அங்கேயே நிறுவிவிட்டார்கள்.

இப்போது திருக்கோயில் உள்ள இடம் முள் நிறைந்த காடாக இருந்நது. இந்த இடத்தில் பாம்பு மையம் கொண்டு மூன்று முறை படத்தால் அடித்தது. உடனே செங்கற்களை அடுக்கிவைத்து அதன்மேல் அம்மனை வைத்தார்கள். இந்த இடத்தில் உள்ளே வருவதற்கு அச்சமாக இருக்குமாம், பூசாரிகள் மட்டும் வருவார்கள், போவார்கள்.

ஓர் அம்மையார் மட்டும் விளக்கேற்றி வைத்து வழிபட வந்து போவார்கள். தொடர்ந்து வழிபாடு செய்துகொண்டு இருந்தார்கள்.

பூசாரிகள் ஒன்றுகூடி அங்கே கோயில் எழுப்புவது குறித்து சிந்தித்தார்கள். இந்த இடத்தில் பொய்கை ஒன்று இருந்தது. இந்தப் பொய்கையில் எப்படி கோயில் கட்டுவது என்று சிந்தித்தார்கள். நான்கு மூலைகளிலும் கிணறுகள் அமைத்து அதன் மேலே கருங்கல்லைப் போட்டு மூடி நான்கு பக்கமும் மதிலை

எழுப்பிவிட்டார்கள். அம்மன் கருவறை மையத்தில் ஒரு கிணற்றை அமைத்து அதனை மூடி அதன் மேலே அம்மன் சிலையை நிறுவினார்கள். (அன்றிலிருந்து சிறப்போடு ஐந்து கிணற்றம்மன்) நான்கு கிணறுகள் சூழ்ந்து நடுவில் உள்ள ஒரு கிணற்றில் எழுந்தருளியதால் ஐந்து கிணற்றம்மன் எனப்பெயர் பெற்று இத்திருத்தலம் சிறப்புப்பெற்று வருகிறது. இத்தாயின் அருள் பெற்ற பக்தர்கள் அருளைப்பெற துடிக்கின்ற பக்தர்கள் பெருகிக்கொண்டே வருகிறார்கள் என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாகும். ஐம்பூதங்களை அடக்கி ஆள்வதாலே (ஐந்து கிணற்றம்மனாக) அம்பாள் இங்கே வீற்றிருக்கிறாள்.

## திருவிழா

ஆடிமாதத்தில் நடைபெறுகின்ற செடல் திருவிழா மிகவும் சிறப்பாக நடைபெறுகிறது. செடல் திருவிழாவிற்கு சுமார் 1 லட்சம் பேர் ஒரே நாளில் அம்மனை வழிபடுகின்றனர்.

## கோயில் திறந்திருக்கும் நேரம்

காலை 7.00 மணி முதல் மதியம் 12 மணி வரையில்
மாலையில் 4.00 மணி முதல் இரவு 8 மணி வரை

அலுவலக முகவரி
செயல் அலுவலர்,
அருள்மிகு ஐந்து கிணற்று மாரியம்மன் திருக்கோயில்,
கடலூர் முதுநகர்.

# அருள்மிகு கிளியாளம்மன் திருக்கோயில்
# பெரியகுமட்டி




## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் – சிதம்பரம் சாலையில் கடலூரிலிருந்து சுமார் 25 கி.மீ. தூரத்தில் பெரியகுமட்டி கிராமத்தில் அருள்மிகு கிளியாலம்மன் திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவி பெயர்

அருள்மிகு கிளியாளம்மன்

## தல சிறப்பு

பெரியகுமட்டி கிராமத்தைச் சுற்றியுள்ள சுமார் 20 கிராம மக்களின் பிரார்த்தனை தலமாக விளங்கி வருகிறது. பிரதி வருடம் ஆடி மாதத்தில் பிரம்மோற்சவம் நடைபெறுகிறது. சாலை வழியே செல்லும் கார், வேன், பேருந்துகள், லாரிகள் போன்ற வாகனங்களும், பயணிகளும் இத்திருக்கோயிலுக்கு எதிரே நின்று அம்மன் தரிசனம் செய்து அருள் பெறுகின்றனர்.

# அருள்மிகு வெள்ளிப்பிள்ளையார் (எ) அற்புத விநாயகர் திருக்கோயில் இராஜாமுதலிசாவடி–கடலூர்



## அமைவிடம்

கடலூர் நகரிலிருந்து சிதம்பரம் செல்லும் பிரதான சாலையில் செல்லங்குப்பம் கிராமத்தில் இத்திருக்கோயில் அமைந்துள்ளது.

## இறைவன் பெயர்

அருள்மிகு அற்புத விநாயகர்

## வரலாற்றுச் சிறப்பு

இவ்வாலயம் 18ம்நூற்றாண்டின் மத்தியில் பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்தில் கடலூரில் செயின்ட் ஜார்ஜ்கோட்டையைக் கட்டுவதற்காக வந்தபோது முதலியார் வகுப்பைச் சேர்ந்த செவ்வண்ண மேஸ்திரி, சரவண மேஸ்திரி என்பவர்கள் இங்கு வந்து குடியேறச்செய்து அவர்கள் மூலம் அக்கோட்டை கட்டப்பட்டதாகவும் அதற்குக் காரணமாகப் பல ஏக்கர் நிலங்கள் மேற்படி கிராமத்தில் வழங்கப்பட்டதாகவும், அவற்றிலிருந்து அற்புத

விநாயகர் கோயில் புதுப்பிக்கப் பட்டதாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் நகரத்தார் என்று அழைக்கப்படும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் திருப்பாதிரிப்புலியூர் அருள்மிகு பாடலேஸ்வரர் திருக்கோயில் திருப்பணி செய்தபோது இத்திருக்கோயிலின் முன் மண்டபத்தைக் கருங்கல்லால் கட்டினார்கள் என்று கூறப்படுகிறது. வடலூர் வள்ளலா



ர் இராமலிங்க அடிகளார் கடலூர் செஷன்ஸ் நீதிமன்றத்தில் ஒரு வழக்கை சந்தித்தபோது வழக்கு நடைபெறும் நாள்களில் வடலூரிலிருந்து கடலூர் நடந்தே வருவார் என்றும், வரும் வழியில் இத்திருக்கோயிலை வலம் வந்து விநாயகப் பெருமானைத் தரிசித்துப் பாடிச்செல்வார் என்றும், வரலாறு கூறுகிறது.

### திருவிழாக்கள்

விநாயகர் சதுர்த்தி திருவிழா, வைகாசி வசந்த உற்சவம் 11 நாட்கள் இத்திருக்கோயிலின் திருவிழாக்களாகும்.


அலுவலக முகவரி

செயல் அலுவலர்

அருள்மிகு அற்புத விநாயகர் திருக்கோயில்,

ராஜாமுதலி சாவடி, கடலூர்.


## ஆனந்த வாழ்வமைய அறிந்து கொள்ள வேண்டியவை...

| | | |
|---|---|---|
| உணர வேண்டியது | – | உண்மை |
| ஆதரிக்க வேண்டியது | – | தூய ஆடை |
| அடைய வேண்டியது | – | ஆனந்தம் |
| அகற்ற வேண்டியது | – | கோபம் |
| வாங்க வேண்டியது | – | நற்பெயர் |
| காக்க வேண்டியது | – | மானம் |
| கேட்க வேண்டியது | – | வரம் |
| கொடுக்க வேண்டியது | – | அன்னம் |
| செய்ய வேண்டியது | – | தர்மம் |
| துலக்க வேண்டியது | – | அறிவு |
| நினைக்க வேண்டியது | – | நன்றி |
| படிக்க வேண்டியது | – | பலநூல் |
| பயில வேண்டியது | – | தொழில் |
| பெருக்க வேண்டியது | – | அன்பு |
| பெற வேண்டியது | – | அருள் |
| பேச வேண்டியது | – | இனிய சொற்கள் |

# அருள்மிகு திருமூலநாதசுவாமி திருக்கோயில் திருமூலஸ்தானம்.



## திருக்கோயில் அமைவிடம்

கடலூர் மாவட்டம், சிதம்பரத்திலிருந்து தென்மேற்கே 26 கி.மீ. தூரத்தில் உள்ளது காட்டுமன்னார்கோயில். இதிலிருந்து கிழக்கே 2 கி.மீ. தூரத்தில் புண்ணிய சிவத்தலமான திருமூலஸ்தானம் அமைந்துள்ளது. மிக மிக அருகாமையில் திருநாரையூர், சதுர்வேதமங்கலம், கானாட்டுமுள்ளூர் உள்ளன.

## தலத்தின் வரலாறு

திருமந்திரம் படைத்த திருமூலர் சிதம்பரம், திருவிடைமருதூர் செல்லும் வழியில் இந்தத் தலத்தில் பலகாலம் தங்கி, இங்கு உறைந்துள்ள சிவபெருமானை வணங்கியுள்ளார். திருமூலர் வணங்கியதால் இந்த சிவனாருக்கு திருமூலநாதர் எனப் பெயராயிற்று.

## தலத்தின் சிறப்பு

இங்குள்ள திருமூலநாதர் நோய் தீர்க்கும் ஆண்டவனாக

உள்ளார். 3 முழ அளவே உள்ள சிவலிங்கத் திருமேனி ஆகம முறைப்படி நோய் தீர்க்கவே அமைந்துள்ளது இத்தலத்தின் தனிச் சிறப்பாகும்.

### சனி தோஷம் நீங்கும்

இங்கு சனீஸ்வரன் விநாயகரைப் பிடிக்க வரும்போது, விநாயகப்பெருமான் தெற்கு முகமாக அமர, அது முடியாமல் போகவே சனீஸ்வரனும் அருகில் அமர்ந்து காட்சியளிப்பதால், இருவரையும் ஒன்றுசேர்த்து வணங்கும் பேறு இத்தலத்தை வணங்குவோர்க்குக் கிடைப்பது இத்தலத்திற்கே உண்டு. இதனால் இங்கு வந்து வணங்குவோரின் தோஷங்கள் யாவும் பனிபோல் நீங்குகிறது. இதனால் இத்தலம் “சின்ன திருநள்ளாறு” எனச் சிறப்பும் பெற்றுள்ளது.

### சூரிய ஒளி சிவலிங்கத்தின் மீது விழும்

ஆண்டின் சித்திரை முதல் வாரத்தில் சூரிய ஒளி அதிகாலையில் சிவலிங்கத் திருமேனியின் மீது விழுவதைக் காண்பது நாம் பிறந்த பயனாகும். எனவே, சூரியனும் திருமூலநாதரை வணங்கும் தலமாக இது அமைந்துள்ளது.



### மற்ற பிறச்சிறப்புகள்

அரக்கியை அழித்ததால் இங்குள்ள விநாயகப்பெருமானுக்கு ’கொடுங்கோல் ஒழித்த கணபதி’ எனப் பெயர் உண்டு. மேலும், இங்குதான் விநாயகப்பெருமான் திருமணக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். முப்பெரும்



தேவியர்களான, துர்க்கை, இலக்குமி, சரஸ்வதி ஆகியோர் சேர்ந்து இன்னல்களைத் தீர்க்க திருமூலநாதரை வணங்குகின்ற தலம் திருமூலஸ்தானமாகும்.

திருமூலர் ஏகநாதனை வணங்குவது போன்றதொரு புடைப்புச் சிற்பம் இத்திருக்கோயிலின் தெற்கு வெளிப்புறச் சுவற்றில் வடிக்கப்பட்டுள்ளது.



இதுவே திருமூலர் இங்கு தங்கி வணங்கி வாழ்ந்தார் என்பதற்குச் சான்றாக அமைந்து உள்ளது.

## கல்வெட்டுகளும் வரலாறும்

இருபதுக்கும் மேற்பட்டக் கல்வெட்டுகள் கருவறையின் வெளிப்புறச் சுவர்களில் வடக்கிலும் தெற்கிலும் கிரந்த எழுத்துக்களால் அமைந்துள்ளன.

கி.பி. 710 – ஆம் ஆண்டு பழையாறையைத் தலைநகரமாகக் கொண்ட 'நுசசோழன்' என்பவன் இக்கோயிலைக் கட்டியுள்ளான். இவன் மனைவி 'சசது கவியேரை' என்பவள் ஆவாள். ஏகநாதன் எனத் திருமூலநாதருக்கு மற்றும் ஒரு பெயருண்டு.

இக்கோயில் கட்டிமுடித்து இன்றைக்கு 1288 ஆண்டுகள் ஆகியுள்ளன. இக்கோயில் கொகுடிக் கோயில் வகையைச் சேர்ந்தது. இது ஒரு கற்றளி கோயிலாகும்.

## கட்டிடமும் சிற்பங்களும்

முற்கால சோழர்களின் கட்டிடக்கலைக்கு இங்குள்ள விநாயகப் பெருமான் தனிக்கோயில் ஓர் எடுத்துக்காட்டு மிக வழுவழுப்பான சிற்பங்கள் யாவும் 7–ஆம் நூற்றாண்டு படைப்பின் இனியவையாகும்.

## பூஜைகள்

நான்கு கால பூஜைகள் தவறாது சைவச் சிவாச்சாரியார்களால் முறைப்படி நாளும் நடந்தேறி வருகின்றன.

இத்தகைய சிறப்புடைய இந்தத் தலத்திற்கு திருமூலநாதர்



# திருக்கோயில்கள் தாங்கி நிற்கும் எழில் கலைகள் பட தொகுப்பு

ஸ்ரீமுஷ்ணம், அருள்மிக பூவராக சுவாமி திருக்கோயிலில் உள்ள கலைநயம்மிக்க சிற்பங்கள்





## திருவதிகை, அருள்மிகு வீரட்டானேஸ்வரர் திருக்கோயிலில் உள்ள கலைநயமிக்க சிற்பங்கள்



பரதக்கலையின் பலவித பாவனைகள்

# கடலூர் மாவட்டத்தில் அன்னதான திட்டம் நடைபெறும் திருக்கோயில்கள்

| வ. எண் | திருக்கோயில் பெயர் மற்றும் முகவரி | உணவருந்துவோர் எண்ணிக்கை |
|---|---|---|
| 1 | அருள்மிகு பாடலீஸ்வரர் திருக்கோயில், திருப்பாதிரிப்புலியூர் | 100 |
| 2 | அருள்மிகு தேவநாதசுவாமி திருக்கோயில் திருவகீந்திரபுரம் | 100 |
| 3 | அருள்மிகு தில்லைக்காளியம்மன் திருக்கோயில், சிதம்பரம் நகர் | 100 |
| 4 | அருள்மிகு கொளஞ்சியப்பர் திருக்கோயில், மணவாளநல்லூர் | 50 |
| 5 | அருள்மிகு விருத்தகிரீஸ்வரர் திருக்கோயில், விருத்தாசலம் நகர் | 50 |
| 6 | அருள்மிகு இராஜகோபாலசுவாமி திருக்கோயில், புதுப்பாளையம் | 50 |
| 7 | அருள்மிகு வீர ஆஞ்சநேயசுவாமி திருக்கோயில், திருப்பாதிரிப்புலியூர் | 50 |
| 8 | அருள்மிகு லட்சுமி நரசிம்மசுவாமி திருக்கோயில், சிங்கிரிகுடி | 50 |
| 9 | அருள்மிகு பிரளயகாலேஸ்வரர் திருக்கோயில், பெண்ணாடம் | 50 |
| 10 | அருள்மிகு புத்துமாரியம்மன் திருக்கோயில், குறிஞ்சிப்பாடி நகர் | 50 |
| 11 | அருள்மிகு பூவராகசுவாமி திருக்கோயில், ஸ்ரீமுஷ்ணம் | 50 |
| 12 | அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயில், திட்டக்குடி நகர் | 50 |
| 13 | அருள்மிகு வரதராஜபெருமாள் திருக்கோயில், திருப்பாதிரிப்புலியூர் | 50 |
| 14 | அருள்மிகு வீரட்டேஸ்வரர் திருக்கோயில் திருவதிகை | 50 |
| 15 | அருள்மிகு முத்தையாசுவாமி திருக்கோயில், பெருமுளை | 50 |
| 16 | அருள்மிகு சிவசுப்ரமணியசுவாமி திருக்கோயில், வேலுடையான்பட்டு | 50 |

**மேலே குறிப்பிடப்பட்டுள்ள திருக்கோயில்களில் பக்தர்கள் தங்களது பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகள் பிறந்த நாள் போன்ற முக்கியமான தினங்களில் 100 பேருக்கு ரூ.2000/–ம் 50 பேருக்கு ரூ.1000/–ம் செலுத்தினால் குறிப்பிட்ட அந்த நாளில் அன்னதானம் செய்யப்படும்.**

## ஒரு கால பூஜை நிதியுதவித் திட்டம்

ஒரு காலத்திற்குக் கூட பூஜை செய்ய இயலாத நிலையில் உள்ள கோயில்களுக்கு ஒரு காலமாவது பூஜை நடைபெற வேண்டும் என்று மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களால் 2002ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்டது. இத்திட்டத்தின்படி அரசு பங்களிப்பு ரூ.90,000–ம் பொதுமக்கள் பங்களிப்பு ரூ.10,000/–ஆக மொத்தம் ரூ.1 லட்சம் முதலீடு செய்யப்பட்டு அதில் பெறப்படும் வட்டியை கொண்டு இத்திட்டம் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

கடலூர் மாவட்டத்தில் 441 திருக்கோயில்களில் ஒரு கால பூஜை திட்டம் செயல்படுத்தப்படுகிறது.

இத்திட்டத்தில் இணைய விரும்பும் திருக்கோயில்கள் ரூ.10,000/–க்கான வரைவோலையை இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் பெயருக்கு எடுத்து, சரக ஆய்வர் பரிந்துரையுடன் உரிய உதவி ஆணையரிடம் சமர்ப்பிக்க வேண்டும்.

## கிராமப்புற திருப்பணி நிதியுதவித் திட்டம்

இந்து சமய அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ள கிராமப்புறங்களில் அமைந்துள்ள ஒவ்வொரு திருக்கோயிலுக்கும் திருப்பணி செய்யும் பொருட்டு ரூ. 50,000 வீதம் நிதியுதவி, மாண்புமிகு தமிழக முதல்வர் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.

## ஆதிதிராவிடர், பழங்குடியினர் வசிக்கும் பகுதி திருக்கோயில்கள் திருப்பணி நிதியுதவித் திட்டம்

இந்து சமய அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் இல்லாத ஆதி திராவிட, பழங்குடியின மக்கள் வசிக்கும் பகுதியில் அமைந்துள்ள திருக்கோயில்களுக்கு திருப்பணி செய்யும் பொருட்டு ரூபாய் 50,000 வீதம் நிதியுதவி, மாண்புமிகு தமிழக முதல்வர் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.

## கிராமக்கோயில் பூசாரிகள் ஓய்வூதியத் திட்டம்

அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் இல்லாத திருக்கோயில்களில் 20 வருடம் பணிபுரிந்து 60 வயது பூர்த்தி அடைந்திருக்கும் பூசாரிகளுக்கு மாதந்தோறும் ரூ.1,000 ஓய்வூதியம் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் ஆணைப்படி வழங்கப்பட்டு வருகிறது.